உ

சிவமயம்

# சேக்கிழாரும் சேயிழையார்களும்


ஆசிரியர் :

**சம்பந்த சரணாலயத் தம்பிரான்**

[சிவக்கவிமணி—C. K. சுப்பிரமணிய முதலியார், பி. ஏ.]


சிறப்புரை :

**உயர்திரு. அ. உத்தண்டராமபிள்ளை அவர்கள், B.A., B.L., I.A.S.,**

*சென்னை மாநில அறநிலையப் பாதுகாப்பு ஆணையாளர்.*


வெளியீடு :

**ஸ்ரீ சென்ன மல்லீசுவரர்—ஸ்ரீ சென்னகேசவப் பெருமாள்**

தேவஸ்தானம், தேவராஜ முதலி தெரு, சென்னை-3

**மணலி-இராமகிருஷ்ண முதலியார், B.A., அவர்கள்**

ஷை தேவஸ்தான பரம்பரை தர்மகர்த்தர்

**L. P. கந்தசாமிப் பிள்ளை**

ஷை தேவஸ்தான மானேஜர்





1960

விலை ரூ. 1-50

சென்னை அறநிலையப் பாதுகாப்புத்துறை ஆணையாளர்

உயர்திரு - உத்தண்டராம பிள்ளை B.A., B.L., I.A.S.

அவர்கள் அருளிய

# சிறப்புரை

'தத்துமூ தெயில்மூன்றும் தழலெழ
முத்து மூரன்முகிழத்த நிராமய
சித்துமுத்தி தன்தாளினை சேர்அறு
பத்துமூவர் பதமலர் போற்றுவாம்'

சைவ சமய நாயன்மார்கள் அறுபத்துமூவர், தொகை யடியாராகப் போற்றப் பெறுவர் ஒன்பது திருக்கூட்டத்தினர். இவர்களின் வரலாறுகளைத் தொகுத்துரைப்பது திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமாகும். இறைவன்பால் அன்புசெலுத்தி வீடெய்திய மெய்த் தொண்டர்களாகிய பெரியர் வரலாறுகூறும் புராணம் பெரிய புராணமென விளங்குகிறது. இணையற்ற இனிய எளிய தெள்ளிய செந்தமிழ் நடையிலும், பொருளமைப் போடும் இயற்றப்பட்டுள்ள இப் புராணத்தைத் தமிழ்ப் பெருங் காப்பியமாகவும் இதிகாசமாகவும் ஒப்பற்ற ஞான நூலாகவும் கருதுகிறோம். சைவ சாத்திரங்களுள் மூல ஞானநூலாக அமைந்த சிவஞானபோதம் 12-ம் சூத்திரத்துக்கு இலக்கான 12-ம் திருமுறையாக உள்ள பெரிய புராணத்திற்குப் பேருரை உதவி சிவக்கவிமணி என்னும் பட்டமும் சம்பந்த சரணாலயத்தம்பிரான் என்னும் துறவிக் கோலம் கொண்டபின் ஏற்றுள்ள பெயரும் கொண்டு விளங்கும் கோவை உயர்திரு - சி. கே. சுப்பிரமணிய

முதலியார் என்னும் பெரியார் பலகாலம் பயின்றும் பல கோணங்களில் நுணுகி ஆராய்ந்தும் அவ்வாராய்ச்சியின் பயனைப் புதுப்புதுக் கருத்துக்களையும் விளக்கங்களையும் தமிழுலகத்துக்குக் கொடுத்துக்கொண்டே யிருக்கின்றனர். **வாகீசர் அல்லது மெய்யுணர்தல்** என்ற ஆராய்ச்சிநூல் சில மாதங்களுக்கு முன்பு திருப்புகலூர் தேவஸ்தான ஆதரவில் வெளியிடப்பெற்றது. இப்போது வெளிவரும் **சேக்கிழாரும் சேயிழையார்களும்** என்னும் ஆராய்ச்சி நூல் பெரிய புராண வரலாறுகளில் இடம்பெற்ற 37 மங்கையரின் மாண்பினை எடுத்துக்காட்டும் வகையில் அமைந்துள்ளது. இந்நூலை வெளியிட முன்வந்துள்ள சென்னமல்லீசுவரர், சென்ன கேசவப் பெருமாள் தேவஸ்தான பரம்பரை தர்மகர்த்தர் மணலி - திரு. இராமகிருஷ்ண முதலியார் வயதில் இளைஞராயினும் பண்பாட்டிலும் அறிவிலும் அன்பிலும் இறைத்தொண்டிலும் மிக்க ஆர்வமும் ஊக்கமும் கொண்டவர். அவருக்குத் தமிழுலகம் பெரிதும் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டுள்ளது.

பெரியபுராணத்தில் மாதர்கள் பல துறையிலும் மனையறத்தின் வேர் எனத் திகழ்ந்த மாட்சியும், ஒவ்வொரு நிகழ்ச்சியின் உள்ளுறை விளக்கமும், தன் வாழ்க்கையையே பெரியபுராண ஆராய்ச்சிக்கு அர்ப்பணித்துள்ள இந்நூலாசிரியரால் மிகவும் தெளிவாகவும் சிறப்பாகப் பெண்கள் கற்றுப் பயன்பெறும் வகையிலும் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. பெரிய புராணத்தில் இல்லறவாழ்க்கையே வற்புறுத்தப்பட்டிருக்கக் காண்கிறோம். அப்பர் சுவாமிகள் திலகவதியார் துணைக்கொண்டு சமண மதத்தினின்றும் மீண்டும் சைவநெறி நின்று அப்பூதியடிகள் முதலியோரின் தொடர்புகொண்டு திருத்தொண்டு பரப்பிய வரலாறும், உண்மையடியார்கள் இல் வாழ்வாருடன் தொடர்புடனேயே வாழ்ந்தனர் என்பதை வலியுறுத்தும். பெரியபுராணத்தில் வரும் நங்கையர் நல்ல தாய்மார்களாக

வும், நல்ல மனைவியராகவும் நல்ல உறவினர்களாகவும் நன் மக்களாகவும் நல்ல பணிப்பெண்களாகவும் கற்பொழுக் கத்திற் சிறந்தவர்களாகத் திகழ்ந்தனரென்பது இந்நூலில் தெளிவாக விளக்கப் பட்டுள்ளது.

பெரிய புராணத்தில் போற்றப்பெறும் சேயிழையா ருள் முதன்மையாக இவ்வாசிரியர் உமாதேவியாரையே குறிப்பிட்டுள்ளார். திருக்குறிப்புத் தொண்டர்புராணத்தில் காஞ்சி வர்ணனையில் காமாட்சியம்மையின் அறம்வளர்த்த திறத்தையும் தவத்தையும் பூசனையையும் விளக்கி மக்கள் நலம்பெற அறமும் தவமும் பூசனையும் செய்யத்தக்க முறை யைத் தானே செய்துகாட்டிய வரலாற்றைக் கூறியுள்ளார்.

'எண்ணி லாகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை எனஉரைத் தருள
அண்ண லார்தமை யருச்சனை புரியஆ தரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து

என்பது சேக்கிழார் அருள்வாக்கு.

'கற்பெனப்படுவது கணவன் சொல்வழி நிற்றல்'

என்னும் உண்மையைக் காட்டக் கணவனையே தெய்வமா கக் கொண்டொழுகிய இயற்பகைநாயனாரின் மனைவியாரும் கலிய நாயனாரின் மனைவியாரும் உதாரணங்களாக உள்ள னர். கணவன் தன்னை யடியவருக்குக் கொடுத்தனன் என்று சொன்னமாத்திரத்தில் "திகைத்து நின்றனள் திரு வினும் பெரியாள்" என்ற சேக்கிழார் வாக்கில் உடல் நலத்தால் திருமடந்தையை ஒத்தவள் உள நலத்தால் அவளினும் மேம்பட்டவள் என்ற கருத்தைக் காண்கிறோம். சுற்றத்தாரை இயற்பகையார் வீழ்த்தி அடியவரைக் காத்த போது 'இறைவனே அஞ்சவேண்டா இயற்பகை வெல்லும்' என்றமையால் அடியவரை இறைவனாகவே கருதினாரென்பது தெளிவு.

'மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்
ஆலயந்தானும் அரனெனத் தொழுமே'

என்ற சிவஞானபோதம் 12-ம் சூத்திரக் கருத்தை இங்கு நன்குணர்கிறோம். 'நண்ணிய மனைவியோடு நம்முடன் போதுகென்று' உமாமகேசுவரர் அருள இறைவன்பால் ஒத்த அன்பினரான இருவரும் சிவபதமெய்தினரென்பது வரலாறு.

திருநீல கண்டத்தின்மேல் ஆணையிட்டு "எம்மைத் தொடாதீர்" என்று ஊடிய காரணத்தால் திருநீலகண்ட நாயனாரும் அவரது மனைவியாரும் துறவுபூண்டதுமன்றி உற்றார் உறவினர் ஊரார் யாரும் அறியாவகையில் 'அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாமை வாழ்ந்தார்' என்பது பெரிதும் வியக்கற்பாலது. 'மாதுசொன்ன சூளால் இளமை துறக்கவல்லேன் அல்லேன்' என்று பட்டினத்தடிகளால் போற்றப் பெற்றனர்.

இளையான்குடிமாற நாயனார் மனைவியார் தம் கணவருக்கு உறுதுணையாக இருந்து இக்கட்டான நிலைமையிலும் நல்லமைச்சர்போன்று அடியார்க்கு அமுதுசெய்ய செந்நெல் முளை வாரிவரச்செய்து குறும்பயிர்கொண்டு கறிகள் அமுதாக்கி வீட்டுக் கூறையினின்று கட்டைகளைப் பிடுங்கி விறகெரித்ததன்மூலம் விருந்தோம்பலில் அவ்விருவரும் கொண்ட அளப்பிலா ஆர்வத்தையும் பண்பையும் உலகுக்குக் காட்டி 'அன்பனே அன்பர்பூசை அளித்த நீ அணங்கினோடும் என்பெரும் உலகம் எய்தி' என்றருளினார் உமா மகேசர்.

குங்கிலியக்கலய நாயனார் மனைவியார் வறுமையுற்ற போதும் கணவன் இறைபணிக்காகத் தமது திருமங்கல நாணை விற்கவேண்டிய நிலை ஏற்பட்டபோதும் வருந்தாமல் இறையருளால் பெருஞ்செல்வம் வந்துற்றபோதும் 'அல்லொத்த கண்டன் எம்மான் அருள்தரவந்தது' என அமைஞ்

திருந்ததைக் காண அவரது கற்பும் பண்பும் எத்துணைச் சிறப்புவாய்ந்தது என்று உணருகிறோம்.

அரிவாட்டாய நாயனார் மனைவியார் பசியால் வருந்திய போதும் கணவன் பின் ஆனந்தும் ஏந்திச் சென்று துணை புரிந்தமையால் சிவபெருமான்,

‘ நன்றுநீ புரிந்தசெய்கை நன்னுத லுடனேகூட
என்று நம்முலகில் வாழ்வாய் ’

என்று அருள்புரிந்தார்.

அப்பூதியடிகள் மனைவியார் புதல்வன் அரவம் தீண்டி இறந்ததையும் பொருட்படுத்தாது அப்பர் சுவாமிகளுக்கு அமுதுசெய்விக்கும் தொண்டினையே முதற்கடனாகக் கருதியதும், ஏயர்கோன் கலிக்காமநாயனார் மனைவியாரும் மணப் பருவத்தில் மணக்கோலம்பூணும் சமயத்திலும் தன் தந்தையார் மானக்கஞ்சாறரிடம் அவள் திருமுடி பஞ்சவடிக்காமென்று அடியவர் கோலத்தில்வந்து கேட்ட இறைவருக்கு உவப்புடன் கொடுத்ததும், பின் சுந்தரருடன் பிணக்குண்டு தன் கணவனார் உயிர் நீத்ததைமறைத்து தன் வருத்தத்தையும் அடக்கிச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைச் சிறப்பாக வரவேற்ற அரியசெயலும் அடியார் பணியில் கணவருடன் அக்காலப் பெண்டிர் எவ்வளவு ஒன்றியிருந்து பணியாற்றினர் என்பதைக் காட்டுகின்றன. ‘ வாளால் மகவரிந் தூட்டவல்லே னல்லேன் ’ என்று முற்றத்துறந்த முனிவர் பட்டினத்தடிகளால் புகழப்பெற்ற சிறுத்தொண்டர் மனைவியார் திருவெண்காட்டு நங்கை கணவனோடு ஒத்து அடியார் திருத்தொண்டில் மனவருத்தமின்றி ஈடுபட்ட பண்பும், பைரவர் மகனையழைக்கச் சொன்னபோது சிவனாரடியார் அழைக்கின்றாரென்று ஓலமிட்டு மகன் வந்ததும் அடியார் உணவுகொள்ளத் தடையிலது என்று மகிழ்ந்ததும் இறைவன் சோமாஸ்கந்தக் கோலத்தில்வந்து

அருள்புரிந்ததும் தனிச்சிறப்பாகும். வேறெந்த நாயனார்க்கும் இக் கோலத்தில் காட்சியளிக்கவில்லை.

திருநீலநக்க நாயனாரின் மனைவியார் தன் கணவருடன் பூசையில் துணை புரிந்துகொண்டிருந்த சமயம் இறைவன் மீது ஒரு சிலந்தி விழுந்ததுகண்டு அன்பின் மேலீட்டினால் ஊதித் துமிந்ததும் கணவன் வெகுண்டு தண்டித்தபோது இறைவர் கனவில்தோன்றி அவ்வம்மையார் ஊதித்துமிந்த இடம் தவிர திருமேனிமுழுதும் கொப்புளம்போலக் காட்சியளித்து அவ்வம்மையாரின் அன்பின் மாட்சியை உலகறியச் செய்தார்.

உலக மாதாவாகிய உமாதேவியார் மக்கள் பயன் பெறுமாறு அறமும் தவமும் பூசனையும் செய்துகாட்டியும் சிவபெருமானின் சத்தியாய் உடனிருந்து அருள்பாலித்ததையும் விளக்கிய இந்நூலாசிரியர் சுந்தரமூர்த்தி சுவாமிகளை உலகுக்குத் தந்த இசை ஞானியார், திருஞான சம்பந்தரை ஈன்ற பகவதியார், அப்பர் பெருமானையும் திலகவதியாரையும் பெற்ற மாதினியார், கண்ணப்பரை ஈன்ற தத்தை, சண்டேசுரரைப் பெற்ற பவித்திரையாகியோர் மாண்பினையும் நன்கு விளக்கியுள்ளார்.

திருவானைக்காவில் முற்பிறப்பில் சிலந்தியாயிருந்து இறைவன் திருமேனியில் இலை சருகுகள் விழாமல் நூலால் வலையமைத்து வழிபட்டதன் பயனாக சோழ அரசி கமலவதியார் கருவில் வளர்ந்தபோது பெரியோர்கள் அக் குழந்தை ஒரு நாழிகை கழித்துப் பிறந்தால் மூவுலகும் ஆளும் பேரரசனாகத் திகழ்வான் என்றதால் தன் கால்களைத் தூக்கிக்கட்டிக் குறித்த நாழிகையில் மகவை ஈன்று தன் உயிர் போகுந் தறுவாயில் குழந்தையின் கண்களில் இரத்தம் இறங்கிச் சிவந்திருந்ததைக் கண்டு 'கோச்செங்கணா' என்று கூறித் தன் உயிரையே தியாகம் செய்தது செயற்கரிய தியாகச் செயல். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர் வரிசையில் சிறந்தஇடம் இவ்வம்மையாருக்குரியது.

மேலும் இந்நூலில் கண்ணப்ப நாயனார் தந்தை நாகன் ஆதரவில் வேடர் சேரியில் குறிஞ்சிக் கடவுளாகிய முருகன் கோயில் பெண் பூசாரியான தேவராட்டியைப் பற்றியும், திருவெண்காட்டு நங்கையின் தாதியார் சந்தன நங்கை பயிரவரை மாதவரென்று உணர்ந்து பிள்ளைக்கறி கேட்டவர் தலையிறைச்சியையும் கேட்கலாமென யூகித்தறிந்து அதையும் கறி சமைத்துவைத்துத் தன் தலைவியாருக்கும் அவர் குடும்பத்துக்கும் பெருந்தொண்டு புரிந்து சோமாஸ்கந்தர் காட்சியும் அருளும் பெற்ற வரலாறும் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன.

அக்காலத்துத் தமிழ்நாட்டு மங்கையர் கற்பொழுக்கம் மிகத் தெளிவாகப் பலவிடங்களில் விளக்கப்பெற்றுள்ளது. சடங்கவி சிவாச்சாரியார் மகள் மணவினை தடைப்பட்ட போதிலும் சுந்தரரையே நினைத்து வாழ்ந்ததும், திலகவதியார் தனக்கெனப் பெற்றோரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற கலிப்பகையார் போரில் உயிர் நீத்ததும் தானும் உயிர்விடத் துணிந்ததும் தம்பியாருளராகச் சிவத் தொண்டு செய்து வாழ்ந்து அப்பரைச் சமண சமயத்தினின்றும் மீட்டுத் தொண்டை நாட்டிலும் நடுநாட்டிலும் சோழ நாட்டிலும் சைவத்தை நிலைநாட்டிய பெருமையையும், சிவநேசச் செட்டியார் தம்மகள்பூம்பாவையைச் சம்பந்தருக்கென்றே வளர்த்துப் பின் அரவம் தீண்டி இறந்தும் அவள் எலும்புகளை வைத்திருந்து சம்பந்தரால் உயிர்ப்பிக்கப்பெற்ற பின் அவருக்கே அப்பெண்ணைக் கொடுக்க முன்வந்தபோது தன்னால் உயிர்ப்பிக்கப்பட்ட பெண் மகளுக்கு ஒப்பானதென்று மறுக்க பூம்பாவை சம்பந்தர் நினைவாகவே கன்னிமாடத்தில் வாழ்ந்த வரலாறும் இந்நூலில் நன்கு விளக்கப்பட்டுள்ளன.

இசை ஞானியாரோடு நாயன்மார்கள் கூட்டத்தில் இடம்பெற்ற புனிதவதியாராகிய காரைக்காலம்மையார், மங்கையர்க்குத் தனியரசி நம்தெய்வம் ஆகிய இருவர் பெருமையும் தெளிவாக்கப்பட்டுள்ளது. இவர்களை ஒப்பாரும்

மிக்காரும் யாருமில்லை. காரைக்காலம்மையார் இறைவ னிடத்தும் அடியாரிடத்தும் பேரன்பு செலுத்தினமையும் கணவன் வேறு மணம் செய்துகொண்டு தன்னை வணங்க முற்பட்டதும் பேயுருவை வேண்டிப் பெற்றுத் தன் பேரறி வைப் பயன்படுத்தி அற்புதத் திருவந்தாதி முதலிய அருட் பாக்களைப் பாடி இறைவனடி சேர்ந்த வரலாறு இனிது விளக்கப்பட்டுள்ளது. மங்கையர்க்கரசியார் இல்லற நெறி யிலும் அரசியல் முறையிலும் சிறந்து சிவநெறியை நிலை நிறுத்தத் தன்னாலியன்ற உதவி புரிந்தனர். குலச்சிறையா ரையும் திருஞானசம்பந்தப் பெருமானையும் துணைகொண்டு தன் கணவனையும் குடிகளையும் சைவத் திருநெறியில் ஈடு படுத்திய இவ்வம்மையாரின் மாண்பு தனிப் பெருமையுடை யது. சைவ சமயத்தில் இவருக்கிருந்த தனிப்பற்றின் விளைவாகச் சமணரால் சிவனடியாருக்கு இடுக்கண்நேர்ந்த போது தாம் உயிர்விடக் கருதினமையால் நன்கு விளங்கும். சமணரிடத்தும் தக்கமுறையில் வாதங்கள் செய்வித்து சைவ சமயத்தின் உண்மை உயர்வை நிலைநாட்டிய தன்மை யும் போற்றற் குரியது.

கோட்புலி நாயனார் தம் பெண்மக்கள் சிங்கடி, வனப் பகை என்னும் மங்கையரைச் சுந்தரருக்குக் கொடுக்க இசைந்தபோது முன்வினைப் பயனாகவே பரவையார் சங்கிலியாரை மணந்த சுந்தரர் அப்பெண்மணிகளை மக்க ளாகக்கொண்டு தன்னைச் 'சிங்கடியப்பன்-வனப்பகை யவளப்பன்' என்று கூறிக்கொண்டு திருப்பதிகங்கள் பாடி யுள்ள வரலாற்றை விளக்கி, சுந்தரர் பொன்னும் பொருளும் பெற்றது பரவையார் செய்துவந்த மகேசுர பூசைகளுக் காகவே என்பதையும் இந்நூலாசிரியர்வலியுறுத்தியுள்ளார்

கழற்சிங்கர் பட்டமகிஷி சங்காதேவி பூசைக்குரிய பூவை முகந்ததால் செருத்துணை நாயனாரால் மூக்கறுவிக்கப் பட்டுத் தன் நாயகனாலேயே கை துண்டிக்கப்பட்டும், கலிக்கம்ப நாயனாரால் அவர் மனைவியார் அடியாராக

வந்தவர் முன்பு பணியாளாக இருந்ததை எண்ணிப் பணி விடையில் தாமதித்தபோது கைவெட்டப்பட்டும் சிவாபராதத்துக்குத் தக்கவாறு தண்டிக்கப்பெற்ற அச் சேயிழையார் இருவரும் புனிதமாயின தன்மையைக் காட்டுவதாக இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது.

கலப்பு மணம், சாதி வேற்றுமை ஒழிப்பு, ஒன்றேகுலம் என்றெல்லாம் பேச்சளவில் கூச்சலிடப்படும் இக்காலத்திய பிரசாரமும், அக்காலத்தில் அந்தணரான சுந்தரர் பரவையார் சங்கிலியாரை மணந்ததும், கோட்புலி நாயனார் தம் மக்களைக்கொடுக்க முன்வந்ததும், பூம்பாவையைச்சிவநேசச் செட்டியார் சம்பந்தருக்கென வளர்த்ததும், திருநீலகண்ட யாழ்ப்பாணருடைய இசைக்கருவி யொலியுடன் அவர் மனைவியார் மதங்கசூளாமணியாரது மிடற்றொலியும் மதுரை திருவாரூர் சீர்காழி முதலிய தலங்களில் முழங்கினதும், திருநீலநக்கர் என்னும் அந்தணர் வீட்டு நடுமனைவேதியின் பக்கம் இவ்விருவரும் பள்ளிகொள்ள இடம் பெற்றதும், சம்பந்தர் திருமணத்தின்போது உடனிருந்து இருவரும் மற்ற அடியார்களுடன் சிவபதம் எய்தியதும் ஒப்புநோக்கி இன்புறுதற்குரிய வகையில் இந்நூலில் வரலாறுகள் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூலாசிரியர் சங்கிலி நாச்சியார் அவதரித்த தலமாகிய ஞாயிறு என்ற ஊரில் அவருடைய இல்லம் இருந்ததாகச் சொல்லப்படும் இடத்தில் ஒரு திருமடமும் அதில் அம்மையார் திருவுருவமும் அமைக்கவேண்டுமென்று குறிப்பிட்டுள்ளனர். இவ்வூர் சென்னையிலிருந்து 18 மைல் தொலைவிலும் செங்குன்றேரி (Redhills Lake)க்கு 5மைல் தூரத்திலும் உள்ளது. சங்கிலியார் வீடு இருந்ததாகக் காட்டப்படும் இடம் ஒரு பாழடைந்த மேடு. அதன் அருகே ஊர் நடுவிலுள்ள ஒரு கற்கோயில் பாழடைந்து கிடக்கின்றது. இதை வாங்கியிருக்கும் மகம்மதியர் இதை நியாய விலைக்குக் கொடுக்க முன்வருபவராக இல்லாததோடு இந்த

மேட்டில்தான் சங்கிலிநாச்சியார் இல்லம்இருந்ததென்ப தற்குத் தக்க சான்றுகளுமில்லை. அக்கம்பக்கம் வீடுகளு மில்லை. சங்கிலியார் திருவொற்றியூருக்குச் சென்று தங்கிய காலம்வரை இவ்வூரிலுள்ள புராதனச் சிவன் கோவிலிலே தானே வழிபாடியற்றியிருத்தல் வேண்டும். நாயன் மார்களின் அவதாரத்தலங்களில் அமைத்துள்ளதுபோன்று இங்கும் இவ்வூர் திருக்கோயிலுக்குள் சங்கிலியாருக்குத் தனிக் கோயில் அமைத்து நித்திய பூசைக்கும் ஏற்பாடு செய்யத் திட்டமிட்டு அரசாங்க நிதியுதவியும் செய்யப் பெற்றிருக்கிறது. மயிலையில் கபாலீச்சுரர் கோயிலில் பூம்பாவைக்குத் தனிக்கோயில் இருப்பதுபோலவே ஞாயிற் றிலும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இந்நூலில் கூறப்பட்டுள்ள வரலாறுகளையும் ஆசிரியர் விளக்கியுள்ள உள்ளுறையையும் நன்கு உணர்ந்து பெண் ணுலகம் விரும்பிப் பயின்று உய்யவேண்டும் என்ற இந் நூலாசிரியரின் விருப்பம் நிறைவேறுமென்றே நம்பு கிறேன். தமிழ் நாட்டில் வாழும் பெண்மக்களும் ஆடவரும் சிறியோரும் பெரியோரும் இவ்வரிய ஆராய்ச்சி நூலை ஊன்றிப் படித்துப் பயன்பெறத் திருவருள் கூட்டிவைக்க வேண்டுமென்று எல்லாம்வல்ல இறைவன் இணையடிகளை இறைஞ்சுகின்றேன்.

'ஞாலமுய்ய நாமுய்ய நம்பிசைவ நன்னெறியின்
சீலமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன்பாடச் செழுமறைகள்
ஓலமிடவும் உணர்வரியார் அடியார் உடனும் உளதென்றால்
ஆலம் அமுதுசெய்தபிரான் அடியார் பெருமை அறிந்தாரார்.'

'சிவமெனுந் பொருளும் ஆதி சத்தியொடு
சேரின் எத்தொழிலும் வல்லதாம்
அவள் பிரிந்திடின் இயங்குதற்கும் அரிது
அரிதெனுமறை இசைக்குமால்.'

வாழ்க சைவ நெறி ! வாழ்க சைவ மங்கையர் புகழ் !!

அ. உத்தண்டராமன்

# முன்னுரை

திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் தமிழ் மொழியிலுள்ள ஒப்புயர்வற்ற மிகச் சிறந்த நூல். பன்னிரண்டாம் நூற்றாண்டில் அநபாயச் சக்கரவர்த்தி என்னும் இரண்டாம் குலோத்துங்கச் சோழப் பேரரசரின் வேண்டுகோளின்படி அவரது முதலமைச்சராய் விளங்கிய சேக்கிழார் பெருமானால் இயற்றப்பட்டது. சிவனடியார்களின் சரிதம் கூறுவது; 4286 பாடல்களைக் கொண்டது. சைவத் திருமுறைகள் பன்னிரண்டினுள் ஒன்றாகக் கொண்டு சைவ மக்களால் புனிதமாகப் போற்றப்படுவது. கதை வேண்டிப் படிப்போருக்கு அழகிய கதைகளைத் தருவது. பக்தி வேண்டுவோர்க்குப் பத்தித் சுவை நனி சொட்டச் சொட்ட அளித்தும், இலக்கியம் வேண்டுவோர்க்குப் பேரிலக்கியமாயும், சமயம் வேண்டுவோர்க்குச் சிறந்த சமய நுட்பங்களை விளக்கியும், வரலாற்று ஆராய்ச்சியாளர்க்கு ஒப்பற்ற வரலாற்றுக் களஞ்சியமாயும் இவ்வாறு வேண்டுவோர்க்கு வேண்டுவதே ஈயும் கற்பகச் சுரங்கமாயும், அள்ள அள்ளக் குறையாத அமுத சுரபியாயும் விளங்குவது இந்நூலாகும்.

இந்நூலின் பெருமையைப் பற்றி எனது அருமை ஆசிரியர் பண்டித – ச. திருச்சிற்றம்பலம் பிள்ளையவர்கள் அடிக்கடி கூறக் கேட்டுள்ளேன். அவர்கள் காலஞ்சென்ற பின் இந்நூலைத் தக்கமுறையில் பாடஞ்சொல்வார் இல்லாது வருந்தினேன். எனினும் என் இளமைக் காலத்தில் நானாகவே முயன்று இதனை மீண்டும் மீண்டும் பன்னிரண்டு ஆண்டுக் காலம் படித்துவந்தேன். அதன்பின் சைவப்

பேரறிஞர், கயப்பாக்கம் – சதாசிவ செட்டியார், பி. ஏ. அவர்களின் தொடர்பும் அவர்கள் செய்த இந்தப் புராணப் பிரசங்கங்களைக் கேட்கும் வாய்ப்பும் ஏற்பட்டன. அப்பொழுது பல அரிய பொருள்களைக் குறித்துக்கொண்டேன். பின்னர் இந்நூலை மீண்டும் ஒரு பன்னிரண்டு ஆண்டுக்காலம் ஆழ்ந்தாழ்ந்து ஆராய்ந்து பல குறிப்புக்களைத் தொகுத்தேன். அக் குறிப்புக்களைக் கொண்டு இதற்கு மிக விரிவாகப் பேருரை ஒன்று எழுதி வெளியிட்டேன். அதற்கு மேலும் ஒரு பன்னிரண்டாண்டுகளாயின. இவ்வுரை ஏழு பகுதிகளாக வெளிவந்தது. அதற்குத் தமிழகத்திலும் இலங்கையிலும் மிக நல்ல வரவேற்பிருந்தது.

இவ்வாறு இந்நூலைப் பலகாலம் பயின்றும் மீண்டும் மீண்டும் படிக்கும் பொழுதெல்லாம் புதிய கருத்துக்கள் தோன்றுகின்றன. இதனைப் பல கோணங்களில் ஆராய்ந்து அந்த ஆராய்ச்சி முடிவுகளின் பேரில் கோவைத் தமிழ்ச் சங்கத்திலும் வேறு பல சபைகளிலும் சொற்பொழிவுகள் ஆற்றினேன். அவற்றில் சில நூல்வடிவில் வெளி வந்தன. அவ்வாறு செய்த சொற்பொழிவுகளுள் ஒன்றே "**சேக்கிழாரும் சேயிழையார்களும்**" என்பதாம். கோவைத் தமிழ்ச் சங்க அன்பர்கள் விரும்பியபடி இதை நூல்வடிவில் எழுதியுள்ளேன்.

இதன்கண் பெரிய புராணத்துள் வரும் 37 சேயிழையார்களின் வரலாறுகளை நாயன்மார்களின் சரிதங்களிலிருந்து பிரித்து எடுத்து எழுதியுள்ளேன். தனிப்பட்ட சேயிழையார்களைத் தவிர பொதுவாக ஆங்காங்கே ஒவ்வொரு நிலத்திலும் கூறப்பட்ட சேயிழையார்களைப் பற்றி இறுதியில் எழுதியுள்ளேன். மிகச் சிறிய அளவில் குறிப்புக்களுடையனவும் நாயன்மார்களின் வரலாறுகளுக்கு மிக அவசியமில்லாதனவுமான இரண்டொரு சேயிழையார்

களின் வரலாறுகளை மட்டும் விரிவஞ்சி இதில் சேர்க்கவில்லை. இதில் வரும் சேயிழையார்கள் பலதிறப்பட்டவர்கள். தாயாகவும், மனைவியராயும், உடன்பிறந்தோராயும், மக்களாயும், தாதியராயும் வாழ்ந்தவர்கள். இவர்களுள் அரசியரும் உண்டு; பணிப் பெண்டிரும் உண்டு. எல்லோருடைய வாழ்விலும் சிவ நெறித் தொண்டொன்றே முதன்மையாகப் பேசப்பட்டுள்ளது. சேக்கிழார் பெண்களை இழித்துக் கூறியுள்ளார் என்றும், பண்டைத் தமிழகத்தில் பெண்ணுரிமை மறுக்கப்பட்டு அவர்கள் அடிமைகளாக நடத்தப்பட்டனர் என்றும் இப்பொழுது சிலர் கூறி வருகிறார்கள். இது ஆராய்ச்சியில்லார் கூற்றேயாகும். நமது முன்னோர்கள் பெண்ணுரிமையைப் பெரிதும் பேணினர்கள். பெரிய புராணம் சிவநெறித் தொண்டு ஒன்று பற்றியே பேச எழுந்த நூலாகும். சாதாரண மனித இயலுக்கும் மேற்பட்ட நாயன்மார்களின் வரலாறு கூறுவது. தொண்டுக்குப் பழுது நேர்ந்தபொழுது மற்றைய உலகியலன்பு முதலியவை கீழ் நின்றுவிட்டன. அடிமைத் திறமே மேலோங்கிற்று. பழுது செய்தோர் சிவாபராத வினைவை நுகரவேண்டி வருமே என்ற நினைவு வந்தபோது அவர்கள்மீது இரக்கமே யுண்டாயிற்று. அதனால் அவர்களைத் தண்டிக்க நேர்ந்தது. அத் தண்டனையால் அவர்களும் சிவாபராதம் கழுவப்பட்டு அதன் வினைவிலிருந்து தப்பினார்கள். கழற்சிங்க நாயனாரின் பட்டத்தரசி, கலிக்கம்ப நாயனாரின் மனைவி ஆகியோர் அடைந்த தண்டனைகளை இவ்வாறே அமைதிசெய்துகொள்ள வேண்டும். அவ்வாறே கணவன் தன்னைக் கொடைப் பண்டமாகக் கருதி ஒரு சிவனடியாருக்கு அளித்துவிட அதை ஒத்துக்கொண்ட இயற்பகை நாயனார் மனைவியாரும், சிவன்கோயிலில் விளக்கெரிக்க எண்ணெய்வாங்கப் பொரு

வின்மையால் தன்னைக் கணவன் விற்றுவிடச் சம்மதித்த கலியநாயனார் மனைவியும் தாங்கள் அவ்வாறு சம்மதிப்பதால் சிவத்தொண்டு செய்வதில் உதவலாம் என்று கருதியே சம்மதித்தார்கள். சிவனடிமைத் திறத்தன்றி வேறு நெறிகளில் கணவன் தவறி நடந்திருந்தால் இவர்கள் அவற்றிற்குச் சம்மதித்திருக்கமாட்டார்கள். தாங்கள் நன்னெறியில் நின்று கணவனையும் அந்நெறிக்கே மீட்டிருப்பார்கள். மங்கையர்க்கரசி யம்மையாரின் சரிதம் இவ்வாறு அமைந்ததாகும்.

இச்சரிதங்களின் உள்ளுறையை உள்ளவாறுணர்ந்து உலகம் உய்வதாக. இவற்றைப் பெண்ணுலகம் பெரிதும் விரும்பிப் பயில்வதாக.

இந்நூலை அச்சிட்டு வெளியிடத் தூண்டியும் உதவி புரிந்தும் ஊக்கிய சென்னை இந்து அறநிலையக் காப்பாளரும் எனது நண்பருமான திரு. A. உத்தண்டராம பிள்ளை, I. A. S. அவர்களுக்கும், வெளியிடும் ஸ்ரீ சென்ன மல்லீசுவரர் ஸ்ரீ சென்னகேசவப்பெருமாள் தேவஸ்தானத்தாருக்கும், சீரிய முறையில் அச்சிட்டுதவிய சென்னைச் சாது அச்சுக்கூடத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

சேக்கிழார் நிலையம்
கோயம்புத்தூர்
5—12—1959.

சம்பந்த சரணாலயத் தம்பிரான்

# உள்ளுறை

பக்கம்



சேக்கிழார் சுவாமிகள்

(சோழநாட்டுத் திருநாகேச்சுரத்தில் உள்ள படிமம்)

உ

சிவமயம்

# சேக்கிழாரும் சேயிழையார்களும்

## தோற்றுவாய்

சிவபெருமானே முழுமுதற் கடவுள். அவரே உலக காரணர். அவர் அருள் உலகிலுள்ள சரம் அசரமாகிய எல்லா உயிர்களின் மேலும் பதிந்துள்ளது. மற்ற உயிர் களின்மேல் வெளிப்படாமலும் அடியார்களின் மேல் வெளிப்படவும் நிறைந்திருக்கிறது.

சலமிலன் சங்கரன் சார்ந்தவர்க் கலால்
நலமிலன் நாடொறு நல்கு வானலன்
குலமில ராயினும் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே.

அடியார்கள் சிவனடிமைத்திறத்தில் ஊன்றி நிற்பவர்கள். "கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே" என்றபடி உள்ளவர்கள் அவர்கள். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால் வகைகளில் சிவனுக்குத் தொண்டு செய்வார்கள். ஆகை யால் அவர்கள் **தொண்டர்** எனப்பெறுவார்கள். அத் தகைய தொண்டர்களையே திருத்தொண்டத் தொகையில் சிவனருளால் ஆளுடைய நம்பிகள் போற்றியருளினார்கள். அதனைப் பின்பற்றித் திருத்தொண்டர் புராணமும் விரி வாக அவர்களைப் பேசுகிறது. சிவபெருமானுக்கும் அவ னடியார்களுக்குமே ஆட்பட்டுத் தொண்டு செய்பவர்க

ளாதலால் தொண்டர்கள் எனப்படுவார்கள். ஏனை உலகியலில் "தொண்டு" என்றும் "சேவை" என்றும் "தொண்டர்கள்" என்றும் வழங்கப்படுவன எல்லாம் போலியான உபசார மொழிகளேயாம் என்பது.

திருத்தொண்டர் புராணத்திற் போற்றப்பெறும் தொண்டர்கள் எழுபத்திருவர்களாவர். அவர்கள் தொகையடியார்கள் ஒன்பதின்மர்களாகவும் தனியடியார்கள் அறுபத்துமூவர்களாகவும் பகுக்கப்படுவர். தொகையடியார்களாவர் தில்லை வாழந்தணர் பொய்யடிமையில்லாத புலவர் என்ற இவர்களும் பத்தராய்ப் பணிவார் முதலிய ஏழு வகையினருமாவார். தனியடியார்கள் ஏனைய திருநீலகண்டர் முதலாக இசை ஞானியார் ஈருகத் திருத்தொண்டத்தொகையுள் போற்றப்பட்ட அறுபான்மும்மையவர்கள். இத்தனியடியார்களுள் போற்றப்பட்டவர்களுள் காரைக்காலம்மையார் – மங்கையர்க்கரசியார் – இசைஞானியம்மையார் என்ற மூவர்களுக்கும் தனித்தனி சரிதங்களுள்ளன. ஏனைய சேயிழையார்களின் வரலாறுகளும் பண்பும் நாயன்மார்களின் சரிதங்களுள் விரவி வருகின்றன. நாயன்மார்களுள் திருநாவுக்கரசர் மூர்த்தியார் இவர்கள் துறவறத்தில் நின்றவர்கள். சண்டேசுவரர் பிரமசாரி. இவர்களைத் தவிர ஏனையோர் பெரும்பாலும் இல்லறத்தில் நின்றவர்களே யாவர். ஆதலால் புராணத்தில் வரும் சேயிழையார்கள் மனைவியார்களாகவும், தாயர்களாகவும், மக்களாகவும், தாதியாராகவும் வருவார்கள். திலகவதியார் திருவெண்காட்டு நங்கை—சந்தனத்தார், மதங்க சூளாமணியார் என்ற இவர்களைப் பெயர்சொல்லிப் பேசப்பெற்றுள்ளது. ஏனையோர்களை இயற்பகையார் மனைவியார், இளையான்குடிமாறர் மனைவியார், குங்குலியக்கலயர் மனைவியார் முதலியவர்களைப் பெயர்குறியாமலேயே போற்றுகிறுர் ஆசிரியர். இவர்களின் வரலாறுகளும் பணிகளும் அன்பின் திறங்களும் செயல்களும் அவ்வந்நாயன்

மார்களின் சரிதங்களுடன் விரவிவருவதால் அவற்றைத் தனியாகப் பிரித்துணரப் பெறுவதில்லை. அவ்வாறு பிரித்துணர்தல் பயன்படும் என்று கருதி அப்பணியை இந்நூல்மூலம் செய்யத் துணிந்தேன். அணிமையில் காலஞ்சென்ற அன்பர் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள், 'பெண்ணின்பெருமை' என்பது பற்றிப் பெரிதும் பேசியும் எழுதியும் வந்தார்கள். ஆனால் அவர் கண்ட காட்சி வேறு. இந்நூலில் காணும் காட்சிவேறு. ஆணாகப் பெண்ணாக உலகில் பிறந்து இருந்து உண்டு வீணாக வாழ்ந்து கழியும் பேதை மக்களைப்பற்றி இங்குப் பேச்சில்லை. செயற்கரிய செயல்களைச் செய்த சேயிழையார்களைப் பற்றிப் பேசுவது இந்நூலின் நோக்கம். பிறராற் செய்தற்கரிய செயல்களைச செய்த பெரியார்களாகிய உண்மை நாயன்மார்களுக்குத் துணையாக நின்று தாமும்அவ்வாறே அரிய செயல்களைச் செய்த சேயிழையார்களின் பண்பும் செயல்களும் நல்ல உலகிற்கு வழிகாட்டி விளங்குமென்பது இந்நூலின் நோக்கமாகும். நல்ல செயல்களுக்கு மாறாக நடந்து தண்டிக்கப்பட்டுத் தூய்மை செய்யப்பட்ட நங்கையர் சிலரைப்பற்றியும் இங்குப் பேச்சுண்டு.

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார் (குறள்)

இங்குக் காணும் சேயிழையார்கள் இல்லறத்தில் நின்று நம்போலவே மக்களைப் பெற்று வாழ்ந்தவர்கள்தான். ஆனால் அவ்வாழ்க்கையில் நின்றே உலகியலில் சிறந்து மேம்பட்ட அன்பினியலை அடைந்து வாழ்ந்தார்கள். 'இயற்பகை நாயனாரின் மனைவியார் தம்மை அவர் ஒரு சிவனடியார்க்குக் கொடுத்துவிட்டேன்' என்றபோது, "என்னுயிர்க் கொருநாதர் நீருரைத்த தொன்றை நான் செயுமத்தனை யல்லாலுரிமை வேறுளதோ எனக்கு" என்று கணவர் பணித்த வழியிலே யமைந்து நின்றார். இளையான்

குடிமாறனருடைய மனைவியார் தமக்கு உணவின்றி வருந்தியபோதும் சிவனடியாரை அமுதூட்ட வழிதேடிக் கொடுத்தார். அப்பூதியார் மனைவியார் தம் மகனிறந்த போதும் அதை மறைத்து அடியார்க் கமுதூட்டுவதில் முற்பட்டு நின்றார். சிறுத்தொண்டர் மனைவியாரான திருவெண்காட்டம்மையார் பிள்ளைக்கறி சமைத்தடியாரை ஊட்டினர். அந்த அளவுக்கு நம்போலியர்களாற் போக முடியாவிட்டாலும் அவற்றை முன்மாதிரியாய் வைத்துக் கொண்டு கூடியவரை அவ்வழியில் முயன்று, நல்வழி ஒழுகி வருவோமானல் நலம் பெறுவோம். “எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கு மோனத்தே” என்றபடி இங்குக் கூறப்பட்ட சேயிழையார்கள் சிவனிடத்தும் சிவனடியார்களிடத்தும் கொண்ட அன்பின் வழியிலே ஊன்றி நின்றார்கள். அவ்வாறு பணித்த திருவருளிலே ஊறினர்கள். திருவருளே இவர்கள் வாழ்க்கையை அவ்வந் நாயன்மார்களை நாயகர்களாகக்கொண்டு வாழ்ந்து பெண்மையுலகுக்கு வழிகாட்டிகளாக அமையும்படி கூட்டிவைத்தது என்பதாம்.

# 1. இறைவியாராம் உமாதேவியார்

இறைவியாராகிய உமாதேவியாரையும் இங்குப் போற்றப்படும் சேயிழையார்களுள் ஒருவராக வைத்து " சேயிழை " என்று பேச எண்ணுகிறேம். இது தகுமா ? என்னலாம். தகும் என்போம். என்னே ? அவரையும் " சேயிழை " என்று பெரியோர் போற்றி யுள்ளார். " **சேயிழை அஞ்சல் என்ருர்** " என்பது தேவாரம். அவரும் அடியார்களுடனே யிருப்பார். இறைவன் அடியார்களுள் ஒருவராக இருக்கின்ருர். "அடியாருடனும் உளதென்ருல்" என்பது புராணம். இறைவர் உடனுய் இருப்பர் என்ருல் இறைவியாரும் உடனே இருப்பரன்றே ? " எத்திறமீச னின்ருனத்திற மவளுநிற்பள் " என்பது ஞானசாத்திரம். அடியார்களுக்கு அருள்புரியத் திருமேனி தாங்கி இறைவர் எழுந்தருளும் போதெல்லாம் இறைவியும் உடனே எழுந் தருளுவர். ஆனுல் சில இடங்களில் இறைவியாருடனின்றி இறைவர் தாமே எழுந்தருளி யிருப்பதாகச் சொல்லப் படுவது உண்மைதான். நம்பியாரூரரைத் தடுத்தாட் கொள்வதற்காகக் கிழவேதியராக இறைவர் தாமே எழுந்தருளினுர். இளையான்குடி மாறனுர் பெருமையை உலகுக்குக் காட்டும் பொருட்டு " நீடிய பேதையாளுட னின்றியோர் நற்றவத்தவர் வேடமேகொடு" நண்ணினுர்; ஆளுடைய நம்பிகளுக்கும் ஆளுடைய அரசுகளுக்கும் சோறிடும் பொருட்டு இறைவர் தனியே எழுந்தருளினுர். இவ்வாறு கூறப்பட்ட தென்னேயோ ? எனின் அவை உண்மையே. இறைவர் திருமேனி கொண்டு எழுந் தருளினுலே அவை அருள்பற்றி மேற்கொண்ட திருமேனி யாகும். இவ் விடங்களில் இறைவியார் வெளிப்பட இல்லா விட்டாலும் அத்திருமேனி மறைந்து நின்று மறைப்புச் சத்தியாக எழுந்தருளுகின்ருர். அதனைத் திரோதான சத்தி

என்பர். வெளிப்பட வரும்போது அருட்சத்தி என்பர். ஆதலின் இறைவியாரின்றி அருட்டிருமேனி இறைவர் கொள்வதில்லை என்க.

திருக்கயிலாயத்தில் அநிந்திதை கமலினி என்ற இரண்டு சேடியர்கள் அம்மையாருக்குரிய பூக்கொணர்தல் முதலிய பணிவிடைகள் செய்ய அம்மையார் மகிழ்ந்து அவர்கள் பணிவிடைகளை ஏற்றருளினர். அவர்கள் ஒரு நாள் திருநந்தனவனத்தில் ஆலாலசுந்தரரைக் கண்ட காட்சியின் பயனாகத் தென்திசையில் போய்ப் பிறந்து காதலின்பங் கலந்து மீளும்படி பணிக்கப்பட்டனர். அவ்வாறே அவர்கள் முறையே திருவொற்றியூரிலும், திருவாரூரிலுமாகப் பிறந்து சங்கிலியார் பரவையார் என்னும் நாமங்களோடு மீளக்கயிலையில் எய்திப் பண்டு போல அம்மையார் பணிவிடை செய்யலாயினர். அம்மையாரும் அவர்களை ஏற்று அவர்கள் பணிகளை முன்பு போலக் கண்டு மகிழ்ந்தருளினர்.

திருக்கயிலையில் இறைவருடனே எழுந்தருளியிருந்த போது, ஒருகாலத்தில் இறைவர் அருளிச் செய்ய உண்மைச் சிவாகமங்களின் திறங்களை யெல்லாம் உள்ளவாறே அம்மையார் கேட்டருளினர். சிவாகமங்களின் கருத்தாவதும் அவற்றின் பொருளாய் விளங்குவதும், இறைவர் தாம் விரும்பும் உண்மையாவதும் சிவபூசனையே யாம் என்று இறைவர் சொல்லியருளக் கேட்ட அம்மையார் சிவபூசனை செய்யக் காதல் கொண்டருளினர். இறைவர் விருப்பு வெறுப்பில்லாதவர். வெறுப்போடு விருப்புத் தன்பால் மேவுதலிலாதவர் என்று உண்மை நூல்கள் முறையிடுகின்றனவே ; இங்குப் பூசனையை விரும்புவர் என்பதென்னையோ? எனின், அவ்விருப்பம் தன் பொருட்டன்று. ஆன்மாக்கள் தம்மைப் பூசித்து வீடுபேறாகிய பேரின்பம்

பெற்றுய்தற் பொருட்டு உயிர்களின் மேல் வைத்த பெருங் கருணையேயாம் என்க.

இவ்வாறு அம்மையார் திருவுள்ளத்துள் நிறைந்த காதலைக் கண்டு இறைவர் மகிழ்ந்து உன் உள்ளத்து அடுத்த தென்ன? என்று வினவினர். அம்மையார் “ நாதரே நீர் உரைத்தருளிய ஆகமத்தின் வழியே இயல் பினால் உம்மைப் பூசிக்க என் ஆசை பொங்குகின்றது ” என்றார். அது கேட்டு இறைவர் “ தென்றிசை செய்த தவத்தால் யாவரும் வந்தடைவதும் மண்மேல் என்றும் உள்ளதுமாகிய தலம் காஞ்சிமா நகரம். அதில் மாமரத்தின் கீழ் நம் இருக்கை உள்ளது. அதனை அணைந்து நிலை பெற்ற பூசையை மகிழ்ச்சியுடன் செய்வாயாக ” என்றருளி விடை கொடுத்தருளினர். பிரியா விடை கொண்டு அம்மையாரும் எழுந்தருளுதற் கெழுந்தனர். மலையரசன் விரும்பி எதிர் வந்து ஏற்ற பரிசனங்களையும் சாதனங் களையும் அனுப்பி வணங்கினன். அம்மையார் காஞ்சியை யணைந்தனர். பதும மாநாகத்தின் வேண்டுதலுக்கிணங்கி அதன்பிலத்தினில் கோயில் கொண்டருளினர். பூசை செய்வதற்காக இறைவர் திருமேனியை வெளிப்படக் காண்பதற்காக எங்கும் தேடியும் அவர் திருவிளையாட் டினாலே எங்கும் காணப்படாது மறைந்து நின்றனர். நிறைந்த மாதவம் செய்து காண மனங் கொண்டனர் இறைவியார். மனம் இறைவரைக் காண்பதற்கே விரும் பிற்று ; திருவாக்கு நிரந்தரமாகத் திருவைந்தெழுத்தையே நிகழ்த்திற்று ; திருக்கைகள் சிரமேற் குவிந்து நின்றன இவ்வாறு சிவனையே தஞ்சமாக வைத்து அரிய தவத்தைச் செய்தருளினர் அம்மையார். அதனைக்கண்டும் தரித்திருப் பரோ இறைவர் ? மலைமகளார் காணும்படி மாவின் மூலத் திலே தோன்றி முளைத்து எழுந்தருளினர் இறைவர்.

" நெஞ்ச மீசனைக் காண்பதே விரும்பி
நிரந்த ரந்திரு வாக்கினில் நிகழ்வ
தஞ்செழுத்துமே யாக ஆளுடைய வம்மை
செம்மலர்க் கைகுவித் தருளித்
தஞ்ச மாகிய வருந்தவம் புரியத்
தரிப்பரோவவ டனிப்பெருங் கணவர்
வஞ்ச நீக்கிய மாவின் மூலத்து வந்து
தோன்றினர் மலைமகள் காண

(திருக்குறிப்பு - புரா - 57)

கண்டவுடனே வணங்கி அளவில்லாத காதல் பொங்க ஆகம விதியினல் பூசனை செய்யத் தொடங்கினர் அம்மை யார். திருச்சேடியர்கள் பூம்பிடகை கொண்டணையத் தம் திருவடியிணையடிகள் ஒதுங்கி நடந்து சென்று **அம்பிகா வனமாம்** திருநந்தனவனத்தில் பூசைக்கான தூய நறிய புது மலர்களைக் கொய்தனர். கம்பைமா நதியில் கொண்ட திருமஞ்சனமும், மெய்ப்பூச்சும், நெய்த்தூபமும், தீபமும் முதலாயினவற்றை வேண்டியபடி அமைத்து வேண்டியபடி சேடியர்கள் எடுத்தேந்தச் சிவாகமங்களில் விதித்தவாறே பூசனை புரிந்தனர். கைகள் பெற்ற பயனிதுவே யென்று கொண்டு அம்மையார் நிலைபெற்ற அன்பு நிறைந்த மனத்தோடு வணங்கிச் செய்த பூசனை நாடோறும் பெருமான் திருவுள்ளம் கொள்ளுமாறு பெருகிற்று.

" கரந்தரும் பயனிதுவென வுணர்ந்து
கம்ப மேவிய வும்பர்நா யகர்பால்
நிரந்தகாதல் செய்யுள் ளத்தளாகி
நீடு நன்மைக ளியாவையும் பெருக.
வரந்தரும் பொருளாம் மலைவல்லி
மாறிலாவகை மலர்ந்தபே ரன்பாற்
சிரம்பணிந் தெழுபூசை நாடோறுந்
திருவுளங் கொளப் பெருகியதன்றே.

(திருக்குறிப்பு - புரா - 61)

இறைவர் ஒரு திருவிளையாட்டினின் மேவினர். கம்பையாறு கடல்போலப் பெருகிவந்தது. அந்தப் பெருவெள்ளத்தை இறைவர்மேல் வராதபடி அம்மையார் திருக்கையால் தடுத்தனர். அது நிற்காமல் மேலும் பெருகிவந்தது. அம்மையார் பெருமானை வெள்ளம் கொள்ளாமல் தழுவிக்கொண்டனர். அவருடைய வளைக் கரங்களுக்கும் திருமுலைகளுக்கும் மெத்தெனவே களிற்றுரி புனைந்த தமது வலிய திருமேனி குழைந்து காட்டினர் விழைந்த கொள்கையினராகிய இறைவர். இதுகண்டு சராசரங்களிலுள்ள எல்லா உயிர்களும், உயிரும் உடம்பும் உருகி ஒன்றாய் மகிழ்ந்தேத்தின. கம்பையாறு வெள்ளம் தணிந்து முன் வணங்கிற்று.

புனிதமாகிய திருநீற்றினை அணிந்து முடிச்சடை புனைந்து காதில் வெண் சங்கக் குழையும் கழுத்தில் கண்டிகையும் சிவயோகத்தமர்ந்து இறைவனார் நிற்கும் கருத்தினாலே மாதவம் செய்ததற்கு வரங்கொடுத்தது போன்று அம்மையார் மெய்ப்பயன் கொடுக்க அதனை ஏற்றருளி இறைவனார் அவரது வளைத்தழும்பும் முலைச்சுவடும் அணிந்து கொண்டருளினர் [மெய்ப்பயன் உண்மையான பயன் என்றும், திரு உடம்பின் - (வளைக்கரமும் திருமுலையும்) - பயன் என்றும் இரட்டுற உரைக்க அழகு பொருந்த நின்றது காண்க.]

" பூதியாகிய புனிதநீருடிப் பொங்கு கங்கை
தோய் முடிச்சடை புனைந்து
காதில் வெண்குழைக் கண்டிகை தாழக்
கலந்த சோகந்தின் மருவிய கருத்தால்
ஆதி தேவனு ராயு மாதவஞ்செ யய்
வரங் கொலோ வகில மீன்றளித்த
மாது மெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு
வளைத்த ழும்புடன் முலைச்சுவ டணிந்தார் "

(திருக்குறிப்பு - புரா - 66)

என்ற மிக அழகிய திருப்பாட்டினுல் இதனை ஆசிரியர் சேக்கிழார்பெருமான் உபதேசித் தருளியுள்ளார். இக் கருத்தினை உள்வைத்து ஆசிரியர் சிவஞான முனிவரும் தமது காஞ்சிப் புராணத்தில்,

“ காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக்
கவின்ற கல்லாடைமேற் புனைந்து
யாமெலாம் வழுத்துந் துறவியென் றிருந்து
மொருத்தி தன்னிள முலைச்சுவடு
தோமுற வணிந்தா னெனச்சிறை யிடல்
போற்சேரு மேகம்பத்
தோமொழிப் பொருளையடக்கி யான
முறுநர் வாழிடம் பலவுளவால் ”

என்று அழகாக அருளியுள்ளார். மேலும் இச்சரிதத்தை தழுவக்குழைந்த படலத்துள் மிக அழகாக விரித்துக் கூறி யுள்ளார். ஆங்குக் காண்க.

வளைத்தழும்பும் முலைச்சுவடும் அணிந்துகொண்ட மணவாளக் கோலத்தை இறைவர் அம்மையாருக்குக் காட்டி “ வேண்டும் வரங்களைக் கேட்க ” என்றருளினர். அம்மையார் இறைஞ்சிப் பூசனை இன்னும் முடிந்ததில்லை என்றருளவே அதற்கு இறைவர் “ மாறிலாதநின் பூசனை நம்பக்கல் என்றும் முடிவில்லாததாய் நித்தியபூசையாகும்” என்றருள்செய்தனர். “ இப்பூசை என்றும் நிலையாகத் தேவரீர் மகிழ்ந்து கொண்டருள வேண்டும் ; ஈடில்லாத இப்பதியினுள் எல்லா அறங்களையும் நான் செய்ய வேண்டும். இப்பதியினுள்ளார் திருவடிப் பிழைத்தல் என்னும் சிவாபராதமொன்றொழிய வேறெச்செயல்களைச் செய்த போதிலும் மாதவப்பயனைக் கொடுத்தருள வேண்டும் ” என்று மூன்று வரங்களை அம்மையார் கேட்டருளினர். இறைவர் அவ்வாறே பூசனையை மகிழ்ந்து விரும்பி வீற் றிருந்தருளினர். அறங்கள் வளர்க்கும் வித்தாக இகபரத்

துக்கு இருநாழி நெல்லளித்தருளினர். காஞ்சியில் வாழ்ப வர்கள், எத்தன்மையராயினும் அவர்கள் செய்யும் தீவினை யும் மெய்நெறியடைவதற்காம் தவங்களாகவு மருள் செய் தார். அம்மையாரும் அவ்வாறே புண்ணியத் திருக்காமக் கோட்டத்தில் எழுந்தருளியிருந்து தவம்செய்து கொண் டருளி முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பாராயினர். திருக்காமக் கோட்டத்தில் பல அற்புதங்கள் உள்ளன.

இந்தச் சரிதத்தால் நாம் தெரியவேண்டியகற்பனைகள் அநந்தமுண்டு. அவற்றுள் ஒரு சிலவற்றை இங்குக் கவனிப்போம். சிவபூசை சிவாகம விதிகளின்படி செய்ய வேண்டுவதொன்று. அது மனம் வாக்குக் காயம் என்ற மூன்று கரணங்களும் ஒன்றித்து நின்று செய்யத்தக்கது. "வாயொன்று சொல்ல மனமொன்று சிந்திக்க நீ யொன்று செய்தலுறுதி நெடுந்தகாய்" "ஒன்றியிருந்து நினைமின்களுந் தமக்கூனமில்லை" என்பன முதலிய திரு வாக்குக்கள் காண்க. சிவபூசை தவமெனப்படும். "தவ முயல்வோர் மலர்பறிப்ப" என்பது தேவாரம். பூசைக் கான புதிய நறுமலர்களைத் தாமே தூயராய்க் கொணர்தல் வேண்டும். "பறித்த மலர்கொடு" "மரங்களேறி மலர் பறித்திட்டிலர்" "நகமெலாந்தேயக் கையாளுண் மலர் கொய்து நாளும், முகமெலாங் கண்ணீர்வார முன்பணிந் தேத்தும் தொண்ட ரக மலாற் கோயிலில்லை" என்பன முதலிய திருவாக்குக்கள் காண்க. எனவே விலைக்கு வாங்கிய மலர்கள் முதலியன சிவபூசைக்காகா என்பது பெறப்படும். அதுவே விதி. இந்நாளில் விலைக்கு வாங்கு வதே விதியாய்விட்டது காலத்தின் கோலம்! திருநந்தன வனங்கள் புனிதமான இடங்கள். அங்கு வளரும் மரம் செடி கொடிகள் சிவபூசைக்குரிய சாதனங்களைத் தருபவை. அவை தவஞ்செய்த உயிர்களாம். அவற்றைப் பெரியோர் வணங்குவர். "பன்மலர்ப்புனித நந்தன வனங்கள் பணிந்து சென்றனன் மணங்கமழ்தாரான்" என்பதும்

பெரியபுராணம். பழைய பூக்கள்; துணிகளிற் பொதிந்தவை; தூய்மையில்லாது பறித்தவை முதலியவை பூசைக்காகா. இங்கு அம்மையார் தாமே நடந்துசென்று அம்பிகாவனத்தில் மலர்கள்கொய்து காட்டியமை காண்க. மனம் வாக்குக் காயம் ஒன்றியிருந்து மாதவஞ்செய்து எம்பெருமானை வெளிப்படக் கண்டதும் காண்க. சிவாகமங்களை இறைவர் உரைத்தருளக் கேட்ட அம்மையார், ஆகமவிதியினால் பூசைசெய்ய ஆசைகொண்டு அவ்வாறே செய்து காட்டினர். அம்மையார் தாமே குருவாக நின்று செய்து காட்டி உலகுக்கு உபதேசித்தவாறும். சிவபூசைமுறையில் வடக்குத்துவாரத்தில் வைத்து வழிபடப்பெறும் ஏழு குரவர்களுள் "அம்பிகாகுருவே நம" என்று பூசிக்கப்பெறும் குரு அம்மையாரேயாவர். அம்மையார் பூசித்தது உலகின் பொருட்டேயாம். அவர் இறைவரிடம் கேட்ட வரங்களும் அவ்வாறே உலகுயிர்களுக்காய் நின்றமையும் காண்க. இதுபற்றியே அம்மையார் இம்புராணத்துள் "உலகை ஆளுடையார்" "பெண்ணினல்லவளாயின பெருந்தவக் கொழுந்து" "போகமார்த்த பூண்முலையினாள்" "யோனியெண்பத்துநான்கு நூறுயிரந்தனுள் வைத்த பேதமும் புரந்தருளு மக்கருணைப்பிரான் மொழிந்த ஆகமவழி பேணிப்போது நீர்மையிற் றொழுதனள் போத" "மலைமடந்தை" "பொன்மலை வல்லி" "உயிர்கள் யாவையுமீன்ற வெம்பிராட்டி" "பிறப்பொழிப்பாள்" "அந்தமில்லறம் புரப்பவள்" என்றெல்லாம் போற்றப்பட்டுள்ளனர்.

## 2. அநிந்திதையார் = சங்கிலியார்

திருக்கயிலையில் உமையம்மையாருக்கு அணுக்கராய் உரிய பணிவிடைகள் செய்யும் சேடிமார்கள் இருவர் உளர் என்று மேலே சொல்லப்பட்டது. கீழை நாட்டுப் பல தலங்களிலும் அம்மையார் திருவுருவங்களோடு இவர் களிருவர் திருவுருவங்களும் அமைந்திருக்கக் காண்போம். அவர்களாவார் அநிந்திதையார்—கமலினியார் என்பவர் களாம். அவ்விருவரும் திருக்கயிலை நந்தனவனத்தில் அம்மையாருக்காகப் பூக்கொய்யச் சென்றனர். அதற்கு முன்பே இறைவருக்குப் பூக்கொய்யும்பொருட்டு ஆலால சுந்தரரும் அங்குச் சென்றனர். அவ்விருவர்களும் அவரை ஆண்மகன் என்ற கண்ணுடனே கண்டனர். அவரும் இவர்களைக் கண்டனர். காட்சி என்னும் அகப்பொருள் துறைவாய்த்தது; மனம்போக்கினர். அவ்வளவிலே இரு திறத்தவர்களும் முறையே இறைவியார் சந்நிதிக்கும் இறைவர் சந்நிதிக்குமாகத் திரும்பிப் போந்தனர். இதனை உயிர்களுக்குள்ளே உயிர்க்குயிராய் நிற்கும் இறைவரும் இறைவியும் அறிந்தார்கள். "மாதர்மேல் மனம்வைத்தனை; தென்புவிமீது தோன்றியம் மெல்லியலாருடன், காதலின் பங்கலந்து அணைவாய்" என்று ஆலால சுந்தரருக்கு இறைவராணை பிறந்தது. அவ்வாறே இவ் விரு சேடியர்க்கும் அம்மையாராணை பிறந்தது. அவ்விரு வரும் தென்புவியில் வந்து தோன்றினர்கள். அநிந்திதை யார் தொண்டை நாட்டில் திருவொற்றியூருக்கு அணிமை யில் (10 நாழிகை யளவில்) உள்ள ஞாயிறு என்ற ஊரில் வேளாளர் மரபில் ஞாயிறுகிழார் என்றவர் மகளாரா யவதரித்துச் சங்கிலியார் என்னும் பெயர்பூண்டு வளர்வா ராயினர். இவர் அவதரித்த மரபு தொண்டைமண்டலம் கொண்டைகட்டி வேளாளர் மரபு என்றறியப்படுகின்றது. இந்தப் பரம்பரையில் வழிவழி வந்தவர்கள் இப்போது

சமீபகாலம்வரையில் இவர் அவதரித்த இல்லத்திலேயே வாழ்ந்தார்கள் என்றும் அணிமையில் அந்த இல்லத்தை ஒரு மகமதிய அன்பருக்கு விற்றுவிட்டுச் சென்னைக்குக் குடிபோயினர் என்றும் அறிகிறோம். அந்த மகமதிய அன்பர் சங்கிலியார் சரிதம் ஒன்று எழுதியுள்ளார் என்றும் கேள்வி. அந்த இல்லத்தை வாங்கி அதில் திருமடம் அமைத்துச் சங்கிலியார் திருவுருவம் தாபித்து வழிபாடு நடைபெறும்படி செய்தல் சிவபுண்ணியமாகும். அதனைச் செய்யச் சைவர் யாரேனும் முன்வருவார்களோ? திருவருள் துணைசெய்ய வேண்டுகிறேன். அதற்குத் துணைசெய்ய அந்த மகமதிய அன்பரும் சித்தமாயுள்ளார் என்று கேள்வி.

அவ்வாறு வந்தவதரித்த சங்கிலியார் தாம் முன்னை நிலையில் அம்மையார்பால் மறவாத அன்புகொண்டு செய்த உணர்வோடும் வந்தவதரித்து வளர்ந்தார். இவ்வாறு முன்னை யறிவுணர்வுடன் பிறத்தல், புண்ணிய வசத்தால் வந்தோருக்கே அமையும். கோச்செங்கட் சோழநாயனார் சரிதம் காண்க. மற்றையோரெல்லாரும் இறைவரது திரோதான சக்தியால் மறைக்கப்பட்டு முன்னைப்பிறப்பின் நினைவில்லாமலே பிறக்கிறார்கள். அவ்வாறில்லாவிட்டால் கருமங்களை அனுபவிக்க இயலாதன்றோ? அவ்வாறு அவதரித்த அநிந்திதையார் சிறுமகளிர் கூட்டத்தோடும் விளையாடிப் பருவங்கள்தோறும் நிரம்ப வளர்ந்தனர். தனது மரபின் முறையில்வரும் செயலேயல்லாமல் தெய்வத் தன்மையில் யாவரும் அதிசயிக்கும்படி வளரும் அவர் பருவமடைந்தனர். அதுகண்டு தந்தையார் மனைவியாரை நோக்கி "நம்முடைய மகளுக்கு இவ்வுலகிலுள்ளோர்க்கன்றி மேம்பட்ட நலங்கள் பண்பில் விளங்குகின்றன. மணம்செய்யும் காலம் இது" என்றார். அதற்கு மனைவியார் "ஏலும் பரிசிலே பார்த்து மணஞ்செய்து கொடுங்கள்" என்றார். இதனை அருகிருந்து கேட்ட சங்கிலி

யார் "இது எனக்குப் பொருந்ாதசொல். இறைவர் திருவருளே பொருந்திய ஒருவருக்கு நான் உரியள். வேறு என்னவிளையுமோ என்று வெருவுற்று உணர்விழந்து பூமியில் அயர்ந்து வீழ்ந்தார். தந்தையாரும் தாயரும் பயந்து விரைந்து எடுத்தணைத்துத் தண்ணீர் முதலிய உபசாரங்கள் செய்து அயர்ச்சியை நீக்கி "உனக்கு என்னேவுற்றது?" என்று கேட்டனர். சங்கிலியார் மறைவிட்டு வெளிப்படையாய்ச் சொல்வாராய் "இன்று என்னைப்பற்றி நீங்கள் சொன்னது என் தரத்துக்கிசையாது. இறைவர் அருள்பெற்றூர் ஒருவர்க்கு யான் உரியேன். யான் இனிமேல் திருவெற்றியூரிற் சேர்ந்து சிவனருளிற் சேர்வேன்" என்றூர். அதுகேட்ட தந்தையார் தாயர் அயர்வும் பயமும் அதிசயமும் அடைந்து அந்தப் பேச்சை மறைத்து ஒழுகிவந்தனர். இதனை அறியாத இவர் குலத்து ஒத்த பரிசுடையவன் இவரை மணம் செய்யவிரும்பி மகட் பேசச் சிலரை அனுப்ப அவர்களும் வந்தணைந்தனர். தாதையாரும் அதனைக்கேட்டு இந்த நிலைமையை வெளிப் படச் சொல்லமாட்டாமையால் அவர்கள் மனம் நோவாத படி வேறு ஏதோ காரணம்சொல்லி அவர்களை அனுப்பி விடுத்தனர். அவர்கள் போய்ச் சேருமுன்பே, தீமை செய்து இறந்தவன்போல அவனும், இது சொல்லவந்த வர்களுடன் இறந்துபட்டான். இதனைக் கேட்டுத் தாய் தந்தையர்கள் மனம்மருண்டனர். சங்கிலியார் திறத்தில் பேசத்தகா வார்த்தை உய்யவேண்டுமென்னு நினைவுடையார்கள் சொல்லார் என்னும் உண்மையை உலகவரறியும் படி இது நிகழவே இதனைச் சேர்ந்தார்களுக்குச் சொல்லி விட்டுச் சங்கிலியார் கருத்தின்படியே செய்யத் துணிந் தார்கள். இவள் தெய்வப் பெண்ணேயாவள். இறைவன் திறத்தன்றி வேறொரு மொழியும் பேச்சில்லாள். அறிந் தோர் இவள் திறத்தைப் பேச அஞ்சுவார். இனி இவள் குறித்தபடியே திருவொற்றியூரில் இறைவரிடம் சேர்ப்

போம் என்று சொன்னார்கள். " திருவொற்றியூரிற்சேர்ந்து செல்கதி சிவனருளாலே யாகக் கன்னிமாடத்திற் றங்கித் தவம்செய்வீர் " என்று சங்கிலியாருக்கு அறிவித்தார்கள். அவ்வண்ணமே துணிந்து பெருத்த செல்வத்தோடும் சுற்றத்தார் சூழத் திருவொற்றியூர் சேர்ந்தனர். திருக் கோயிலிற் சேர்ந்து இறைவரை வணங்கினர். அந்தப் பதியோர் இசைவினால் கோயிலுக்கு அருகில் கன்னிமாடம் அமைத்தனர்; காப்பியற்றினர்; சேடிமாரையும் அமைத்த னர். நாங்கள் உமக்குப் பணிசெய்ய இறைவற்கேற்ற பணி செய்து கன்னிமாடத்துறைகின்றீர் என்று கண்ணீர் பெருகத் தந்தையார் வந்துஅடிவணங்கித் தரியாதே ஏங்கு சுற்றத்தாரொடும் தம்பதியிற் போனார். சங்கிலியார் அங் கமர்ந்து தவஞ் செய்வாராயினர். காலந்தோறும் இறைவர் கோயிலிற் சென்று வணங்குவார். தமது பணியினைச் செய்வாராய்த் திருப்பூ மண்டபத்திலே திரையிட்ட ஓர்தனி யிடத்தமர்ந்து முன்னாளில் கயிலையில் பணி செய்த தன்மைப்படியே, அந்த வுணர்ச்சி தலைக்கூடத் திருமாலை களைக் காலங்களுக்கேற்றபடி அமைத்து இறைவருக்குச் சாத்த அளித்து அமர்வாராயினர்.

அந்நாளில் நம்பியாரூரர் சிவதலங்களை வணங்கித் திருவொற்றியூர் சேர்ந்தார். ஒருநாள் தொண்டு செய்பவர் திருத்தொண்டுகளைக் கண்டு மகிழ்ந்தனர். திருப்பூ மண்டபத்துக்கு வந்தனர். அன்பே நாராக அஞ்செழுத் தையும் நெஞ்சு தொடுக்க அலர் தொடுத்தே உள்ளுருகும் அடியார்களைத் தொழுது சென்றனர். தனித்த ஓரிடத்தில் முன்பு போலத் திரை நீக்கி முதல்வர் சாத்தும் பணி கொடுத்து மின்னல் போல மறையும் சங்கிலியாரை விதியாற் கண்ணுற்றார். கோவாத முத்தும், வண்டு மொய்க்காத முகையும் போன்ற அவரைக் கண்டவுடனே தமது சிந்தை நிறைகாவாது அவர்பாற் சென்றது. "பொன்னும் மணியும் கலந்த ஒளியை அமுதிற்குழைத்துப்

புதிய மதியின் நீர்மையாற் கலந்து அமைத்த மின்னற் கொடிபோல்வாள் என்னை உள்ளந்திரிவித்தாள். அவள் யார்?" என்று வினவினுர். "அவர் தாம் நங்கை சங்கிலி யார். பெரிய தவத்தால் ஈசர் பணிபுரியும் கன்னியார்" என்று அருகு நின்றவர்கள் சொன்னுர்கள். "இப்பிறவியை இருவரால் இறைவர் பெறுவித்தார். ஒருவர் பரவையார். இவள் மற்றையவளாம்" என மருண்டார். முன்னைப் பிறவியின் நினைவினுலே அவர் இவ்வாறு கூறநேர்ந்தது. இவளை இறைவர்பால் வேண்டிப் பெறுவேன் என்று திருமுன்பு சென்று வேண்டினர். சங்கிலியாரை எனக்குத் தாரும் என்று வேண்டினுர். கோயிற்புறத்து ஓரிடத்தில் வந்தமர்ந்தார். மாலையும் வந்தது. நம்பிகள் தனியிடத் திருந்து அயர்வாராயினர். இறைவர் வெளிப்பட்டு வந்து "சங்கிலியை உனக்குத் தருகின்ருேம்; கவலை ஒழிக" என்றருளினர். அவள் இவ்வுலகில் யாவருக்கும் அடைய வொண்ணுதவள்; பெரிய தவமுடையவள் என்று சொல்லி அங்கு நின்றும் நீங்கிக் கன்னிமாடத்துச் சங்கிலியார் கனவில் தோன்றினுர். சங்கிலியார் தொழுது விழுந்து பரவசமாய் எழுந்து நின்று "அடியேன் உய்யும் படி எழுந்தருளப் பெற்ற பேற்றினுக்கு நான் செய்யும் கைமாறு என்னே" என்று சொல்ல இறைவனுர், "தவமுடைய சங்கிலியே! நம்மிடம் மிகுந்த அன்புடைய வன். மேருமலையினும் மேம்பட்ட தவ முடையவன். திருவெண்ணெய் நல்லூரில் உலகமறிய நம்மால் ஆட் கொள்ளப் பெற்ற உரிமையுடையவன். நம்பியாரூரன்; உன்னைத் தரும்படி நம்மை வேண்டிக் கொண்டான். அவனை மணஞ் செய்து கொண்டணைவாயாக" என் றருளிச் செய்தனர். சங்கிலியார் அவர் திருவடிகளில் விழுந்து எழுந்து நின்று "எமது பெருமானே! தேவரீர் அருள் செய்தாருக்கு நான் உரிமைப்பட்டவள் தான்; தேவரீரது அருளைத் தலைமேற் கொண்டேன். பார்வதி

பங்கரே! என்னை அவருக்குக் கொடுத்தருளும்பொழுது ஒன்றைத் திருவுள்ளங் கொள்ளவேண்டும்" என்று சொல்லி மிகவும் நாணத்துடன் தொழுது சொல்வாராய், "நிலைபெற்ற திருவாரூரில் அவர் மகிழ்ச்சியோடும் தங்குவார் என்பதனை அறிந்தருள்வீராக" என்றார். அது கேட்ட இறைவர், "பொற்றொடியாய்! உனைவிட்டுப் போகாதபடியாக ஒரு சபதம் அந்தரங்கமாக அவன் செய்வான்" என்று அருளிச் செய்து மீண்டருளினர். ஆரூர் நம்பிகள்பால் மீண்டு வந்து "உன்னை மணந்து கொள்ளும்படி சொன்னோம். அதற்கு உன்னால் செய்ய வேண்டிய குறை ஒன்றுளது. நீ அவளுடனே தங்கியிருக்கவேண்டும். அதற்காக ஒரு சபதம் செய்ய வேண்டும். அவளிடம் நீ போய் இவ்விரவே சபதம் செய்து கெடுப்பாயாக" என்றருளினர். "இந்த மணம் முடிதற்கு என்னென்ன வேண்டுமோ அதனைச் செய்வேன். அதற்குத் தேவரீர் அருள் புரியவேண்டும்" என்றார் நம்பியாரூரர். "நாம் செய்ய வேண்டியதென்ன" என்று இறைவர் கேட்க, நம்பிகள் "இறைவரைப் பிறபதிகளிலும் சென்று கும்பிட வேண்டிய எனக்கு இது தடையாம்" என்னும் கருத்தினாலே ஒரு குறையினை விண்ணப்பித்தார். இறைவர் திருவடிகளில் வணங்கி, "சபதம் செய்வதற்கு அவளுடன் நான் வந்தால் தேவரீர் திருக்கோயிலில் திருச்சந்நிதியில் தங்காமல் திருமகிழின் கீழே எழுந்தருளியிருக்கவேண்டும்" என்று சொல்லி வணங்கினார். இறைவர் அதற்குடன்பாடு செய்து நீ சொன்னபடியே செய்வோம் என்றருளவே நம்பிகள், "பெருமானே இனி அரியதொன்றில்லை" என்றுகூறி மகிழ்ந்திருந்தனர். அவர் மாட்டு ஒரு திருவிளையாட்டினை மகிழ்ந்தோ? அல்லது சங்கிலியாரது வழிவழி வந்த அடிமையின் பெருமையோ? அறியோம். இறைவர் மீண்டும் சங்கிலியார்பால் முன்பு போல் வந்தருளி, "நம்பி ஆரூரன் உனக்கு விரும்பிச்

சபதம் செய்து தருவன். அங்கு நீ நமது திருமுன்பு செய் வதற்கு இசையாமல் அச்சபதத்தை மகிழடியிலே கொள் வாயாக" என்றருளினர். சங்கிலியார் கைகுவித்து மால யனுக்கறிவரியீர் இந்த அந்தரங்கத்தை எனக்கு அறிவித்த தனுல் அடியேனுகப் பேறுபெற்றேன் என்று கண்ணீர் பெருகத் திருவடியில் வீழ்ந்து வணங்கி எழுந்தனர். இறைவரும் மறைந்தருளினர். சங்கிலியார் அதிசயத் துடன் துயிலுணர்ந்து அவ்விரவில் மேலும் துயிலாராகி இறைவர் அருளை நினைந்தவராய் ஐயத்தோடு அருகில் துயின்ற தாதியரை எழுப்பி இறைவர் செய்கையெல்லாம் அவர்களிடம் சொல்லினர். அவர்கள் பயத்தினுடன் அதிசயமும் மகிழ்ச்சியும் கொண்டு சங்கிலியாரைப் பணிந்தனர். அப்போது திருப்பள்ளி எழுச்சிக்கு மலர் தொடுக்கும் பொழுதாயிடவே எழுந்து திருக்கோயிலுக்குச் சென்றனர். அதுவே காலமாகக் குறித்து நம்பியாரூரரும் அணைந்து இறைவர் செயலைச் சொல்லினுர். சங்கிலியார் உடன் பாட்டினை எதிர் சொல்லாராய் நாணத்தோடும் ஒதுங்கி உள்ளே புகுந்தார். அவர்பின் சென்ற நம்பி ஆரூர் உமக்கிசையும்படிச் சொல்ல இறைவர் திருமுன் போதுவீர் என்று இயம்பினர். சங்கிலியாரின் கனுவினை உரைப்பக் கேட்டிருந்த தாதியர்கள், "எம்பெருமானே! இதற்காக எழுந்தருளி, தேவதேவராகிய இறைவர் திருமுன்பு சாற்றுவது தகாது" என்றனர். நம்பி ஆரூரர், நாதர் செயலறியாதே கொம்பனையீர்! யான் செய்வதெங்கு எனக் கேட்டனர். அதற்கவர்கள் மகிழின் கீழே அமையும் என் றனர். நம்பிகள் மனமருண்டு இவர் சொன்னபடி செய்ய மறுத்தால் ஈது அலராகினு மாகும் ஆதலின் உடன்படவே அமையும் என்று துணிந்து "ஆனுல் வாருங்கள்" என்றுர். ஒப்பிலாத தவத்தையுடைய சங்கிலியாரும் காணத் திருமகிழை மூன்றுமுறை வலஞ்செய்து "இங்குமேவாது நான் அகலேன்" என்று முனைப்பாடிப் புரவலனுராகிய

நம்பிகள் சொல்லிச் சபதம்செய்தார். இவ்வாறு சபதம் செய்ததனைச் சங்கிலியாருங் கண்டு மனங் கலங்கித் தம்பிரான் பணியால் பாவியேனிதனைக்கண்டேன் என்று ஒருபுறமாகச் சென்று அயர்ந்தொதுங்கினர். நம்பிகள் திருக்கோயிலினுட் சென்று, "நாளும் அருள்தர இருந்தீர் செய்தவாறு அழகிது" என்று வணங்கி மகிழ்ந்து சென்றார். அதன்பின் அம்மையார் பூமண்டபத்திற் புகுந்து தம்முடைய பணிமுடித்து இருள்புலரக் கன்னி மாடத்துப் புக்கனர். அன்றிரவே ஒற்றிநகரிறைவர் அந்நகரிற் றொண்டர்களுடைய கனவிற்றோன்றி, "நம்பி ஆரூரனுக்கு நங்கை சங்கிலியை நம் ஏவலினால் உலகறியக் கல்யாணம் செய்துகொடுங்கள்" என்று உணர்த்தினர். தொண்டர்களும் ஊரவரும் அதிசயித்து எழுந்து கூடி மிக்க மகிழ்ச்சியுடனே தேவர்கள் பூமாரி பொழியக் கண்ணிறைந்த பெருஞ்சிறப்பில் இறைவர் அருளியவாறே கலியாணம் செய்தனர்.

முன்னை விதிப்படியே திருவருள் வழியே மணஞ் செய்துகொண்ட நம்பிகள் இலக்குமியின் அழகையும் வென்ற சங்கிலியாரின் பெண்மை நலத்தைக் கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அமர்ந்தினி திருந்தார். இவ்விருவர்களின் புலவியிலே இடையே போந்த ஒரு கணம் ஒரூழியாகவும், புணர்ச்சியிலே ஒரூழி ஒரு கணமாகவும் கழிந்தன. இவ்வாறு திருவொற்றியூரில் இறைவரைத் தொழுது நம்பிகள் இனிதமர்ந்திருந்தார். காலங்கள் பல கழிந்தன. சந்தனப் பூம்பொதிய மலையிற் பிறந்து சந்தனத்தின் நறுமணம் தோய்ந்து நீர் நாட்டின் வழியே வளர்ந்துவந்த தென்றற்காற்று அங்கு அணைந் தது. திருவாரூரிலே தியாகேசப் பெருமான் வசந்தங் கொண்டருளும் வகையை நம்பியாரூரர் மிகநினைந்தே யேசற்றார். "பத்திமையும்" என்ற திருப்பதிகம்பாடி "எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என்னாரூ ரிறைவனையே"

என்று மிகவும் ஏங்கினர் ; நொந்தார். ஒருநாள் மிக நினைந்துகொண்டு சபதத்தினையும் கடந்து திருவொற்றி யூரை நீங்கி அகன்று சென்றனர். சங்கிலியார் அவரை நினைந்து கொண்டபடியே திருப்பணிகள் செய்து கொண்டு திருவொற்றியூரில் தங்கியிருந்தனர்.

பலகாலங்கள் கழிந்தன. நம்பியாரூரர் திருக்கயிலையி லிருந்து வந்த வெள்ளையானையிலேறிச் சேரமான் பெருமானுடன் திருக்கயிலைசென்று சேர்ந்து கணத் தவராகி முன்னைப் பணியிலமர்ந்தனர். சங்கிலியாரும் அம்மையாரின் அருளாலே கயிலைசேர்ந்து அநிந்திதையா ராகி முன்போல அம்மையாருடைய சேடியராய்த் தமது முன்னைப் பணியிலமர்ந்தனர்.

கன்னிமாடங்கள் அமைத்து அதில் கன்னியர்கள் அமர்ந்து திருத்தொண்டு செய்து வாழ்ந்து காலங் கழிக் கும்வழக்கம் முன்னாளில் நம் நாட்டிலிருந்தது. அக்கன்னி மாடங்கள் அவர்கள் தொண்டு செய்யும் கோயில்களின் அமைந்திருக்கும். பதியோர் இசைவினால் அமைக்கப் படும். தகுந்த காவலுடனிருக்கும். கன்னியர் பொது மக் களின் பார்வைக்குள்ளாகாது தனித்திருந்து தொண்டு செய்யும் வசதிகளுடன் திரையிட்டுப் பணிசெய்வார்கள். உயர்ந்தகுலப் பெண்கள் திரையிட்டுச்செல்லும் வழக்கமு மிருந்தது. இக்கன்னியர் தம்தம் குடும்பங்களினின்றும் நீங்கித் தோழிமாருடன் வாழ்வர். பல கன்னியர்கள் ஒருங்குவாழும் மாடங்களை அமைத்து இப்போது கிறித்து வர்களுள் உரோமன் கத்தோலிக்கப் பிரிவினர் இவ்வழக் கத்தைக் கையாளுகிறார்கள். அதற்கு " நன்னெறி " (Nunnery) என்று பெயர். பூத்திருத்தொண்டு கன்னிய ருக்கேற்றது. அது காலங்களுக்கேற்ப விதிப்படி செய்யத் தக்கது.

மணஞ்செய்தபின் பெண்கள் பிரியாது தத்தம் நாய கர்களுடன் வாழ்தலையே விரும்புவர். பிரிந்து வாழ்வது

என்பதெல்லாம் இந்நாட்கோர நாகரிகத்திலுல் விளைந்த கேடுகளாம்.

சங்கிலியார் சந்நிதி திருவொற்றியூர்த் திருக் கோயிலில் தனியாகத் திருமதிலின் பக்கம் கிழக்கில் உள்ளது. நம்பியாரூரருடன் ஒருங்கே எழுந்தருளியுள்ளார்.

திருக்கோயிலிற் பெண்களைக் காமக்கண்ணோடு பார்க்கலாகாது என்பது விதி. இங்கு ஆரூர் நம்பிகள் அவ்வாறு கண்டாரே ? எனில் அதுவேறு. அது முன்னை நிலையில் திருக்கயிலாயத்தில் திருநந்தனவனத்தில்கண்ட காட்சியின் தொடர்ச்சியாக நிகழ்ந்த ஊழின் வயத்தால் நிகழ்ந்ததாகும். அது விதியாகாது. விதி விலக்காமென்க. " பண்டைவிதி கடைகூட்டப் பரவையாரும் கண்டார் " என்றது காண்க. முன்னர்க்கண்ட காட்சியின் பயனை இப்பிறவி நேர்ந்ததும் காண்க. பரவையார் காட்சியுமிவ்வாறேயாகும்.

# 3. கமலினியார்—பரவையார்

திருக்கயிலாயத் திருமலையில் உமையம்மையாருக்குப் பணிவிடைசெய்யும் சேடிமார்கள் இருவர்கள். ஒருவர் கமலினி என்பார். மற்றவர் அநிந்திதையார். இவ்விருவர்களும் திருநந்தனவனப் பணிசெய்பவர்கள். ஒருநாள் இறைவருக்கு அப்பணி செய்யப் போந்த ஆலாலசுந்தரரை இவ்விருவரும் கண்டார்கள். காட்சி நிகழ்ந்தது. இது அகப்பொருள் நூல்களுட் பேசப்பட்டுள்ளது. அது காரணமாக இரு திறத்தவர்களுக்கும் தென்றிசையில் போய்ப் பிறக்கும்படி ஆணை பிறந்தது. இதுபற்றி அநிந்திதையார் வரலாற்றில் சொன்னோம். அவ்வாணையின்படி கமலினியார் திருவாரூரில் உருத்திரகணிகையர் குலத்தில் வந்து பிறந்தனர்.

இந்த உருத்திரகணிகையர் குலத்தைப் பற்றிப் பல கருத்துக்கள் வெளிவந்துள்ளன. "உருத்திரகணிகைமாராம் பதியிலார் குலத்துட்டோன்றி" என்று சேக்கிழார்பெருமான் அருளியுள்ளார். சிவபெருமானைத் தவிர வேறு பதியில்லாதவர்களுடைய குலம் என்று பொருள் கொள்கிறார்கள். சிவாகமங்களில் இதனைப்பற்றிப் பேசப் படுகிறது. சிவாசாரியர்களையே நாயகர்களாகக்கொண்டு கோயிற்பணிகளையே செய்யும் குலம் என்று சொல்லப்பட்டுள்ளது. அக்குலம் இப்போது வழக்கிலில்லை. அவர்களே நாளடைவில் பரத்தையராயினர் என்று சிலர் கொள்கிறார்கள். இக் கொள்கை மறுக்கப்பட்டது. பரத்தையர் மரபு பற்றிப் பழந்தமிழ் நூல்களுட் பேசப்பட்டுள்ளது. பரத்தையர் குலம் வேறு. சேக்கிழார் உருத்திரகணிகையர் குலம் வேறு என்று விளக்கமாகக் கூறியுள்ளார். குலங்களின் உயர்வு தாழ்வுபற்றி இங்குப் பேச்சில்லை. பரவையார் உருத்திரகணிகையர் குலத்தில் பிறந்தார் என்பது மட்டும் துணியலாம். அக்குலத்தவர்களைப் பற்றியும் அவர்கள் தொழில் முதலிய வாழ்க்கைத் திறம் பற்றியும்

சிவாகமங்களில் பேசப்பட்டுள்ளது தெரிகிறோம். இதுபற்றிய விசாரணையை இவ்வளவில் நிறுத்துவோம். இவ்வாறு வந்து பிறந்த அவருக்குச் சான்றோர் இறைவனது நாளாகிய திருவாதிரை நன்னாளில் **பரவையார்** என்று நாமஞ் சூட்டினர். காப்புச் செய்தனர். சுற்றத்தார் கூடித் திங்கள் செல்லும் அவ்வப்பருவங்களிலே விழாவணியெடுத்தனர். மலர் மங்கையே இங்கு வந்தனள் என்று சிந்தை மகிழ்ச்சி பொங்க அவர் தளர்நடைப் பருவஞ் சேர்ந்தனர். மானிளம் பிணையோ தெய்வ வளரிள முகையோ தேனிளம்பதமோ கடலின் வளரும் இளம பவளத்தின் கொடியோ இளஞ்சந்திரனின் இளங்கதிர்க் கொழுந்தோ மன்மதன் இளம்பருவத்திற் கற்கும் தனி இளந் தனுவோ என்னும்படி இனிய அழகு நாளும் வளர்ந்து வந்தது. கழங்கும் பந்தும் அம்மனையும் ஊசலும் ஆடினர். பாடும் இன்னிசையும் கற்றனர். பார்வதியம்மையாரின் திருவடிகளிற் சேரும்படி எழுந்த குறிப்புடனே உருகப் பாடினர். பிள்ளைப் பருவத்தின்மேல் வரும் பேதைப் பருவம் நீங்கினர். வனமுலைகள் கோங்கரும்பினை வீழ்ப்ப உயர்ந்தன. முன்னை நிலையின் உண்மையும் தோன்றும்படி வளர்வாராயினர். புற்றிடங் கொண்ட பெருமானைத் தினமும் சென்று வழிபடுவார். அவ்வாறு செல்லும் ஒருநாள் அணிசிலம்பும் அடிகள் மண்ணுலகத்தை வென்றனம் என்று ஆர்க்கவும், அணிகிளர் காஞ்சி அல்குல் அரவுலகை வென்றனம் என்று ஆர்ப்பவும், மேகம் குழலுக்குத் தோற்றமையால் விண்ணுலகமும் பணியும் என்று கூந்தலிற் சூடிய மலர்களில் மொய்த்த வண்டுகள் எழுந்தார்ப்பவும் நடந்துசென்றனர். அப்போது நம்பியாரூரர் நற்பெரும்பான்மை கூட்ட அவரைக் கண்டனர். கற்பகத்தின் பூங்கொம்போ! காமன் பெருவாழ்வோ! அழகு என்னும் பொருள் செய்த புண்ணியத்தின் புண்ணியமோ! புயல் சுமந்து பவளமலர் மதிபூத்த

விரைக்கொடியோ ? அற்புதமோ ? சிவனருளோ ? இது என்று அதிசயித்தார்.

" கற்பகத்தின் பூங்கொம்போ ? காமன்றன் பெருவாழ்வோ ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ? புயல் சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ ?
அற்புதமோ? சிவனருளோ? அறியேனென் றதிசயித்தார்.
(தடுத் - புராணம் - 140)

(குறிப்பு :—இங்குக் " கற்பகத்தின் பூங்கொம்பு " என்றது இந்திராணியையும் " காமன்றன் பெருவாழ்வு " என்றது இரதியையும் குறிக்குமென்று சிலர் கருதுகிறுர்கள்? அது பொருந்தாது. என்னை? தன்னுல் விரும்பப்படும் ஒரு பெண்ணை அயலார் மனைவியோ? என்று கருதுதல் தகாது. கற்பினியலுக்கு மாறுபாடு என்பதாம்.)

இவ்வாறெல்லாம் நம்பிகள் எண்ணி நின்ருர். படையுடன் மன்மதனும் நடுவே நின்ருன். நம்பிகளைப் பண்டை விதி கடைகூட்டப் பரவையாரும் கண்டார். இதுவும் திருக்கயிலாயத்தில் திருநந்தனவனத்தில் காட்சியின் தொடர்ச்சியேயாம். இக்காட்சி அயலறியா மணத்தை விரும்பி நிகழ்ந்தது. அது பரவையார்பால் முன் எய்தாத தொரு வேட்கையை விளைத்தது. நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்ற நான்கு பெண்மைக் குணங்களையும் வலிந்து மேலெழச் செய்தது. அது கண்கொள்ளாத அழகு பொழிந்த கவின்மேனி ஒளிபரப்பத் தேவ ஒளியுடன் விளங்கும் ஆரூரரைக் கண்டவுடன் நிகழ்ந்தது. இவர் தம் முன்னே வந்தெதிர் தோன்றும் முருகனே ? தன்னேரில் மன்மதனே ? செஞ்சடைப் பெருமான் திருவருள் பெற்றுடையவரோ ? என் மனத்தைத் திரிவித்த இவர் யாரோ ? என்று நினைந்தார்.

" முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனே ? பெருகொளியாற்
றன்னேரில் மாறனே? தார்மார்பில் விஞ்சையனே?

மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனே?
என்னேயென் மனந்திரித்த விவன்யாரோ?வென நினைந்தார்.
(தடுத - புரா - 144)

ஆரூரர் பெருமான் பரவையாரைக் கண்டபோது வேறு ஒரு பெண்ணைக் கருதாமல் குணப்பண்புகளின் பிழம்பு உருவமாகக் கண்டார். பரவையார் ஆரூரரைக் கண்டபோது முருகனோ—மாரனோ—விஞ்சையனோ—அருள் பெற்றுடையனோ என்றிவ்வாறு பிறர்களின் உருவமாகக் காண்கிறார். இவ் வேறுபாடு கருதத்தக்கது. பெண்களுக்கு வேறு ஒருவரைத் தம் நாயகர்களாக மதித்தலில் பிழையில்லை. ஒருவரே பல பெண்களுக்கு நாயகராக இருக்கும் வழக்குண்மையால் என்க

முருகப்பெருமானை முதலில் நினைந்தார்—கழிபேரழகும் பெருங்கருணையுமுடையவர் முருகப்பெருமான். நினைக்குமுன்னரே எதிரில் காட்சி கொடுத்தருளும் பெருங் கருணையுடையவர். பெரியபுராணத்துள் ஆறு இடங்களில் முருகனைப்பற்றிப் போற்றப்பட்டுள்ளது. அவற்றுள் முதலிடம் இது. அவரை ஒத்த அழகுடையவன் மன்மதன். ஆனல்அவன் கருவேள் எனவும் முருகன் செவ்வேள் எனவும் பெறுவர். அவன் இறைவர் கண்ணிற்பட்டு மீண்டும் அருவமாய் நிற்கின்றான். ஆதலின் அவனை எதிரில் காணுதல் அரிதாகும். ஆதலின் அவனை இரண்டாவது நினைந்தனர். அடுத்தபடியாக வாடாதமாலை சூடிய விஞ்சையனை நினைந்தார். அரனருளில்லாத வழியிற் றம்மனம் செல்லாது ஆதலின் சிவனது மெய்யருள் பெற்றுடையவனோ என்றார். இவ்வாறெல்லாம் எண்ணித் தயங்கினர். அளவிறந்த காதலால் அவர் மனம் ஆரூர் நம்பிகள்பாற் சென்றது. குண நான்கும் ஒருபுடை சாய்ந்தன. எனினும் இறைவரைத் தொழும் அன்பே கைக்கொண்டு அவரை வலிதாக்கியது. திருக்கோயிலினுட் போய்ப் புகுந்த பின் வழிபாடு முடித்துக்கொண்டு ஒருவாறு புறப்பட்டனர்.

நம்பிகள் அங்கிருந்தாரை இவள் யார்? என்று வினவ, அவர்கள் **நங்கை பரவையார்**; தேவர்கள் தரத்தார்க்கும் சேர்வதற்கரியவர் என்று சொல்ல, அந்தப் பெயரையே பலபடியாலும் சொல்லிச் சுவைத்தனர்.

“ பேர்பரவை பெண்மையினிற் பெரும்பரவை விரும்பல்கு
லார்பரவை அணிதிகழு மணிமுறுவ லரும்பரவை
சீர்பரவை யாயினாள் திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை யிடைப்பட்ட வென்னுசை யெழுபரவை ”

(தடுத் - புரா - 147)

இவ்வாறு பலவும் நினைந்து இறைவர்பாற் சென்று இவளைப் பெறுவேன் என்று நம்பிகளும் போய்த் திருக்கோயிலினுட் புகுந்தனர். அதற்கு முன்பே பரவையார் இறைவரை வணங்கியபின் கோயிலினின் றொருவழியே வந்து தமது மாளிகை சேர்ந்தனர். நம்பிகள் வெளிப் போந்து பரவையாரைத் தேடித் தேவாசிரியனை அடைந்திருந்து பலவாறும் வருந்தி யமர்ந்திருந்தனர். “ ஈசனுரருள் எந்நெறிச் சென்றதே?” என்று ஆய்ந்தார். மாலைப் போதும் வந்தது. வானம் இருண்டது. நிலாவும் வந்து ஒளி வீசிற்று. மன்மத பாணங்களாலும், நிலவினாலும், கடலொலியினாலும், தென்றலாலும் ஆரூரர் வருந்தினர். அவரைக்கண்டு நெஞ்சு தயங்கப் போன பரவையாரும், மாளிகையில் நிலாமணி முற்றத்தில் அமர்ந்து வருந்தினர். ஒருவரிடமும் பேசாதமர்ந்தனர். அருகிலிருந்த சேடிதனை நோக்கி “நாம் இறைவரை வணங்கப் போகும் போது எதிரில் வந்தவரார்?” என்று கேட்டார். “ அவர்தாம் இறைவர் அந்தணராய் வந்தாட்கொண்ட சைவமுதற் றொண்டர்—தம்பிரான் றோழர்—நம்பிகள் ” என்றாள். “ எம்பெருமான்தமர் ” என்று கேட்டலும் அவர்பால் வைத்த மனக்காதல் அளவில்லாது வளர்ந்து பொங்கிற்று. நாணம் முதலாம் குணங்கள் நீங்கின. உயிரைமட்டும் தாங்கி மெல்லணையின்மேல் வீழ்ந்தார்.

சேடியர் பனிநீர் தெளித்துச் சந்தனம் பூசினார்கள். உப சரித்தார்கள். இவையெல்லாம் அவரது காதலாகிய தீயை அதிகரித்தது. தீயில்விட்ட நெய்போலாயிற்று. மன்மதன் வாளிகள் அத்தீயிலிட்ட சமிதை போன்றன. மலரமளித் துயிலாற்றாராகித் தென்றலை யாற்றாராகியும், நிலவு மாற்று ராகியும் மயில்போல எழுந்து இவ்வாறு புலம்பலுற்றார். " சேடியர்களே ! இது என்ன அதிசயம் ? நிலாச்சுடுகின் றது ; சந்தனத் தழலைப் பனிநீரிற் குழைத்துத் தடவுங் கொடியிர் ! அதனைத் தவிருங்கள். தென்றலும் அனலாக வீசுகின்றதே ! இராப்போது விடியமாட்டாது நீடிக்கின் றது! பொறையும் நிறையும் தரியா ஆயின ; தனமும் மன மும் உலர்கின்றன. திருவாரூர் இறைவர் நீரேயல்லால் யார் என் துயரத்தை அறிவார் ? உமதன்பில்லார்போல நான் வருந்துவதோ ?" என்றிவ்வாறு பலவும் புலம்பினர்.

" இவர்கள் திருமணத்தை நீங்கள் செய்யுங்கள் " என்று இறைவர் அடியார்களுக்குக் கனவில் உணர்த்தி யருளினர். ஆரூர் நம்பிகள் மகிழும்படி " நங்கைபரவையை உனக்குத் தந்தோம். அடியார்களுக்கும் அறிவித்தோம் என்று அருளினர். பரவையாருக்கும், " ஆரூரனுக்கும் உனக்கும் மணம் விரைவில் நிகழும் என்றருளினர். இருள் புலர்ந்தது. காலையில் அடியார்கள் கூடி இவர்கள் திருமணத்தைத் தக்க பண்பினுல் நிகழ்த்தினர்கள். நம்பி யாரூரர் பரவையாருடன் கூடி அவரது முலைகளாகிய மலையே சார்பாகக்கொண்டு பன்னாளும் பயில்கின்ற யோகம் பரம்பரையில் விரும்பி மகிழ்ந்திருந்தார். சிந்தை யிலும் சென்னியிலும் இறைவரது திருவடிகளை மலர்வித் துத் திருப்பதிகங்கள் பலவும் பாடிப் பரவையாருடன் கூடி விளையாடிச் செல்வாராயினர். ஆரூர் நம்பிகள் இறைவர் முதலடியெடுத்துக் கொடுத்தருளி உணர்த்திய துணை கொண்டு அடியார்களைத் துதித்துத் " திருத்தொண்டத் தொகை " பாடியருளினர். திருத்தொண்டத் தொகையே

சைவத்தின் அடிப்படை என்று சொல்லலாம். இது தரும் பொருட்டே நம்பிகள் தென்றிசையிற் போந்தனர். அதற்காகவே திருக்கயிலையில் நந்தவனத்தில் இரு சேடியர்களின் காட்சி நிகழ்ந்தது.

திருச்சிற்றம்பலம் திருத்தொண்டத்தொகை

தில்லைவா ழந்தணர்தம் மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (1)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பா வாரே. (11)

திருச்சிற்றம்பலம்

ஆரூர் நம்பிகள் நாடோறும் புற்றிடங்கொண்டாரைப் பணிந்து பரவையாருடன் வாழ்ந்திருந்தனர்.

குண்டையூர்க்கிழார் என்னும் வேளாளர் ஆரூர் நம்பிகள் பாதம்பணிந்து அன்பால் ஒழுகிவந்தனர். அவர் செந்நெல்லும் பொன்போன்ற செழும்பருப்பும், வெல்லமும் முதலியனவாகப் பல வளங்களையும் ஆரூர்நம்பிகளுக்குத் திருவமுதாக நாடோறும் வழுவாமல் பரவையார் திருமாளிகைக்கும் படிசமைத்து வந்தார். மழை மறுத்த

மையால் வளஞ்சுருங்கிற்று. படியெடுக்க நெல்லில்லாது வருந்தியவராய்க் குண்டையூர்க்கிழார் இறைவரைவேண்டினார்; இறைவர் அவர் கனவிற்றோன்றி ஆரூரனுக்காக உனக்கு நெல் தந்தோம் என்று அறிவித்துக் குபேரனுக்குக் கட்டளை யிட்டருளினர். அன்றிரவு அவ்வூர் முழுதும் நெல்மலையாகக் குவிந்துவிட்டது. அன்று இரவு விடிந்தவுடன் கிழார்கண்டு "எவ்வுலகில் விளைந்தது இந் நெல் மலை" என்றதிசயித்து, இதனை எடுக்க ஆள்வேண்டி ஆரூர் நம்பிகளிடம் சென்று "இறைவர் உமக்கு நெல்லளித்தார்" என்று மகிழ்ந்து அறிவிக்க அவர் வந்து பார்த்து அதிசயித்து அருகில் உள்ள திருக்கோளிலி என்ற பதியிற் சென்று நெல் எடுக்க ஆள்வேண்டிப் பாடினார்.

"நீள நினைந்தடியே னுமைநித்தலுங்கை தொழுவேன்
வாளன கண்மடவாள் அவள்வாடி வருந்தாமே
கோளிலியெம பெருமான் குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றேன்
ஆளிலை யெம்பெருமானவை யட்டித் தரப்பணியே."

(திருக்கோளிலி - 1)

என்று பரவையார் மாளிகைக்கு இந்நெல்லைச் சேர்ப்பிக்க ஆளிலை—தரவேண்டும் என்று பாடினார். "இன்று இரவில் நம் பூதங்கள் இந் நெல்லைத் திருவாரூரிற் கொண்டு சேர்க்கும்" என்று அசரீரி வாக்கு எழுந்தது. அதுகேட்டு மகிழ்ந்து ஆரூரர் திருவாரூர் சேர்ந்தார். அன்றிரவே திருவாரூர் முழுதும் நெல் மலையாகக்குவிந்து விட்டது. தெருவில் ஆளியங்குவதற்கும் இயலாதபடி நிறைந்துவிட்டது. பரவையார் வியந்து அவ்வவர் மனைகளின் அளவில் உள்ள நெல்லை அவ்வவர்கள் எடுத்துக் கொள்ளுங்கள் என்று பறைசாற்றுவித்துத் தெருவில் ஆளியங்கும்படி செய்தனர். இது பரவையாரின் தன்னலமற்ற விரிந்த திருவுள்ளப் பான்மையை விளக்குகிறது. குண்டையூர் என்பது திருவாரூரின் தென்பால் 10

நாழிகை யளவில் உள்ளபதி. திருவாரூரில் திருப்பங்குனி உத்திரத்திருநாள் பெருஞ்சிறப்பு. அதற்குப் பரவையார் அடியார்களுக்குப் பெருங்கொடை நல்குவார். அமுதளித் தின்புறுவார். ஒவ்வொரு பங்குனி உத்திரத் விழாவிலும் 10000 பொன் செலவு செய்வார். ஒரு பங்குனி உத்திர விழாவிற்கு நம்பியாரூரர் அதற்காகத் திருப்புகலூருக்குச் சென்று வழிபட்டார். அங்குச் செம்பொன்னுகை இறைவர் அருளப்பெற்றுக் கொணர்ந்தளித்தார். அதன்பின் ஒரு விழாவிற்குத் திருப்பாச்சிலாச்சிரமத்தில் பெற்ற நிதிக் குவையும் கொணர்ந்தளித்தனர். அதன்பின் ஒரு விழா விற்குத் திருமுதுகுன்றம் சென்று வழிபட்டு 12000 பொன் அருளப்பெற்ருர். அதனை அங்குத் திருமணி முத்தாற்றில் இட்டுத் திருவாரூர்க் குளத்தில் வரும்படி இறைவரிடம் வேண்டி அவ்வண்ணமே அருளப்பெற்ருர். பொன் பெற்றதனையும், மணிமுத்தாற்றிற் புகவிட்டதனையும், ஆரூர்க்குளத்திற்பெறுவதனையும் பரவையார்க்கு அறிவித் துப் பொன் எடுத்துவரக் குளத்திற்குப் போவோம் என்று அவரை அழைத்தனர். அவர் " இதென்ன அதி சயம் ஆற்றில் இட்டு ஆற்றினில் தேடினுலே பெறுதல் அரிதாகும் ; ஆற்றிலிட்டுக் குளத்தில் தேடினல்வருமோ " என்று சொல்லி நகைத்தனர். " என்னுடைய நாதனரு ளால் அப்படியே பெறுவேன் " என்றுகூறி அழைத்துச் சென்றனர். குளத்தின் வடகீழ்த்துறையில் இறங்கி அன் றைக்குத்தான் இட்டுத்தேடுவார் போலத் தேடினர். சிறிது நேரம் பொன்வரவில்லை. கரையில் நின்ற பரவையார் பின்னும் நகைத்தனர். குளத்தில் நின்ற நம்பியாரூரர் இறைவரைப் பதிகம்பாடினர். அதில் " பரவைதன்செய்ய வாயினகை தாராமேதாரும் ; இமையோர் அறிய முதுகுன் றில் தந்த பொருளைத் தந்து இவள்எதிரே இட்டளத்தைக் கொடுத்தருளும் " (இட்டளம்-துன்பம்) என்று வேண்டி னர். அதில் எட்டாவது திருப்பாட்டில் பொன் வந்தது.

அதனைப்பெற்றுக் கரைஏறிப் பரவையார் திருமாளிகையிற் சேர்ந்தனர்.

அக்காலத்தில் பொன் நாணயம் நமது நாட்டில் வழங்கி வந்தது. ஒரு பொன் 10-12 அணாவாக முன் விற்றது. இப்போது தாமிர நாணயமும் கிடைக்க அரிதாகி விட்டது. பித்தளை நாணயங்கள்—நிக்கல் நாணயங் களும் வழங்குகின்றன. அவையும் அரிதாகிக் காகித நாணயங்கள் வழங்குகின்றன. இது நம் நாட்டில் இந் நாளின் செல்வநிலை. காலக்கொடுமை. திருவோண காந்தன்றளியிலும் ஆரூர்நம்பிகள் எண்ணில் நிதியம் பெற்றுக் கொணர்ந்து தந்தார். நம்பியாரூரர் தலங்கள் பலவற்றையும் சென்று வணங்கித் திருவொற்றியூரிற் சேர்ந்து சங்கிலியம்மையாரை மணந்துகொண்டு வாழ்ந்த வரலாறு முன் உரைக்கப்பட்டது. திருவாரூரை மிக நினைந்து கொண்டவராய்ச் சபதத்தையும் மீறி ஒருநாள் நம்பியாரூரர் திருவொற்றியூரை நீங்கினார். சபதத்தைமீறிய தனால் இரண்டு கண்களின் பார்வையையும் இழத்தார். திருவொற்றியூர்ப் பெருமானைப் பாடினார். வழிக்கொண்டு புறப்பட்டார். திருவெண்பாக்கத்தில் ஊன்றுகோல் அரு ளப்பெற்றார். காஞ்சிபுரத்தில் இடது கண் பெற்றார். தமது உடலில் நேர்ந்தபுதிய பிணியைத் திருத்துருத்தியிற்றீரப் பெற்றார். திருவாரூர் வந்து சேர்ந்தார். திருவத்த யாமத்திற் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபட்டு "மீளா அடிமை" என்ற திருப்பதிகம் பாடினார்.

இதற்கு முன்பே பரவையார் ஆரூர் நம்பிகள்பால் விடுத்த சனங்கள் வந்து, அவர் திருவொற்றியூரிற் சங்கிலியாரை மணந்திருந்த செய்தியெல்லாம் சொல்ல அறிந்தார். அதனால் தரிக்கமுடியாத வெகுளியினால் தரியா நெஞ்சினொடும் தளர்வாராயினர். பூஞ்சயனத்தில் துயில் கொள்ளார் ; விழித்தும் இனிதமரார், நில்லார், செல்லார், மதனன் அம்புகளாற் றுன்புறுவார், மறவார், நினையார்,

என் செய்வார் ; வெம்பும் புலவியோ, பிரிவோ என் றிரண்டி னிடைப்பட்டாராயினர்.

> " மென்பூஞ் சயனத்திடைத் துயிலுமேவார் விழித்து மினிதமரார்
> பொன்பூந் தவிசினிடையிரார் நில்லார் செல்லார் புறம்பொழியார்
> மன்பூவாளி மழைகழியார் மறவார் நினையார் என்செய்வார்
> என்பூடுருக்கும் புலவியோ பிரிவோ இரண்டி னிடைப்பட்டார் "
> (ஏயர்கோ - புரா - 315)

திருமாளிகையிற் பண்டுபோலச் சென்ற பரிசனங்கள் உட்புகாது தள்ளப்பட்டார்கள். அவர்கள் நம்பியாரூர ரிடம் வந்து திருமாளிகையின் புறமும் போகவிடவில்லை என்றறிவித்தார்கள். நம்பிகள் பின் உலகியல்பு கற்ற மாந்தர் சிலர் தம்மைக் காதற் பரவையார் கொண்ட செற்றம் தவிர்ப்பதற்குச் சொல்லிவிட்டார். அவர்கள் போய் எம்பிராட்டிக்கிது தகுமோ என்று பலவும் சொல்லிப் பின்னும் பேத நிலைமை நீதியினல் சிலவற்றையும் அறி வித்து வேண்டவும், பரவையார் மறுத்து அவர் திறத்தில் இந்த மாற்றமுரைத்தால் உயிர்விடுவேன் என்று அவர் களை அனுப்பிவிட்டனர். அவர்களும் புகுந்த படியைச் சொல்லிப் போந்தனர். நம்பிகள் " இனி இதற்கு யாது செயல் " என்று வருந்திப் பெருமானை நினைந்து நைந்து வேண்டினர். பெருமானும் நம்பிகளறிய வெளிவந்து தோன்றினர். நம்பிகள் மகிழ்சிறந்து திருவடியில் வீழ்ந்து வணங்கினர். நம்பியை முகம் நோக்கி " உனக்குற்றது என்னை " என்றருளினர். அவர் " தேவரீரே ! அடியேனை இன்னம் எடுத்தாளவேண்டும். அங்குத் திருவொற்றி யூரில் நீரே அருள் செய்யச் சங்கிலியை மணந்த நிலை யெல்லாம் பரவை அறிந்து அவளிடம் நான் வந்தால் முடிவேன் என்று துணிந்திருந்தாள். நான் செய்வது என்னை ? யான் உமக்கு அடியேனகில், நீர் எனக்குத் தாயினும் நல்ல தோழனராகில் அவள் மாளிகை வரையும் இவ்விரவே போய் அவளது புலவி தீர்த்துத் தாரும் "

என்றார். இறைவர், “ நீ துன்பம் ஒழி ; நாம் உனது தூத னாக இப்பொழுதே போகின்றோம் ” என்றருளிப் புறப்பட்டார். அணுக்கச் சேவகத்தில் உள்ளோர், பூதகண நாதர், பெரியதேவர் (நந்தியெம் பெருமான்) குபேரன், முதலாயி னோர் புடைசூழ இறைவர் பரவையார் திருமாளிகையை நோக்கித் திருவீதியிற் போயருளினார். சூழவந்தோர் புறத் திலே நிற்கத் தம்மை யர்ச்சிக்கும் சீலமுடைய மறைமுனிவ ராகிய கோலத்தினோடு அடைத்த திருவாயில் முன்னின்று, “பாவாய்” என்றழைத்தனர். ஒன்றும் துயிலாதிருந்தயர்வ ராகிய பரவையார் பரமனார் தாம் வந்தாரென்று அறியா தவராய்ப் “ பூசனை புரிவார் இந்தப் பாதியிரவில் அணைந்த தென்னோ ?” என்று பயப்பட்டு வந்து கதவம் திறந்தார். அவரை வணங்கி “ முழுது முறங்கும்பொழுது தேவரீர் இங்கு எழுந்தருளிய தென்னோ ?” என்றார். “ நங்கையே நீ மறுது செய்யில் நான் வந்த காரியத்தைச் சொல் வேன் ” என்று இறைவர் சொல்ல, அதற்குப் பரவை “ நீர் அதனை அருளிச் செய்தால் இங்கு எனக்கு இயன்றால் இசையலாம் ” என்றார். “பரவையே ! நம்பி இங்குவர வேண்டும்” என்று சொல்ல அவர், “நம் பெருமை மிகவும் நன்று ! பங்குனித் திருநாளுக்குப் பண்டுபோல் வருவா ராகி இங்கெனைப் பிரிந்துபோய் ஒற்றியூர் சென்று அங்கே சங்கிலித் தொடக்குண்டாருக்கு இங்கொரு சார் வுண்டோ ? இந்த இரவில் நீர் வந்து சொன்ன காரிய மழகிது ” என்றார். இறைவர் அதுகேட்டு நங்கையே ! “ நீ நம்பி செய்த குற்றங்களை மன்னித்துக்கொள்ளாது கோப நீங்குதற்கல்லவா நான் உன்னை வேண்டிக்கொண்டது. ஆதலின் மறுக்காதே ” என்றார். பரவையார், “ இது காரியமாக நீர் இந்த வாசலுக்கு வந்தது உமது பெருமைக் குத் தக்கதன்று ; ஒற்றியூர் உறுதி பெற்றார் வருவதற்கு இசையேன், நீரும் போம் ” என்று மறுத்துச் சொன்னார். இறைவர் அதனைக் கேட்டு நம்பி தன் வெம்புறு வேட்கை

காணும் திருவிளையாட்டினை விரும்பிப் பரவையார் மறுத்ததே கொண்டு மீண்டார்.

நம்பிகள் இறைவரது வரவை மிக ஆவலுடன் எதிர்பார்த்தவராய் வழியெதிர்கொள்ளப்போவதும் வருவதுமாகி வருந்தியிருந்தனர். இறைவரது வரவினைக் கண்டு திருவிளையாட்டினை உணராராகி, "இன்று இவள் வெகுளியெல்லாந் தீர்த்துவந்தீர் ; அன்று என்னை ஆட்கொண்ட அதற்குத் தக்கபடியே செய்தீர்" என்று முகமன் கூறினர். இறைவர், " நம்பி ! நீ சொல்ல நாம் போய் உன் நிலைமையெல்லாம் அவளுக்குச் சொல்லி நாமே வேண்டியிடவும் மறுத்துவிட்டாள்" என்று சொன்னர். நம்பிகள் நடுக்கமடைந்து "தேவரீர் அருளிச்செய்தால் பரவையோ மறுக்க வல்லாள் ! நாங்கள் அடிமைக்குத் தகாதவர்கள் என்பதின்று அறிவித்தீர். இன்று என் அடிமை நீர் வேண்டாவிட்டால் அன்று என்னை வலிய ஆட்கொண்டதெதற்கு ? அவளிடம் நான் சேரும்படி செய்யீராகில், உயிர் விட்டுப்போகும் என்று சொல்லி வீழ்ந்தனர்." இறைவர் அவரை அருளால் நோக்கி " நாம் இன்னும் அவள்பாற் போய், அவளை நீ இப்போதே சேரும்படி சொல்கின்றேம் ; வருத்தத்தை விடுக " என்றார். நம்பிகள் போற்றினர். இறைவர் முன்பு தம்முடன் வராதோர்களும் சேவித்துப் புடை சூழத் திருமாளிகை சேர்ந்தனர். பரவையார் அருச்சகர் போன பின்பு அவ்வேடத்துடன் வந்தவர் இறைவரே என்னும் அதிசயம் பலவும் தோன்ற அறிவுற்றுக்" கெட்டேன் ; எம்பிரான் முன் எதிர்மொழி புகன்று என்செய மறுத்தேன் என்பாராய்த் தொண்டர்க்காக அருச்சிப்பார் கோலங் கொண்டு அணைந்த இறைவரை யான் உட்கொண்டேனில்லை. பாவியேன் " என்று வாயிலே பார்த்து வருந்தினர். இறைவரும் தாமாந்தன்மை அறிவுறு கோலத்தோடு மாளிகையில் வந்து புகுந்தனர். இறைவரும் கணங்களும் நிறைதலாலே அத்திருமாளிகை, திருக்கயிலைத் திரு

மலையே போன்றிருந்தது. இறைவர் பரவையாரை நோக்கி "உரிமையால் ஆரூரன் ஏவ மீளவும் உன்னிடம் வந்தோம் முன்பு போல மறுதே. நம்பி வரப் பெற வேண்டும்" என்றூர். அவர் தொழுது "முன் வந்தவர் நீரோ ?" என்று சொல்லி "அன்பர்க்காக, வெளிவந்து செய்யபாதம் வருந்த இங்குமங்குமாகச் சென்று உழல்வீராகில் இசையாது என் செய்ய வல்லேன்" என்றூர். "நங்கை நின் தன்மைக் கேற்ற நன்மையே செய்தாய்" என்று சொல்லி விரைந்து சென்றருளினர். நம்பிகள்பால் வந்து, "பரவையின் கோபம் தணிவித்தோம். இனி நீபோய் அவளிடம் சேர்வா யாக" என்றருளினர். நம்பிகள் தொழுது, "பந்தமும் வீடும் நீரருள் செய்யும்படி செய்தீர் ! இனி எனக்கு என்ன இடர் உளது ?" என்றூர். இறைவர் திருக்கோயில் புகுந்தருளி னர். நம்பிகள் மாலை, கலவைச் சேறு முதலியவைகள் ஏந்திப் பரிசனங்கள் சூழப் பரவையார் திருமாளிகை யணைந்தலர். பரவையார் மாளிகை அலங்கரித்து விளக் கேற்றிச் சாந்து நீவித் தோழியர் சூழ வாயிலில் வந்து நம்பிகளை எதிர்வரவேற்றூர். நம்பிகள் வந்து கண்ட போது காதல் வெள்ளங் கரை காணுது பொங்க நாணும் அச்சமும் வர வணங்கி நின்றூர். நம்பிகள் அவருடைய செங்கை பற்றி மாளிகையுட் புகுந்தனர். இருவரும் இறைவ ஞர் இடையாடிச் செய்த திருவருட் கருணைத் திறத்தினைப் போற்றி ஒருவருள் ஒருவர் மேவும் நிலைமையில் உயிர் ஒன்றுகி மகிழ்ந்திருந்தனர்.

கழறிற்றறிவார் என்னும் சேரமான்பெருமாளுயனூர் திருவாரூருக்கு எழுந்தருளிய பொழுது பரவையார் திரு மாளிகையிற் சேர்ந்தனர். அவர் விளக்கும், நிறைகுட மும், பூ மாலைகளும் புகையகிலும் எங்கு மடவார் எடுத் தேந்த எதிர்கொண்டார். பசும்பொற்காலமளி மீது அவரும் நம்பிகளுமுடனிருப்ப இருவருக்கும் நிறைபூசனை கள் முறையின் அமைத்தார். நம்பிகள் விரும்பினபடியே

அரசர்க்கேற்ற சிறப்பினுமேல் அடியார்க் கேற்கும்படியாக அன்பினுடன் அமுது சமைத்தார். பரிகலங்கள் இரண்டு படியாயியற்றுதலும் நம்பிகள் பெருமானை உடனே யமுது செய்யவேண்டியபடியே இருவரும் ஒருங்கேயிருந்தமுது செய்ய அழைத்துவந்தார். பின்னர்ப் பசுங் கற்பூரம் விரைக்கலவை வனிதையர்கள் எடுத்தேந்த மான்மதச் சாந்து பூமாலை கொடுத்துப் பஞ்சவாசமுடன் அடைக்கா யமுதம் ஏந்தினர். இவ்வாறு பலநாளும் அரசர் பெருமானைத் தமது திருமாளிகையில் உபசரித்தார். பின்னர்ப் பரவையார் இசைவினல் நம்பிகள் சேரநாட்டுக்கு எழுந் தருளினர்.

பின்னர் சேரமானரும் நம்பிகளும் திருக்கயிலைக்கு எழுந்தருளிய பின் ஆண்ட நாயகியார் அருளாலே பரவையாரும் முன்னை நிலையினையடைந்து முறையே கமலினியாரும் அநிந்திதையாருமாக ஆகி உமையம் மையார் திருக்கோயிலிற் சேர்ந்து தமது முன்னைய பணி விடைகள் செய்து இன்பமுற்றமர்ந்தனர்.

## 4. இசை ஞானிப் பிராட்டியார்

இவர் கமலாபுரம் என்னும் திருவாரூரில் சைவ கௌதம கோத்திரம் ஞானசிவாசாரியார் பரம்பரையில் அவதரித்தவர் என்று திருவாரூர்க் கல்வெட்டினுல் அறிகின்ருேம். சடையனுரின் தேவியார். நம்பியாரூரரின் தாயார். "ஆரூர்த் திருமூலத்தானத்தே அடிப்பேராரூரன்" (தேவா) என்றதனுல் அறியப்படுகிறபடி திருவாரூர்ப் பெருமானுக்கு அடிக்குடியாக இவர் குடும்பமிருந்தபடியால் அடிப்பேராக நம்பிகளுக்கு "ஆரூரன்" என்று பேரிட்டார் சடையனுரது மனைவியார். இவரைப் புகழ்வது எனக்கு இயலாதது; எவர்க்குமியலாதது என்று அருளியுள்ளார் சேக்கிழார் நாயனுர்.

"ஒழியாப் பெருமைச் சடைய னுரரிமைச் செல்வத் திருமனையார்
அழியாப் புரங்க, ளெரித்தழித் தாராண்ட நம்பிதனைப்ப யந்தார்
இழியாக் குலத்தி லிசைஞானிப் பிராட்டியாரை யென்சிறுபுன்
மொழியாற் புகழ முடியுமோ? முடியா தெவர்க்கு
[முடியாதால்"

---

## 5. சடங்கவி சிவாசாரியாரின் மகளார்

திருமுனைப்பாடி நாட்டிலே திருநாவலூர்என்றதொரு பதியுண்டு. அது மறையவர் வாழும்பதி. அதில் சிவவேதியர் மரபிலே சடையனுர் என்பவர் வாழ்ந்தார். அவருடைய மனைவியார் கற்பின் வாழ்க்கை இசைஞானியார். இவ்விருவருக்கும் மகனுராக நம்பி ஆரூரர் அவதரித்தார். அவரது இளமையிலேயே நரசிங்க முனையர் என்னும் நாடுவாழரசருக்கு அபிமான புத்திரராகி வளர்ந்தார். திருமணப்பருவம் வந்தது. புத்தூரில் ஒத்த குடிமரபிற் சடங்கவி சிவாசாரியாரின் மகளாரை மணம்பேசச் சிலரை

சடையனுர் அனுப்பினுர். அவர்கள் அவரிடம் சென்று மகட்பேசினர். குலமுதலறிவின் மிக்கார் கோத்திர முறை முதலியவற்றைத் தேர்ந்தனர். சடங்கவியாரும் மணமிசைந் தனர். சடையனுரிடம் அறிவிக்க, அவர் மகிழ்ந்து அரசர் திருவுக்கேற்ப நாட்குறித்து மணவோலை ஆடவரும் பெண்களும் ஏற்றுக்கொண்டு மணவினைகளையெல்லாம் இருதிறத்தாரும் மங்கலம் பொலியச் செய்யத் தொடங்கி ஞர்கள். ஏழாநாளில் முளை சாத்திஞர்கள். விதிப்படி நம்பியாரூரருக்குக் காப்புநாணணிந்தனர். கணிதநூற் புலவர் சொன்ன வேளை வந்தணையு முன்னர் நம்பியாரூரர் மணக்கோலங்கொண்டனர். மணக்கோலத்துடனே மண எழுச்சியாகப் புத்தூரை அடைந்தனர். மணமகனுரைப் பெண்கள் கண்டு களித்தனர். "கண்களெண்ணிலாத வேண்டுங் காளையைக் காண" என்பாரும், "பெண்களி லுயர நோற்ருள் சடங்கவிபேதை" என்பாரும், "மண்களி கொள்ளவந்த மணங்கண்டு வாழ்ந்தோ" மென்பாரு மாயி னர். இவ்வகையாகக் கண்டோர் களிகூர மணமகனுகிய நம்பியாரூரர் மணப்பந்தலினுள் வந்து மணவரையில் அமர்ந்தனர். மணமகளாராகிய சடங்கவி மகளாரும் வந்து உடன் அமர்ந்தனர்.

அப்போது இறைவர் ஒரு கிழவேதியர் கோலத்துடன் வந்து இந்த " நம்பியாரூரன் என் அடிமை " என்று வழக் கிட்டு அடிமை யோலையும் காட்டினர். அதனை நம்பிகள் கீறி யிட வழக்கு முற்றியது. அனைவரும் வழக்குத் தீர்க்கத் திரு வெண்ணெய் நல்லூரில் சபையோர்களிடம் சென்றனர். அந்தச் சபையோர் மூலவோலையைப் பார்த்து விசாரணை செய்து நம்பி அடிமைதான் என்று தீர்மானித்தனர். வந்த வேதியர் மறைந்து ஆகாயத்தில் கோலங்காட்டி யாட் கொண்டனர். நம்பிகளும் ஆளாகிப் பணிசெய்யத் தொடங்கிப் போயினர்.

இவ்வாறு சடங்கவிமகளாரின் மணம் விலக்கப்பட்டது. அவரும் வேறொரு தவமும் செய்யாமல் நம்பிகளை ஒழியா துணர்ச்சியிற்கண்டு கொண்டிருந்தார். அவ்வழியாலே உயர் சிவலோகத்தையும் எளிதிற் பெற்றனர். யோகவழியாலே நம்பிகளைத் தியானபூர்வமாக அடைந்தவர்கள் சிவலோகமடைகுவர் என்ற உண்மை பெருமிழலைக் குரும்ப நாயனர் வரலாற்றினலும் உணரப்படும்.

> அயலோர்தவ முயல்வார் பிறரன்றே ! மணமழியும்
> செயலானிகழ் புத்தூர்வ ந சிவவேதியன் மகளும்
> உயர்நாவலர் தனிநாதனை யொழியாதுணர் வழியில்
> பெயராதுயர் சிவலோகமு மெளிதாம் வகைபெற்ருள்.

உணர்ச்சியினல் அந்த வகையினல் நம்பிகளைப் பெற்றதேயன்றி அதனலே சிவலோகத்தையும் எளிதாகப் பெற்ருள் என்பதாம். இங்கு மணப்பந்தலிலமர்ந்ததே யன்றி மணச்சடங்குகளாவது மணமாவது நிகழவில்லை. அந்த மணமகனையே ஒழியாது தியானித்துநின்று வாழ்நாள் கழித்தார். அதனலே அவரையும் பெற்றனர். சிவலோகமும் பெற்றனர். மணம் நிகழாவிட்டாலும் வேறு மணமும் செய்யவில்லை. அந்த மணமகனையே பெற்ருர். இந்நாளில் விவாகரத்து, மறுமணம், விதவாவிவாகம், மேலும் மேலும் மறுமணங்கள் என்றெல்லாம் யாதொரு குறிக்கோளுமின்றி வெறும் மிருகக் காமத்திற்காகவே வாழும் கோர நாகரிகத்துடன் இதனை ஒப்பிட்டு உண்மை வாழ்க்கையின் குறிக்கோளையும் இயல்பையும் உணர்ந்து ஒழுகினல் மக்கட் சமூகம் நலம்பெறும். திலகவதியம்மையார் வரலாற்றையும் காண்க.

# 6. திருநீலகண்டநாயனூர் மனைவியார்

சிதம்பரத்திலே வேட்கோவர் (குயவர்) மரபிலே ஒரு பேரடியார் இருந்தார். அவர் சிவபக்தியிற் சிறந்தவர். அரனடிமைத்திறத்தில் அழுந்தியவர். சிவனடியார் பத்தியிலும் சிறந்தவர். மட்கலங்களை ஆக்கித் தம் அமுதுக்கு வழிசெய்து கொண்டார். ஓடுகளை அடியார்களுக்கு அளித்துவந்தார். அவர் பெயர் திருநீலகண்டர் என்று வழங்கினர். அவரது மனைவியார் அருந்ததிக் கற்பின் மிக்கவர்; அழகினில் இலக்குமியினும் மேம்பட்டவர். உலகிடர் நீங்க விடமுண்டு கண்டத்தில் வைத்துக் காட்டி உலகுய்யக் கொள்வதனுல் இறைவரது திருநீலகண்டத்தில் அளவில்தாத பத்தி செய்வார்களாய் இவ்விருவரும் இயல்பாக இல்வாழ்க்கை நடத்தி வந்தனர்.

அவர் ஒருநாள் ஒரு பரத்தையிடம் நண்ணி அணைந்தனர். அதுகொண்டு மனைவியார் ஊடல் கொண்டனர். அவர் வேண்டுமளவும் சொல்லி மெய்யுற அணையும் போதில் " எம்மைத் தீண்டுவீராயின் திருநீலகண்டம் " என்று ஆணையிட்டனர். இந்த ஆணை கேட்ட பெரியவர் பெயர்ந்து நீங்கினர். " எம்மை " என்றதனுல் மற்றை மாதராரையும் என்மனத்திலும் தீண்டேன் " அதாவது நினைக்கவும் மாட்டேன் என்ருர். அதுமுதல் மனைவியார் அந்த இல்லத்தில் இருந்தபடி கணவனுருக்கு வேண்டுவன வெல்லாவற்றையும் பொருந்தும்படி செய்தே இருவரும் இற்புறம் பொழியாமல் அமர்ந்து வாழ்ந்து வந்தனர். அற்புறுபுணர்ச்சியின்மை அயலறியாமை வாழ்ந்தனர். ஆண்டுகள் பலவும் சென்றன. இளமை நீங்கி வடிவுறு மூப்புவந்தது.

இவர்களுடைய நன்னிலைமையை உலகுக்கு அறிவித்துக் காட்டுவதற்காக இறைவர் ஒரு தவச்சிவ யோகியாராக வந்தனர். கையில் ஒரு பலிப்பாத்திர மேந்தி வந்தனர்.

வந்தவரைத் திருநீலகண்டனுர் உபசரித்தனர். அவர் திருவோட்டினை இவர்கையில் கொடுத்து, " இது விலையில்லாதது ; மிக அரியது ; இதில் இட்டனவற்றை யெல்லாம் தூய்மைசெய்ய வல்லது ; ஒப்பற்றது ; இதனை உன்னிடம் வைத்துப் பாதுகாத்து நாம் வேண்டும்போது தருவாயாக " என்று சொல்லிச் சென்றனர். திருநீலகண்டரும் அதனைப்பெற்று ஒரு தனியிடத்துச் சேமமாக வைத்தனர். இறைவர் அதனை அவ்விடத்தினின்றும் போக்கினர். சில நாள் கழிந்தபின் இறைவர் அத்தவ வேடத்துடன் மீண்டும் வந்து திருவோட்டினைக் கேட்டனர். திருநீலகண்டனுர் அதனைப் போய்த் தேடினர். எங்கும் தேடியும் அது காணப்படவில்லை. மீண்டும் வந்து பயத்துடன் " ஐயரே நீர் வைத்த திருவோடு காணவில்லை. அதற்கு ஈடாக வேறு ஒரு நல்ல திருவோடு தருகின்றேன். ஏற்றுக் கொள்ள வேண்டும் " என்றனர். யோகியார் "வெகுண்டு என் திருவோட்டினைக் களவு செய்தனை, உன் மனைவியுடன் கையைப் பிடித்துக் குளத்தில் மூழ்கிச் சத்தியம் செய் " என்றனர். " ஒரு சபதத்தால் நான் அவ்விதம் செய்ய இயலவில்லை. நான்மட்டும் மூழ்கித் தருகிறேன் " என்றனர். இது வழக்குமேலிட்டுத் தில்லைவாழந்தணர்களின் சபைக்கு இரு திறத்தவரும் சென்று முறையிட்டனர். அவர்கள் விசாரித்து மனைவியுடன் மூழ்கித்தரும்படி தீர்ப்புச் செய்தனர். " பொருந்திய வகையில் மூழ்கித் தருகின்றேன் " என்று திருப்புலீச்சரக் கோயிலை அடைந்து ஒரு மூங்கிற்றண்டின் இருபுறமும் திருநீலகண்டரும் மனைவியாருமாகப் பிடித்து மூழ்கப் புக்கனர். கரையில் நின்ற யோகியார் " மனைவியைத் தீண்டிக் கைப்பிடித்து மூழ்கித்தா " என்று கூவினர். அது கூடாதென்பதற்குரிய காரணத்தை வெளிப்படச் சொல்லித் தம்முடைய செய்தியை **உலகர் அறியும்படி வகையாய்** வெளிப்படச் செய்து மூழ்கினர். மூழ்கிக் கரையேறும்போது மூப்பு

நீங்கி முன்னைய இளமைபெற்றுக் கரையேறினர். இறைவர் மறைந்து ஆகாயத்தில் தோன்றிக் காட்சிகொடுத்து, "உங்கள் நிலைமையை உலகறியச் செய்தோம். இந்த இளமை நித்தியமாய் நீங்காது எம் உலகில் உறைவீர்களாக" என்றருளிச் செய்தனர். இவர்களிருவரும் அவ்வண்ணமே மீளாத உலகினில் போயமர்ந்தனர்.

இத்திருப்புலீச்சரக் கோயில் இளமை யாக்கியார் கோயில் என்று இன்றும் வழங்கப்படுகிறது. இதன் குளக்கரையில் நாயனாரதும், மனைவியாரதும் முதுமைக் கோலமும் முழுகியெழுந்த இளமைக் கோலமும் தீட்டப்பட்டுள்ளன.

காமநுகர்வாகிய சிற்றின்பத்திடையிலே, ஊடல்கள் நிகழும். சிற்றூடல்கள் **துனி** யென்றும், பேரூடல்கள் **புலவி** எனவும் வழங்கப்படுவன. இவை காம நுகர்ச்சியில் இன்பத்தை மிகுவிக்கும் இயல்புடையன.

" துனியும் புலவியு மில்லாயிற் காமம்
கனியுங் கருக்காயு மற்று "

என்பது திருக்குறள். இவற்றின் இயல்புகளை இன்பத்துப் பாலில் திருவள்ளுவர் சுவைபட அழகாகப் பேசியுள்ளார். ஆனால் சுவை ஓர் அளவுபட நிகழ்தல் வேண்டும். அளவுகடந்தால் அவை விபரீத விளைவுகளை உண்டாக்கிவிடும். இவற்றின் விளைவாக இந்நாளின் மிருக உணர்ச்சிகள் உண்டாகிக் கொலை முதலிய கொடுமைகளுக்கும் இடந்தந்து விடுகிறது. இவற்றின் உதாரணங்களைப் பலவிடங்களிலும் காணலாம். " அளவுக்குமீறினால் அமிர்தமும் நஞ்சாகும் " என்பது பழமொழி. இச்சரிதத்தில் புலவி சிறிது அளவுகடந்து போயினமையால் சரித நிகழ்ச்சி நேர்ந்தது. இது தெய்வத் தன்மையால் பலித்தது. சிவனன்பில் ஈடுபட்டு நின்றமையால் நாயனாரும் மனைவியாரும் **திருநீலகண்டம்** என்ற ஆணையை ஆயுள்பரியந்தம்

கடவாது இளமை முதல் முதுமைவரையில் காத்து நின்றது மிக அரியசெயல். தேவர்களும், முனிவர்களும், மற்றும் யாவரும் காம இச்சை எழாமல் காக்க வல்லவர்களிலர். இதனாலேயே நாயனாரும் மனைவியாரும் செய்தற்கரிய செயல் செய்தவர்களாகிப் பெரியார்களாயினர். இதனை இளமையின் மிக்குள்ளார்கள் இருவருமே அறிய நின்றனர். அயலவர் ஒருவரும் அறியாது வாழ்ந்தனர். அத்தனைகாலமும் மனைவியார் கணவனாருக்காயின பணிகளையெல்லாம் மெய்தீண்டாமலே செய்து இற்புறம் பொழியாது வாழ்ந்து தமது கடமை செய்தது உலகுக்கு மிகவும் அரிய படிப்பினையைத் தரவல்லது. இது உலகம் பின்பற்றத் தக்கது.

அவரும் இளமை மீதூர இன்பத்துறையுள் ஆழ்ந்தவர். உரிமை மனைவியாரும் திருவினும் உருவமிக்கவர். மற்றை மாதரை மனத்தாலும் தீண்டாதாராயினர். இருவரும் ஒரே வீட்டில் வேறுவேறாக இருந்து இளமைமுதல் முதுமைவரையில் இவ்வுண்மையை அயலறியாது வாழ்ந்தனர். இவ்வரிய செயல் சிவன் ஆணைகாத்த ஒன்றினாலே நிகழ்ந்தது. அன்பின் மேலீடே இத்தனை திண்மையைக் கொடுத்தது.

# 7. இயற்பகையார் மனைவியார்

சோழநாட்டிலே காவிரி கடலோடு கலக்கும் துறையிலே உள்ள காவிரிப்பூம்பட்டினத்திலே வணிகர் மரபிலே இயற்பகையார் என்றோர் அடியவர் இருந்தார். அவர் சிவனடியார்கள் வந்து எதனைக் கேட்டாலும் இல்லை என்னாது கொடுத்து மகிழும் இயல்புடையவர்.

இறைவர் மேனியில் விளங்கத் திருநீறணிந்து கொண்டு தூர்த்த வேடமும் தோன்ற வேதியராய் வந்தார். அவரை இயற்பகையார் உபசரித்து நின்றனர். "உம்மிடம் ஒன்று வேண்டிவந்தேன்; அடியவர்கள் கேட்டதை மறுது அளிக்கும் உமது இயல்பைக் கேட்டு வந்தேன். நீர் ஆம் என்றால் சொல்வேன்" என்றார். அவர் அது கேட்டு, "என்னிடம் ஏதாவது உண்டாகில் அஃது அடியவர்களதுடைமையேயாம்; ஐயமில்லை; நீர் அருள் செய்யும்" என்றார். "நிலைபெற்ற காதலையுடைய உன்னுடைய மனைவியை வேண்டி வந்தேன்" என்று அவர் கூறவே, புறத்திலும் சொல்லத்தகாத வார்த்தையை அவர் எதிரிலே சொன்னபோதிலும் முன்னைவிட மகிழ்ந்தவராய், "என்னிடம் உள்ளதொரு பொருளையே வேண்டினீர். இது எனக்குச் செய்த பேறு" என்று சொல்லி வீட்டிற்குள் உடனே விரைந்து சென்றனர். கற்பின் மேம்பட்ட தமது மனைவியாரை நோக்கி, "விதிப்படி மணந்து கொண்ட குலமடந்தையே! இன்று உன்னை இம்மெய்த் தவருக்குக் கொடுத்துவிட்டேன்" என்று சொன்னார். அதனைக்கேட்ட மனைவியார் முதலிற் கலங்கினர். பின் மனந் தெளிந்தனர். பின் இவ்வாறு சொல்லலாயினர்: "என்னுயிர்க்கொரு நாதரே! இன்று நீர் எனக்கு அருள்செய்தது இதுவாகில், நீர் சொல்லிய தொன்றை நான் செய்யும் அதுவேயன்றி எனக்கு வேறு உரிமை உண்டோ?" என்றார். தமது கணவரை வணங்கினர்; அவரும் எதிர்

வணங்கினர் ; வந்தமாதவரிடம் சென்று திருவடிபணிந்து திகைத்து நின்றனர்.

"காதன்மேவிய சுற்றமும் பதியும் கடக்கத் துணை போதுக" என்று மாதவர்வேண்ட அதன்படியே உடைவாளும் பலகையும் ஏந்தி வழித்துணையாகச் சென்றனர் இயற்பகையார். "இயற்பகை பித்தனுல் மாதினைவேறொருவன் கொண்டுபோவதா? இதற்கு யாமொட்டோம்" என்று சுற்றத்தார்கள் கூடிவந்து தடைசெய்தனர். மூண்டு வந்து முட்டினர். வந்த மாதவர் பயந்தவர்போன்று காட்டினர். மனைவியார் "இறைவனே! அஞ்சவேண்டா; இயற்பகை வெல்லும்" என்று தேற்றினர். போர் மூண்டது; சுற்றத்தார் பலரும் துணிபட்டிறந்தனர். ஏனையோர் ஓடிப்போயினர். பின்னர் திருச்சாய்க்காடுவரை உடன்சென்று வழிவிட்ட இயற்பகையாரை மாதவர் "மீள்க" என்று சொல்லி விடை கொடுத்தனுப்பினர். அவர் சிறிதுதூரம் போனபின் மாதவர், "இயற்பகை முனிவா ஓலம்! செயற்கருஞ் செய்கை செய்த தீரனே ஓலம்!" என்று ஓலமிட்டு மறைந்தனர். விண்ணிடைக் காட்சி தந்து இயற்பகையாரையும் மனைவியாரையும் சிவலோகத்துக்கு அழைத்துச் சென்றனர்.

இங்கு இயற்பகையார் மனைவியாரைத் தமக்கென்று ஒன்றும் சுதந்திரமில்லாத கொடைப்பண்டமாகவே கருதினர். அவரும் அவ்வாறே கருதிக் கணவனர் வழியே ஒழுகினர். "என்னுயிர் நாதரே! நீர் உரைத்ததொன்றை நான் செய்யும் அத்தனையல்லால் உரிமை வேறுளதோ? எனக்கு" என்று அமைந்து நடந்தார். "இந்தக் கணவனை எனக்குப் பிடிக்கவில்லை, இவன் எனக்கு வேண்டாம்; எங்கள்கல்யாணத்தை ரத்துசெய்து பிரித்துவிடுங்கள்" என்று மனைவியர் கேட்கும் அளவிற்கு "**நாகரீகம்**" மேலிட்டு அதற்கு அரசாங்கச் சட்டமும் இடங்கொடுத்து நிற்கும் இந்நாட் சமூகநிலையில் இது ஏற்கத்தக்கதன்றுதான்.

பெண்ணுரிமை பெரிதும் பேசும் காலம் இக்காலம். ஆனால் நமது முன்னோர் வகுத்த நெறி "கற்பெனப் படுவது சொற்றிறம்பாமை" என்பது. அந்நெறி பற்றியே இங்கு மனைவியார் ஒழுகினர். தம்மையே பிறர்க்குக் கொடுத்து விடும் அளவுக்குக் கணவர் கைப்பட்ட கொடைப்பண்டமாகவே கொண்ட கொள்கை வழி வாழ்ந்தார். இந்நாளில் இதனைத் தகாதமுறையிற் கொள்வாருமுண்டு என்று 80 ஆண்டுகளின்முன்* ஒரு புலவர் பாடியுள்ளார். "† இல்லாளை, அந்நியர் தோள்சார்த்தி யரும்பொருளை யீட்டி யிழி, கன்னியர் தோள் சாருங் கலிகாலம்..." ஆனால் கணவர் தவறியவழி அவர்களை, உரியவகையால் திருத்தி நல்வழிப்படுத்தும் மங்கை நல்லார்களும் நம் நாட்டில் வாழ்ந்து காட்டியுள்ளார்கள். மங்கையர்க்கரசியார் வரலாறு காண்க. அஃது ஆன்ம இயலைப் பற்றியது. பின்னர் விவரிக்கப்படும்.

உறவினர் மூண்டுவந்து முட்டியபோது மாதவர் அஞ்சினர். மனைவியர், "**இறைவனே அஞ்சவேண்டா இயற்பகை வெல்லும்**" என்ற அழகும் அமைதியும் குறித்து மகிழவேண்டும். "வெல்வார்" என்றாவது "வெல்வான்" என்றாவது சொன்னால் பொருந்தாது. வெல்வார் என்று பன்மையிற் கூறுதல் கற்பியலுடன் மாறுபடும். இப்போது அம்மையார் வேறொருவர்க்கு உரிமையாய் விட்டாராதலின் "வெல்வான்" என்று ஒருமையாற் கூறுதற்கு மனம் ஒருப்படவில்லை. இவ்வாறு உயர்ந்த வசனப் போக்கு அம்மையார்களிடமிருந்தது.

---

*இந்நூலாசிரியரின் தந்தையார் கோவை - வித்துவான் கந்தசாமி முதலியார். (1838-1890)

†திருப்பேரூர் கிள்ளைவிடுதூது. (கண்ணிகள் 413-414)

## 8. இளையான்குடிமாறனார் மனைவியார்

**பா**ண்டி நாட்டிலே இளையான்குடி என்ற ஊரிலே வேளாளர் மரபிலே **மாறனார்** என்றொரு பெரியார் வாழ்ந்தார். அவர் சிவனடியார்களை உபசரித்து நாடோறும் அமுதூட்டும் தன்மையிற் சிறந்திருந்தனர்.

" கொண்டுவந்து மனைப்புகுந்து குலாவுபாதம் விளக்கியே
மண்டு காதலி னாதனத்திடை வைத்தருச்சனை செய்தபின்
உண்டி நாலுவிதத்தி லாறு சுவைத்திறத்தினி லொப்பிலா
அண்டர் நாயகர் தொண்ட ரிச்சையிலமுது செய்யவளித்துளார்."

(இளையான் - குடி - புரா. 4)

என்றிவ்வாறு அவர் அடியார்களுக்கு அமுதூட்டிய திறம் பேசப்பட்டிருக்கின்றது. அமுதூட்டுதலின் அவர் மனைவியார் தான் பெரும்பங்கு கொண்டனர். அடியார்களை அமுதூட்டிய சிவபுண்ணியப் பெருக்கினாலே அவரது செல்வம் வளர்ந்து அவர் குபேரன்போல வாழ்ந்தார். செல்வமுள்ள காலத்தில் இப்பணி செய்வதேயன்றி வறுமையுற்ற நாளிலும் அதில் அவர் செய்யவல்லவர் என்று உலகத்தார்க்கு அறிவிக்கும்பொருட்டு அச் செல்வம் மாறும்படி இறைவர் திருவுளங் கொண்டருளினர். செல்வம் மாறி வறுமையும் வந்தது. மழைக்காலத்தில் ஒரு நாளிரவில் மாதவ வேடங்கொண்டு கிழவேதியராய் இறைவரெழுந்தருளினார். இரவினில் இல்லமடைத்தபின் மழையில் நனைந்த ஈரமேனியுடன் பசியோடு வந்து கதவைத்தட்டினார். மாறனார் கதவைத் திறந்து உள்ளழைத்துச் சென்று ஈரமேனியை மாற்றி, இடங்கொடுத்தாதரித்தனர். அவர்பசி தீர்த்து உபசரிக்க விருப்பங்கொண்டனர். "நமக்கு முன்பு இங்கு உணவில்லையாயினும் சிவனடியார்க்கு அடிசில் அமைக்கும் வகையென்ன ?" என்று மனைவியாரைக் கேட்டனர். அதற்கு அவர் வேறொரு வழி

யும் எனக்குத் தோன்றவில்லை ; கடன் கொடுப்பார் ஒரு வருமில்லை ; தீவினையேனுக்கு வேறு என்ன செயல் உள்ளது" என்று சொல்லி மேலும் சொல்லுகிறார்: "நமது வருத்தம் நீங்கும்படி இன்று பகலில் சென்று வயலில் விதைத்த நெல்முளையை வாரிக்கொண்டுவந்தால் என்னால் இயன்றபடி அமுது ஆக்கலாம்" என்று கூறினார். மாறனார் வறியவன் செல்வம் பெற்றதுபோல மகிழ்ந்து, ஒரு கூடையைத் தலையில் கவிழ்த்துக்கொண்டு கால்களால் தடவி வழி கண்டு வயலிற் சென்று நீர்வழியே மிதந்து கரைசேர்ந்த முளை நெல்லைக் கூடை நிறைய வாரிக்கொண்டு வந்தனர். அதனை வாயிலில் நின்றபடியே மனைவியார்வாங்கிச்சென்று கழுவி வறுப்பதற்கு விறகில்லையே என்று கணவனாரிடம் சொல்லவே அவர் அந்தமின் மனையினீடும் கூரையை அறுத்துக் கொடுத்தனர். அது கொண்டு நெல்லை வறுத்துக் குத்தி அரிசியாக்கி உலையிற் பெய்து அமுதாக்கினர் மனைவியார். கறிக்கு இனி என்செய்வோம் என்று சொல்லக் கணவனார் கொல்லையிலிருந்த குழி நிரம்பாத புன்செய்க் குறும்பயிரைத் தடவி பாசப்பழி முதல் பறிப்பார் போலப் பறித்துக் கொடுத்தனர். மனைவியார் அவற்றைக் கழுவிக் கைதேர்ந்த செய்கையினாலே வேறு வேறு கறியமுதும் ஆக்கினார். ஆக்கியவற்றை யெல்லாம் கணவனாருக்குக் காட்டி மாதவரை அமுதுண்ண அழைப்போமென்று இருவரும் சென்றனர். அவர் துயின்று கொண்டிருந்தனர். "அடியோங்கள் இடர்நீங்கி உய்யும் பொருட்டு எம்பால் எழுந்தருளிய பெரியவரே ! அமுது செய்ய விரைவில் எழுந்தருளுவீராக !" என்று அழைத்தனர். அவர் மறைந்து ஒரு சோதியாய்த் தோன்றினர். ஆகாயத்தில் நின்று, "அன்பர் பூசை அளித்த நீங்கள் எமது உலகத்தை அடைந்து குபேரன் உங்கள் ஏவலின்படி பணிகேட்க இன்பத்துடனே அமர்வீராக" என்று

அருளி அவ்விருவரையும் சிவலோகத்துக்கு அழைத்துச் சென்றருளினர்.

செல்வமும் வறுமையும் சிவனருளால் வருவனவாம். சிவனடியார்களுக்குப் பணிசெய்வதால் செல்வம் வளரும். செல்வம் வந்தபோதும் வறுமை வந்தபோதும் ஒன்று போலவே நேர்மை பிறழாது ஒழுகிவருதல் நன்மக்களியல் பாம். இதனை உலகுக்குக் காட்டி அறிவுறுத்தவே திருவருளால் இச்சரிதம் நிகழ்ந்தது.

வீட்டில் உணவுக்குரிய சாதனங்கள் ஒன்றுமில்லாம லிருக்கு நிலையில் மழைநாளிரவில் பசியால் வந்த மாதவர்க்கு உபசரணை செய்யும் எண்ணமும் கடமைப்பாடும் கொண்டமை பெரிதும் போற்றிப் பின்பற்றத்தக்கது.

நாயனர் தங்கருத்தை மனைவியார்க்கு அறிவித்து வினவத்தொடங்கும்போது, " நமக்கு முன்பு இங்கு உணவில்லை ஆனாலும் " என்று மனைவியாரது இல்லை என்று சொல்லிவிடக்கூடாது என்ற விடையை எதிர்பார்த்துத் தொடங்குதல் காண்க. மனைவியாரும் வீட்டுக்காரி—இல்லாள்—எனப்படும் வழக்கும் காண்க. கற்புடை மங்கையர் இல்லை என்று சொல்லலாகாது என்ற நீதிக் கேற்ப " மற்றொன்றுங் காண்கிலேன் " என்று தொடங்கிக் கூறும் நிலையும் கண்டு மகிழத்தக்கது.

" மற்றொன்றுங் காண்கிலேன் " என்றதனல் ஒரு வழிதோன்றுகிறதென்ற உடன்பாட்டுக் குறிப்புத் தோன்றக்கூறிய நயம்காண்க. நாயனர் "அமுது அமைக்குமா றெங்ஙனே ?" என்ன மனைவியார் அதற்கு ஒரு வழிவகுத்துச் சொல்லுதலும் அதன்படி அவர் நெல் கொண்டுவருவதும், மனைவியார் " விறகில்லை " என்ற அதற்கு நாயனர் வீட்டுக்கூரையை அறுத்து வீழ்த்துக் கொடுப்பதும் " கறிக்கினியென் செய்வோம் " என்றபோது கொல்லைக் கீரையைக் கொணர்ந்து கொடுப்பதும் ஆக, இவ்வாறு கணவனும் மனைவியுமாக இல்வாழ்க்கைக் கடமைகளை ஒன்

றித்துப் பகிர்ந்து மேற்கொண்டு செல்லும் நிலை நம் நாட்டு நல்வழக்காகும். "இருவரும் பூண்டீர்ப்பி னல்லால் இல்வாழ்கையென்னு மியல்புடைய வான்சகடம், செல் லாது தெற்றிற்று நின்று" என்பது நீதிநூல். வெளியில் போய்க் குடும்ப வாழ்க்கைக்கு வேண்டிய சாதனங்களைத் தேடிக்கொண்டு வருதல் கணவனுடைய செயலாகவும், அச்சாதனங்களைச் சீர்பெற வைத்துக் குடும்பத்தைப் பேணுதலும் விருந்து பேணுதல் முதலிய இல்லறங்களைச் செய்தலும் மனைவியின் செயலாகவும் நிகழ்ந்தது முன்னுள் நம் நாட்டு நன்முறை. இப்போது நாயகனும் நாயகியு மாகிய இருவரும் வெளியிற்போய் பொருள் தேடுவதும் ஏவலாளரைக்கொண்டு குடும்பம் நடத்துவதும் இவை போன்றன இந்நாளில் காணப்பட்ட மாறுபட்டுத் திறம்பிய இல்வாழ்க்கைமுறை. இங்கு நாயனர் தமக்குணவின்றி நின்றநிலையில் அடியார்க்கமுதூட்ட இந்நாளில் ஒரு கண வன் முயன்றால் மனைவி எவ்வாறு ஒழுகியிருப்பாள் என் பது வாசகர்கள் சிந்திக்கத்தக்கது.

மாறனாரும் மனைவியாரும் செய்த அரியசெயல் இரு வரும் ஒத்த கருத்துடையவர்களாகவும் ஒருமித்த அன் புடையவர்களாகவும் வாழ்ந்து இருந்தமையாலாகியது. மனைவியார் கைப்பழக்க முன்னைவினைத் தொழிலினால் கிடைத்த ஒரே கீரையை வேறுவேறு கறிகளாகச் சமைத் தனர். கறியமுதும் திருவமுதும் ஆயின. எல்லாவற்றை யும் கணவனுருக்குக் காட்டிச் சரிபார்த்துக்கொண்ட பின் னரே அடியவராய் வந்த விருந்தினரை அழைக்கப் புக்க னர். இது ஒரு நல்ல வழக்கம். விருந்தினர் உண்ணப்புக்க பின் குறைகாணுதல் தக்கதன்று.

# 9. மெய்ப்பொருள் நாயனார் தேவியார்

திருக்கோவலூரில் வாழ்ந்த சேதி நாட்டரசராகிய மெய்ப்பொருள் நாயனார் சிவன்பாலன்பு மிக்கவர். சிவனடியார் வேடத்தையே மெய்ப்பொருள் என்று கண்டு வணங்குமியல்புடையவர். அவரது பகையாய் வந்து போரிட்டுப் பன்முறை யிழந்து தோற்றுப் பரிபவப்பட்டுப் போன முத்தநாதன் என்பவன் அவரை வஞ்சனையால் வெல்ல எண்ணினான். சிவனடியார் வேடம் பூண்டான். திருநீறு மேனி முழுதும் அணிந்தான். கையில் படையை மறைத்துப் புத்தகம்போல ஆக்கிக்கொண்டான். இவ்வாறு பூண்ட வஞ்சனை வேடத்துடன் ஓரிரவு மெய்ப்பொருளரசர் அரண்மனைக்கு வந்தான். திருவேடத்தைப் பணியும் மன்னவர் பழக்கத்திலே பழகிய காவலாளர்கள் எல்லாரும் அவனது வேடத்தைக் கண்டு உள்ளே விடுத்தனர். அரசரது பள்ளியறைக்குள்ளும் சென்றுவிட்டான். அரசர் கட்டிலில் துயின்றுகொண்டிருந்தார். பக்கத்திலே மாதேவியார் விழித்து உபசரித் தமர்ந்திருந்தனர். முத்தநாதனாகிய வஞ்சனை வேடத்தான் வருதலைக் கண்ட தேவியார் அடியவர் வந்துள்ளார் என்று மன்னனை எழுப்பினர். மன்னர் தொழுதபடியே எழுந்தனர். வேடத்தானை வணங்கி ஆசனத்தமர்த்தினர். அவன் "உனக்கு உபதேசிக்க ஒரு சிவாகமம் கொண்டு வந்துள்ளேன். அதனை உபதேசிக்க நாறு பூங்கோதை மாது தவிரவே நீயுநானும் தனியாக வேறிடத்திருக்க வேண்டும்" என்று கூறவே மாதேவியாரை அந்தப்புறத்தினிற் போகும்படி மன்னன் ஏவவே அவரும் அவ்வாறே சென்றனர். மன்னவர் வணங்கும்போது வஞ்சகன் புத்தகம் அவிழ்ப்பான்போலப் படையை எடுத்தான்; எண்ணியபடியே முடித்தான். வீழ்கின்ற வேந்தர் வேடமே மெய்ப்பொருள் என்று சொல்லி

வீழ்ந்தார். விரைவாக வேடத்தானை வாளிஞ லெறியவந்த காவலாளனுகிய தத்தனை அரசர் கையாற் தடுத்துத் " தத்தா நமர் " என்று வீழ்ந்தார். "இவரைத் தீதில்லாது கொண்டுபோய் விடு " என்ருர். அதன்படியே விட்டு அவன் வந்து செய்தி சொல்லுமளவும் அது கேட்க உயிர் தாங்கி இறைவனை நினைந்தவாறே சிவனடி சேர்ந்தார்.

இங்கு மன்னவன் றுயின்ற பின்னரும் தேவியார் விழித்திருந்தமர்ந்து நாயகனுக்கு உபசாரஞ் செய்தது கற்புநிலை. இது முன்னுளின் நிகழ்ந்த நல்வழக்கு. "பின் றூங்கி முன்னெழுந்த பேதையே " என்றபடி நாயகன் துயின்ற பின்னர்த் துயின்று அவன் விழிக்கு முன்பு விழித் தெழுந்தனர் நம் நாட்டு மகளிர். அது நல்வழக்கு. இந் நாள் வழக்கு அதற்கு மாறுபட்டது.

திருவேடத்தைப் பணிந்து பழகிய பழக்கத்தால் அவ் வஞ்சனை வேடத்தானைக் கண்டதும் பள்ளியறையிலும் அடியார் என்றறிவித்து மன்னனை எழுப்பினர். இடத்தை யும் காலத்தையும் நோக்கிற்றிலர்.

# 10. தத்தை

இவள் கண்ணப்ப நாயனரின் தாயார். உடுப்பூரிலே வேடர் சேரியிலே வேடர் மரபிலே பழமையாகிய ஆன்ற தொல்குடியிலே வந்தவள். வேடர் தலைவனுகிய நாகன் என்பவனுக்கு மனைவியாக வாழ்ந்து வந்தாள். வேடர்களின் மரபு வழக்கப்படி புலிப்பற்ருலியை இடையிடை யளவுகோத்துப் பெரும்புற மலையப் பூண்டனள். பீலியும் குழையும் பூண்டாள். மாலை பூண்ட அச்சந் திகழ் தக்க பெண்சிங்கம் போன்றவள். இல்வாழ்க்கையில் நீண்ட காலம் பிள்ளைப் பேறில்லாததனுல் வருந்திஞள். இவர்க்கினிப் புதல்வர்ப் பேறே அரியது என்று எவரும் சொன்ஞர்கள். கிட்டாத பொருள்களின்மீது ஆசை அதிகரிப்பது மனித இயல்புகளுள் ஒன்று- "கிட்டாதாயின் வெட்டென மற" என்பது நீதிநூல். ஆயினும் மனித இயல்பு அதற்கு மாருனது. "முயற்சி திருவினை ஆக்கும்" என்பதைக் கடைப்பிடித்துப் பிள்ளைப் பேறு பெறுதற்கு நாகனும் தத்தையும் பலவாருக முயன்ருர்கள். குறிச்சியில் முருகனை வழிபட்டார்கள். பராய்க் கடன் நெறியில் நின்ருர்கள். முருகன் கோயிலுக்குச் சேவலும் மயிலும் விட்டார்கள். தோரணமணிகள் தூக்கிஞர்கள். குரவைக் கூத்துடன் பெருவிழா எடுத்தார்கள். முருகப்பெருமான் அருளிஞலே தத்தை கருப்பவதியாஞள். அளவில்லாத முன்னைத் தவத்திஞலே கடலிலே முழுமதி வந்தவதரித்தது போலத் தத்தை ஓர் ஆண்மகவு பெற்றெடுத்தனள். தங்கள் மறக்குடி மரபுக்கேற்றபடி தெய்வத்தை வேண்டிக் காப்பணிந்தும் விரையிளந்தளிரும் சூட்டியும் வேம்பிழைத் திடையிற் கோத்த அரைமணிக் கவடி கட்டியும் அழகுறக் குழவியை வளர்த்தனள். பருவங்கள் தோறும் தெய்வங்களுக்குப் பெருமடை கொடுத்தனள். ஓராண்டு வளர்ச்சி பெறவே

புலியுகிர்ச்சுட்டி சாத்தியும் முளவுமுள் அரிந்து கோத்த நாண்டகு மெயிற்றுத் தாலி மார்பிற்றூங்க வைத்தும் பாசி மணிகளோடு கட்டிய சதங்கை ஒலிக்கக் கட்டியும் காசு கோத்த அரைஞாண் கட்டியும் இவ்வாறு பலவும் அணிகள் செய்து அழகுறக் குழவியை வளர்த்தனள். மழலே கேட்டும் முத்தம் தந்தும் இன்புற்று மகிழ்ந்து போற்றினள். " தத்தையாந் தாய் " என்று திருமுறைகளில் போற்றப் பட்ட பெருமை யுடையவள். தவமுதல்வரான கண்ணப்ப நாயனுரைப் பெற்றெடுத்த முன்னேய பெருந்தவமுடைய வள். நாகனுக்கு ஒத்த குடிமரபில் வந்தவள். குலமும் குடியும், நலமும் பிறவும் பார்த்து மணம் செய்யும் வழக்கு அந்நாளில் வேடர்களுக்குள்ளும் இருந்தது. பிள்ளேப் பேறு முதலியவற்றை வேண்டித் தமது குறிஞ்சித் திணேக் கடவுளாகிய முருகனே வேண்டிப் போற்றிச் சடங்கு செய்யும் வழக்கும் இருந்தது. முருகன் வரங் கொடுக்கும் அருளுடையான் என்பதும் அவர்கள் கைகண்டு கொண்டு அவ்வழியே நின்ருர்கள்.

# 11. தேவராட்டி

உடுப்பூர் வேடர் சேரியிலே கண்ணப்ப நாயனரின் தந்தையாகிய நாகனது பாதுகாவலில் தேவராட்டி என்ருெருத்தி இருந்தாள். அவளை நாகன் ஆதரித்துவந்தான். அவள் மலையிலுள்ள தெய்வங்களுக்குப் பூசை செய்து வந்தாள். அதனால் அவளுக்கு அப்பெயர் போந்ததென்று கருதப்படுகின்றது. நாகன் மிகுந்த மூப்படைந்தவன். சூழ்ந்துவரும் தன் மூப்பின் தொடர்பு நோக்கி மூப்பினாலே முன்புபோலே வேட்டையினில் முயலகில்லேன் என்று வேடர்களுக்குச் சொல்கின்றான். அவனுக்குப் பிள்ளைப் பேறே அரிய தென்றெவரும் சொல்லிய வயதளவில் முருகப்பெருமானை வழிபட்டுப் பிள்ளைப் பேறு பெற்றான். ஆதலின் அவனுக்கு அப்போது ஏறக்குறைய 60-வயதிருக்கும். கண்ணப்ப நாயனர் பிறந்து 16-வய்து நிரம்பிக் கன்னிவேட்டைக்குப் புறப்படுகின்றார். ஆதலின் நாகனுக்கு அதுபோழ்து 76-வயதுக்குக் குறையாது. நாகனுடைய தந்தையைப் பற்றிய செய்திகள் சொல்கின்றாள் தேவராட்டி. ஆதலின் அவளுக்கு 90-வயது இருக்கக்கூடும். நிரம்ப வயது முதிர்ந்தவள் என்பதுமட்டும் நிச்சயம்.

தேவராட்டியை அத்தொழிலில் நாகன் வேடர் தலைமை பூண்டபோது, பூசைக்கு நியமித்துப் படியும் சமைத்து விட்டான். அவள் அந்த மரபில் வழிவழி வந்தவள். திண்ணனாகிய மகனாருக்குக் குலத்தலைமை கொடுத்து முதல் முதலாகக் கன்னி வேட்டைக்கு அனுப்பத் திட்டமிட்டான் நாகன். திண்ணனார் சிலைத் தொழிலாண்மை முற்றக் கற்று நிரம்பியவர். அதற்காகக் காடுபலியூட்டத் தேவராட்டியை அழைமின் என்று ஏவலாளர்களை நாகன் அனுப்பினான். அவளும் அத்தகைய பூசாரிகளின் வழக்கம்போல அலங்காரம் செய்துகொண்டுவந்தாள். காட்டுத் தளிர்களாலாயின மாலை அணிந்துகொண்டாள். மான் கொம்புகளை அரிந்த குழையைக் காதில் அணிந்தாள்.

மான் வயிற்றிலிருந்தெடுத்த அரிதாரத் திலகமிட்டுக் கொண்டாள். பாசிமணி கோத்த வடம் கழுத்திலணிந் தனள். தொங்கி மெலிந்த தோல் சுருங்கிய முலைகள் சரிந்து தாழ்ந்திருந்தன. மயிற்பீலியும் தழைகளும் சேர்த்துக் கட்டிய மரவுரியை உடுத்திருந்தாள். பூவினுடன் தோரைமலி சேடை (தெய்வப் பிரசாதம்) கொடுத்து நாகனைப் பணிந்து நின்ருள்.

கானின்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக்
கலைமருப்பி னரிந்தகுழை காதிற் பெய்து
மானின் வயிற்றரிதாரத் திலகமிட்டு
மயிற்கழுத்து மனவுமணி வடமும் பூண்டு
தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத்
தழைப்பீலி மரவுரிமேற் சார வெய்திப்
பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப்
போர்வேடர் கோமானைப் போற்றி நின்ருள்.

அவளைப் பார்த்து நாகன், "அன்னையே! நீ வறுமை நீங்கி நலத்துடன் இனிதிருந்தாயோ?" என்று கேட்டான். அதற்கு அவள் அவனை வாழ்த்தி, 'நல்ல மெல்லிய இறைச்சியும் ஈயலும் தேனும் மலையில் விளை பண்டங்களும், பிற விளை பொருள்களுமாக எனக்கு வேண்டியவற்றையெல்லாம் அன்று நீ நியமித்து வைத்தபடியே பெற்று வாழ்கின்றேன். என்னை அழைத்த பணி என்னை?" என்ருள் அதற்கு நாகன், "என் மகன் திண்ணன் எங்கள் குலத்தலைமையை நான் கொடுக்க ஏற்றுக்கொண்டு வேடர்களைக் காக்கும் மலையாட்சியை மேற்கொள்ளப் போகிருன். அவனுக்கு மேலாக வேட்டைத் தொழில் வாய்த்து, வேறு புலங்களைக் கவர்ந்து வெற்றியுண்டாகும்படி வன தேவதைகள் விரும்பி புண்ணும்படி காடு பலியிடுக" என்ருள். அது கேட்ட தேவராட்டி மனமகிழ்ந்து, "இங்கு அன்புடனே வருகின்ற எனக்கு முன்பு எல்லா நாட்களையும்விட நல்ல குறிகள் உண்டாயின. இதனலே உன்

மகன் திண்ணன் உன் அளவினல்லாமல் மேன்மை யடைகின்ருன் " என்று விரும்பி வாழ்த்தி வரை தெய்வங்களை மகிழ ஊட்டுதலுக்கு வேண்டிய சாதனங்களை யெல்லாம் குறைவில்லாமற் கொண்டு போனுள். அவ்வாறே காடுபலி யிட்டுத் தெய்வங்களை மகிழச்செய்து அந்த அருட்பிரசாதங்களாகிய தேன் தசை சருப்பொறி முதலியவற்றுடன் அவள் திண்ணனுர் பிற்றை நாள் வேட்டைக்கான அணி செய்துகொண்டு புறப்படுமளவில் அவர்முன்பு சுற்றிய வேடர்களை நீக்கிப் புகுந்து அவர் நெற்றியிற் சேடை சாத்தி "உன் தந்தை தந்தைக்கு மிந் நன்மைகளுள்ள வல்ல ; உன் வல்லமை நன்குபெரிது : நம்மளவன்று" என்று வாழ்த்தினுள். அவளை அரிய சிறப்புகளைச் செய்து திண்ணனுர் விடைகொடுத்து அனுப்பினுர்.

அதன்பின் வேட்டை முற்றித் திருக்காளத்தி இறைவரைத் திண்ணனுர் கண்டு தம்மை மறந்து அன்பே யுருவமாய் நின்றுவிட்டபின் அவரை உலகியலில் முன்பு போலப் பிறழ்விக்கும் பொருட்டு நாகன் முதலியவர்களுடன் தேவராட்டியும் வந்தாள். தங்களால் ஆன முயற்சிகளை யெல்லாம் செய்தும் அவர் இவர்கள்குறியினுள் அகப்பட்டு வாராதபடியாலே கைவிட்டுப் போனுர்கள்.

மலைவாசிகள் தெய்வ நம்பிக்கை யுடையவர்கள். வன தெய்வங்களையும் குறிஞ்சிக் கடவுளாகிய முருகனையும் வழி வழியாக வழிபட்டு வந்தார்கள். இத் தெய்வங்களின் சத்தியை அறிந்தொழுகி வந்தார்கள். வன தெய்வங்களின் சத்தி இந்நாளிலும் அறியப்படுகின்றது. வன தேவதைகளின் பூசைக்குப் பூசாரிகளை வழிவழி உரிமையுடன் நியமித்து, ஆதரித்து வந்தார்கள். இந்நாளிற்போல, அந்நாளிலும் அவர்கள் மாலை யணிந்து அலங்கரித்து கொண்டு வருவார்கள்; வழிபடுவார்களை வாழ்த்துவார்கள். வேடர் சேரியில் விளங்கிய அக்குமரேசன் இன்றும் விளங்குகிருன். பெண் பூசாரிகளும் உண்டு.

# 12. குங்கிலியக்கலய நாயனுர் மனைவியார்

சோழநாட்டிலே திருக்கடவூரிலே மறையவர் மரபிலே கலயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் சிவன்பால் அன்புமிக்கவர். அப்பதியில் நாளும் பெருமானுக்கு மண முள்ள குங்குலியத் தூபமிடும் பணியை மேற்கொண்டு வாழ்ந்தார். திருவருளினுல் அவருக்கு வறுமை வந்தது. வறுமை மிகுதியாகவே நிலங்களை முழுதும் விற்ருர். அடிமைகளையும் பண்டங்களையும் விற்றும் மனைவாழ்க்கை நடத்தினுர். இரண்டு நாட்கள் உணவில்லாமையால் மனைவியாரும், சுற்றத்தோடு மக்களும் வருந்தினுர்கள். அதைக்கண்டு இல்வாழ்க்கைப் பொறுப்பாளியாகிய அவரது மனைவியார் தமது தாலியைக் கணவர் கையிற் கொடுத்து நெல்வாங்கச் சொல்லி யனுப்பினுர். அவர் புறப்படும்போது எதிரே ஒரு வணிகன் குங்குலியப்பொதி கொண்டுவர அதற்கு விலையாகத் தாலியைக் கொடுத்து அதனை வாங்கித் திருக்கோயிற் பண்டாரத்திற் சேர்த்து அங்கேயே தங்கிவிட்டார். அங்குத் திருமனையில் பசியினுலே வருந்தி மனைவியாரும் மற்றவர்களும் அயர்ந்து துயின்றனர்.

இறைவரருளினுலே குபேரன் அந்தத் திருமனை முழுதிலும், அரிசியும், நெல்லும், பொன்னும் மணிகளுமாக நிரப்பிவிட்டான். மனைவியார்க்குக் கனவில் இறைவர் இதனை உணர்த்தினுர். அவர் எழுந்து செல்வங்களையெல்லாம் கண்டனர். இறைவர் திருவருள் என்று கண்டு திருவருளைப் போற்றினர். கணவனுர்க்குத் திருவமுதாக்கினர். இங்குக் கலயனுரும் துயின்றனராக, இறைவர் அவருக்குக் கனவிற் ருேன்றி "உன் திருமனையில் எய்திப் பாலின் இன்னடிசில் உண்டு துன்ப நீங்குவாயாக" என்றருளினர். இல்லத்தில் ஒன்று மில்லாமையை அறிந்து

போந்த கலயனுர் இறைவர் செய்த அருளாணையை மறுத்திருக்க அஞ்சிச் செல்வங்களை அறிந்திலரேனும், திருமனைக்குச்சென்றனர். அங்கு நிறைந்திருந்த செல்வங்களையெல்லாம் கண்டு வியந்து திருமனைவியாரை நோக்கி இவை எல்லாம் எங்கிருந்து வந்தன என்று வினவினர். மனைவியார் "அல்லொத்த கண்ட னெம்மான் அருள்தர வந்தன" என்றனர். கலயர் வியந்து திருவருளைப் போற்றினர். மனைவியார் திருவமுதாக்கிக் கணவனுருக்கும் அடியார்களுக்கும் விதிப்படி பூசைசெய்து திருவமுது படைக்க அதனை நுகர்ந்து இன்பமடைந்தார்.

பின்னர்ச் சிலநர்ட் கழித்துத் திருஞானசம்பந்த நாயனுரும் திருநாவுக்கரசு நாயனுரும்ஒருசேரத்திருக்கடவூருக்கு எழுந்தருள அவர்களிருவரையும் தமது திருமனையில் எழுந்தருளச் செய்தனர் கலயனுர். அவ்விரு பெருமக்களுக்கும் உடன்வந்த பரிசனங்களுக்கும் மாகேசுரபூசை செய்து மனைவியார் திருவமுது செய்வித்து மகிழ்ந்தனர்.

மனைவியார் பெயர் சேக்கிழார் பெருமானுற் சொல்லப் பெறவில்லை. இதுபோலவே பல அம்மையார்களின் பெயர்கள் கூறப்பெறவில்லை. திருவருளமைதிபோலும்.

பொற்றுலி பூணும் வழக்கு நம் நாட்டில் முன்னுளில் உண்டா என்று ஆராய்ச்சி செய்யப்படுகிறது. உண்டென்று இப்புராண சரிதத்தால் தெரிகின்றது. மீனுட்சியம்மையார் திருக்கல்யாணத்திலும், தெய்வயானை யம்மையார் திருமணத்திலும், மங்கலநாண் சாத்தியதாகத் திருவிளையாடற் புராணமும் கந்தபுராணமும் அறிவிக்கின்றன. இந்நாளிலும் எல்லா மரபினரிடையிலும் அவ்வழக்கு நிகழ்கின்றது.

மனைவியார் பொற்றுலி கொடுத்ததனுலே இச்சரிதம் விளைந்தது. அதுகாரணமாகச் செல்வங்கள் விளைந்த செய்தியினை இறைவர் அம்மையாருக்குக் கனவில் உணர்த்தியருளினுர். கலயனுருக்கு மனையில் சென்று

பாலின் அடிசில் உண்ணும்படி மட்டில் உணர்த்தியருளி னார். கலயர் செல்வம் விளைந்த செயலை அப்போது அறிந் திலர். மனையில் உணவுச்சாதனங்கள் இல்லையென்பதே அவர் நினைவு. ஆயினும் "மனையிற் சென்று பாலடிசில் உண்க" என்ற திருவருளாணையை மறுத்திருக்க அஞ்சிய வராய் மனைக்குச் சென்றனர். செல்வங்கண்டனர். மனைவி யாரை வினவினர். அவர் சொல்லவே அவை திருவரு ளால் வந்தன என்றறிந்தனர். மனைவியார் செய்கையாற் போந்த விளைவுகளை மனைவியார் வாக்காலே அறிவிக்க வேண்டுமென்பது திருவருளின் குறிப்புப்போலும். அதன் அமைதியும் காணலாம்.

மனைவியார் குடும்பத்தாரின் பசி தணிப்பதற்கு நெல் வாங்கி வரவே தாலியைக் கொடுத்தார். அது பசுதர்மமே யாகும். அதனைக் குங்குலியம் வாங்கிப் பதிபுண்ணிய மாக்கியது கலயனார்செயல். அதனாலேதான் செல்வம் விளைந்தது. சிவபுண்ணியத்தின் செல்வம் விளங்கவைத் தது இச்சரிதம். பெண்களின் உடைமைகளுள் எல்லாம் சிறந்ததும் இன்றியமையாததுமாகிய பொற்றாலியைத் தந்தது குடும்பக் காவலில் மனைவியார் கொண்ட சிறந்த கொள்கையை விளக்குவதாம். இதனால் இல்வாழ்க்கை யில் மனைவியர்க் குரித்தாகிய கடமைப்பாடும் உரிமையும் விளங்குகின்றன.

# 13. மானக்கஞ்சாற நாயனுர் மகளார்

(ஏயர்கோன் கலிக்காம நாயனுர் தேவியார்)

செழுமையுடைய கஞ்சாறூரிலே வேளாளர் மரபிலே அரசர் சேனுபதிக் குடியிலே அவதரித்தவர் மானக்கஞ் சாறனுர். அவர் சிவபத்தியிலுஞ் சிறந்து அடியார் பத்தி யிலும் சிறந்து செல்வத்திலும் சிறந்து விளங்கினுர். தமது அளவில்லாத செல்வமுழுமையும் சிவனடியார்களே உடை யார் என்ற உணர்வுடையாராய் சிவனடியார்களுக்கு ஏவல் செய்துவந்தார். அடியார்கள் வேண்டுவனவற்றைக் குறிப் பறிந்து கொடுத்து வந்தார். அவருக்குப் பிள்ளைப் பேறில் லாமையினுல் சிவபெருமானை வணங்கி வந்தார். இறைவ ரருளாலே, மழைக்குதவும் பெருங் கற்பின் மனைவியார் இடமாக வினைப்பயன் சூழ்ந்ததாகிய இந்தப் பிறவிச் சூழலி னின்றும் தப்பிப்பிழைக்கும் நெறியைத் தமக்குதவும் பெண் கொடியைப் பெற்றெடுத்தார். பெண்பிறந்த பெரு மகிழ்ச்சியினுல் மங்கலதூரியம் முழங்கச் சிவதருமங்களைச் செய்து கிளைஞர்போற்ற அப்பெண்ணை வளர்ப்பாரா யினர். அவர் இளங் குழவிப்பதம் கடந்து அணிகள் பூண்டு பூங்குழல் அசையச் சிற்ருடைஉடுத்துக் கிண்கிணி யசைய மெல்லடி யொதுங்கிச் சிறுநடை பயின்ருர். அதன் மேல் தாதியர் நடுவுள்சிற்றில் இழைத்தும் கழல் பந்து ஆடியும் பருவமடைந்தனர். முலைகள் பெருத்து வளர்ந்து இடையை வருத்தின. மணப்பருவம் வந்தணைந்தது. ஒத்த குலமரபினராகிய ஏயர்கோன் கலிக்காமருக்கு மணம்பேசி இசைந்தனர் மானக்கஞ்சாறனுர். மங்கல நாளில் மணஞ்செய்தற்காகத் தக்கபடி மனையலங்கார முதலியன வெல்லாம் செய்தனர். ஏயர்கோன் கலிக்காமரும் மண எழுச்சியுடன் அவ்வூரின் பக்கத்தே வரலாயினர். அவர் வந்தணைவதன் முன் இறைவர், முண்டித்த

திருமுடியுடன் நெற்றியில் திரிபுண்டரமாக நீறணிந்து எலும்பு மணிவடம் பூண்டு காதில்வெள்ளெலும்புகடைந்த மணிக்குண்டலம் அசையத் திருத்தோளில் பட்டிகையும் கேசவடப் பூணூலும் பூண்டு திருநீற்றுப் பொக்கணமுங் கொண்டு நீறுபூத்த நெருப்புப்போலத் திருமேனியில் திரு நீறணிந்த கோலத்துடன் மானக்கஞ்சாறர் திருமனையில் வந்து புகுந்தார். நாயனுர் அவரைப் பணிந்தனர். இங்கு இன்று மகளின் மணம் நிகழவுள்ளது என்று சொல்லி மணக்கோலம் பூண்டிருந்த மகளாரை அழைத்துக் கொண்டு வந்து அவர் திருவடியிற் பணியச் செய்தார். அப்படிப் பணிந்தெழுந்த மகளாரின் மேகந் தழைத்தாற் போன்ற மலர்சூடிய கூந்தலைப் பார்த்து, "இவள் மயிர் நமக்குப் பஞ்சவடிக்கு ஆகும்" என்றனர் வந்த தவசியார். மானக்கஞ்சாறனுர் உடைவாளை யுருவி மகளாரது கூந்தலை அடியோடரிந்து அவர்கையிற் கொடுத்தார். வாங்குவார் போலிருந்த தவசியார் மறைந்து உமையம்மையாருடன் இடபவாகனத்தின்மேல் ஆகாயத்திற் ருேன்றினுர். தொண்டனுர் பணிந்தெழுந்தனர். "உனக்கு நம்மிடம் உள்ள அன்பின்றிறத்தை உலகில் அறிவித்தோம்" என்றருளி அவருக்கு அருள் கொடுத்து உடன் கொண்டேகினுர். மணமகளாரின் கூந்தல் முன்போல வளர்ந்தது. கலிக்காமர் வந்து நிகழ்ச்சியைக் கேட்டு மகிழ்ந்து பெண்ணை மணந்து சென்றனர்.

திருமண நாளில் மணமகளாய் நின்ற நிலையில் இந்த அம்மையார் தம் கூந்தலை அரிந்துகொள்ள உடன்பட்ட அன்பின் மேன்மை இதிற் காண்கின்கிருேம். இனி மேல் வரும் பகுதியில் அவர் மனைவியார் என்ற நிலையில் காட்டிய அதிமேன்மையாகிய வரலாற்றையுங் காண்போம்.

திருப்பெருமங்கலத்திலே ஏயர்கோன்கலிக்காம நாயனுர் முன் சொன்ன தமது மனைவியாருடன் இல்வாழ்கை நடத்தி வந்தார். அக்காலத்தில் நம்பியாரூரர் பரவையா

ரது ஊடலைத் தீர்க்கத் தியாகராசப் பெருமானைத் தூது கொண்டார்; அது தெரிந்த கலிக்காமர் வெம்பினார்; மருண்டார். "தலைவரை அடியான் ஏவல்கொள்வதா? இப்பிழையினைக் காதாற் கேட்கலா யிற்றே" என்று வருந்தினார். இது செய்தற்கு உள்ளம் நடுங்காதவனை நான் காண்பேனாகில் என்ன விளையுமோ என்று மிக்க சீற்றங் கொண்டிருந்தார். இதனை அறிந்த நம்பியாரூரர் பிழை யுடன்படுவராகித் தம்மையும் கலிக்காமரையும் நட்புப்படுத்தும்படி இறைவரை வேண்டினர். இறைவர் கலிக்காமர்பால் தாங்கமுடியாத சூலைநோய் வரச்செய்தருளி அதைத் தீர்க்கும்படி நம்பிகள்பால் அருளினர். அதனைக் கலிக்காமர்க்கும் அருளினர். அவர் மேலும் கோபங்கொண்டனர். "எந்தை தந்தை தந்தை யெங் கூட்டமெல்லாம் வழி வழியாளாயிருக்கவும் எனக்கு வந்த சூலையை வம்பெனப் புதிதில் ஆட்கொண்ட ஒருவன் வந்து தீர்ப்பதா?" என்று மிகவும் வருந்தியிருந்தனர். இதற்குள் சூலைதீர்க்க நம்பிகள் வரலாயினர். அவ் வார்த்தை கேட்டதும் கலிக்காமர் அவர் வந்து தீர்ப் பதன்முன் இச்சூலையை நானே போக்குவன் என்று உடை வாளை யுருவி வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிர் துறந்தார். மனைவியாரும் முறைப்படி உடன் போவ தற்குச் சித்தமானார்கள். இதற்குள் நம்பிகளும் வந்து சேர்ந்துவிட்டனர்.

அதுகேட்டவுடன் மனைவியார் அழுகையை விட்டனர். மற்றவர்களையும் அழாமல் இருக்கும்படி பணித்தனர். திருமனையை விளக்கேற்றி யலங்கரித்து நம்பிகளை எதிர் கொண்டழைத்து வரும்படி ஏவினர். நம்பிகள் வந்து ஆசனத்தமர்ந்து பூசை கொண்டருளிக் கலிக்காமரைக் காண விரும்பினார். மனைவியார் ஏவலாலே மனைத்தொழில் மாக்கள் "அவர்க்குத்தீங் கொன்று மில்லை; உள்ளே பள்ளிகொள்கிறார்" என்று சொன்னார்கள். நம்பிகள்

தீங்கொன்றுமில்லை யாயினும் அவரைக்கண்டு உடனிருப் பதற்காகக் கவல்கின்றேன்'' என்று வேண்டினர். மனைவி யார் கருத்தின்படியே உள்ளழைத்துச் சென்று காட்டப் பெற்றனர்; விளைவை யறிந்தனர். "இவர் முன்னே நானும் செல்வேன்'' என்று அந்த உடைவாளையே எடுத்துத் தம்மை மாய்த்துக்கொள்ள முயன்றனர். இறைவர் அருளாலே கலிக்காமர் உயிர் பெற்றெழுந்தார். கேளிரேயாயினர். எழுந்து குற்றுடைவாளைப் பற்றிக் கொண்டனர். இருவரும் நண்பர்களாயினர்.

இந்த அரிய சரிதத்தால் நாம் அறிந்து கொள்ளக் கிடைக்கின்ற உண்மைகள் என்ன வென்று பார்ப்போம். இவ்வாறு செய்வார் உலகில் யாரேனும் உளரோ? தமது கணவர் வயிற்றைக் கிழித்துக் கொண்டு உயிர் நீங்கிக் கிடக்கின்றூர். தாமும் உயிர்விட்டு உடன் போவதற்கமை கின்றூர். பரிசனங்கள் பதைத்து அழுது பரிதபிக்கின்றூர் கள். அப்போது அவர் கண்ணுற் காணவும் கூடாதென்று பகைமை பூண்ட நம்பியாரூரர் வருகிறூர். அவர் தம்கணவர் உயிர் நீப்பதற்குக் காரணமாயிருந்த பகைவர். அவர் அன்பர் என்ற காரணத்தால் அவரை வரவேற்றுத் தக்கபடி உபசரிக்க யாரேனும் துணிவரோ? தாம் உயிர் துறப் பதனையும் தம் துக்கத்தையும் விட்டார். பரிசனங்களையும் அழாது தவிர்த்தார். மேலும் திருமனையை விளக்கேற்றி அலங்கரிக்கச் செய்தார். வந்தவரை நல்வரவேற்று எதிர் கொண்டு அழைத்துக் கொண்டு வரச்செய்தார். இத் தனைக்கும் உலகியலினின்றும் மேலோங்கி நின்ற அன்பே காரணம். இந்த அன்பின் விளைவினுலே கணவனுருயிரை யும் மீளப்பெற்றூர். அன்பின் திறத்தாலாகாத தொன் றுண்டோ? இது மனைவியார் என்ற நிலையில் இவரது மேம்பட்ட செயலாகும். இளமையில் இவரது தந்தையார் வழி வந்த அன்பின் பயனுகும்.

# 14. அரிவாட்டாய நாயனுர் மனைவியார்

சோழநாட்டிலே திருக்கணமங்கலத்திலே வேளாளர் மரபிலே தாயனுர் என்றெருரு பெரியார் இருந்தார். அவர் சிவனன்பின் திறத்தில் மேம்பட்டவர். அவர் இறைவருக்கு நாடோறும் செந்நெல்லமுதோடு செங்கீரையும் மாவடுவும் கொண்டுசென்று அமுது செய்விக்கும் நியதியில் நின்றெருழுகி வந்தார். வறுமை வந்தநாளிலும் செய்ய வல்லவர் என்றுலகிற் காட்டவும் வறுமையிலும் அவர் பணிகொண்டு மகிழவும் அவர் செல்வத்தை இறைவர் மாற்றினுர். வறுமைவந்தது. அவர் கூலிக்கு நெல்லறுத்துப் பணிசெய்து வந்தார். கூலியிற் பெற்ற செந்நெல்லை இறைவர் திருவமுதுக்கு வைத்துக் கார்நெல்லில் சீவித்து வந்தார். எல்லாம் செந்நெல்லேயாகி விளையவே அவர் பெறும் கூலி நெல்லும் செந்நெல்லாயிட மகிழ்ச்சியோடு அது முழுதும் திருவமுதுக்காக ஆக்கினுர். அவர் மனைவியார் மனைக்கொல்லையிலிருந்த கீரைகளை அமுதாக்கிப் படைக்க அதனை உண்டு திருப்பணி முட்டாமற் செய்து மகிழ்ந்தார். கொல்லைக் கீரைகள் தீர்ந்துவிடவே கற்பின்மிக்க அவர் மனைவியார் தண்ணீரையே திருவமுதாக வார்க்க உண்டு மகிழ்ந்தனர். இந்நிலையில் ஒருநாள் தாயனுர் கூடையில் இறைவருக்குச் செந்நெல்லரிசியும், செங்கீரையும், மாவடுவும் சுமந்து சென்றுர். மனைவியார் அவர் பின்னே ஆனைந்து (பஞ்ச கௌவியம்) ஏந்திச் சென்றுர். வயல்வழியே வரப்பிலே நடந்து சென்றுர்கள். அப்போது தளர்ச்சியினுலே கால்தளர்ந்து இடறிற்று. தாயனுர் கீழே விழப்போயினர். மனைவியார் மட்கலம் மூடும் கையாற்றடுத்து அணைத்திடவும் கூடை கவிழ்ந்து அதில் இருந்த சாதனங்களெல்லாம் சிந்தி நிலம் வெடித்த கமரில் சிதறிப் போயின. இனி அங்கே எதற்காகப் போவது. இறைவர் திருவமுது செய்யவில்லையே யென்று வருந்தி அரிவாளி

னுலே ஊட்டியை அரியலுற்ருர். கமரிலிருந்து இறைவருடைய கை எழுந்து அரிவாளைப் பற்றிக்கொண்டது. மாவடுவைக் கடித்த "விடேல்" என்னும் ஓசையும் உடனே எழுந்தது. இறைவர் அருளப்பெற்று மகிழ்ந்தனர். தாயனர் அரிவாளால் கழுத்தை அரிந்ததனுல் "**அரிவாட்டாயர்**" என்ற நாமம் அவருக்கு உண்டாயிற்று.

உணவுக்குரிய சத்துக்கள் நிறைந்துள்ளமையால் செந்நெல் சிறந்தது. கார்நெல் தாழ்ந்தது. ஆகையால் தாயனர் செந்நெல் அரிசியையே இறைவர்க்குத் திருவமுதுக்கு ஆக்கினர். கார்நெல்லைத் தமக்கு அமுதுக்காகக் கொண்டனர். அதற்கு மாருக இந்நாளில் மக்கள் நல்ல அரிசியைத் தங்கள் அமுதுக்குக் கொண்டு தாழ்ந்த அரிசியைக் கடவுளுக்குப் படைக்கின்ருர்கள். சம்பா நெல் விலையுயர்ந்தது. குறுவை விலை குறைந்தது. ஒரு கோயிலுக்கு இருவகை நெல்லும் விளைந்துவர அதுகண்டு சம்பாவை விற்றுவிடவும் குறுவையை இறைவர் நிவேதனத்துக்கு வைத்துக்கொள்ளும்படியும் உத்திரவிட்டார் அக்கோயில் நிர்வாக அதிகாரி (Executive Officer).

வறுமை வந்த நாளிலும் தமக்கு உணவுக்கு நெல் இல்லாத போதிலும் தாம் செய்த திருப்பணியை விடாது செய்துவந்தனர் தாயனர். இதனுல்தான் அவர் செயற்கரும் செய்கை செய்த பெரியோராயினர். அதில் தாமும் ஒத்துழைத்துப் பங்குகொண்டனர் அவரது கற்பிற் சிறந்த மனைவியார். அவரது ஒத்துழைப்பு இல்லாவிடில் தாயனுரால் அவ்வாறு செய்ய இயலாது. "வட நெடுவான மீனே அனையவர்" என்று புகழப் பெற்றனர். இறைவர் பணியிலும் ஆனைந்து ஏந்தி உடன் சென்று பங்குகொண்டனர். நெல்லில்லாதபோது கீரை கொணர்ந்துவந்து அமுதாக்கிக் கணவரை ஊட்டினர். அதுவும் மாய்ந்தபின் தண்ணீர் வார்த்தூட்டினர். தாமும் அவ்வாறே உண்டிருந்தனர்.

## 15. எச்சதத்தன் மனைவியார் - பவித்திரை

எக்காலத்தும் பொய்க்காது பெருகுகின்ற காவிரி பாயும் சோழ நாட்டிலே மண்ணியாற்றின் தென்கரையிலே முன்னாளில் தாரகாசுரனையும் கிரவுஞ்சமலையையும் சங்கரித்துச் சூரபன்மனைச் செயிக்கப் போகும் வழியிலே முருகப் பெருமானால் உண்டாக்கப்பட்ட மறைமூதூர் சேய்ஞலூர். அதில் மறையவர் மரபிலே காசிபகோத்திரத்திலே எச்சதத்தன் என்பவன் இருந்தான். அவனுடைய திருமனைவியார் பவித்திரை என்பவள் அவனுடன் ஒத்தகுடி மரபில் வந்துதித்தவள். அவனுடன் சுற்றந் தழுவுதலிற் சிறந்து விளங்கி இல்வாழ்க்கை நடத்திவந்தாள். துணையாக உள்ள புதல்வனையும் பெற்று விளங்கும் தவமுடையவளாயினாள். பெறுதற்கரிய பெரும்பேறாகிய பயனைப் பெற நின்றாள். பற்றுக்களை எல்லாம் அறுக்கும் பற்றுவருவதற்குரிய பற்றுக் கிடைப்பதற்குச் சார்பாய் உள்ளவள்.

> "பற்றுக பற்றற்றான் பற்றினை, யப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு" (திருக்குறள்)

இவ்விருவர்க்கும் மகனாக விசாரசருமர் வந்தவதரித்தார். ஏழுவயதளவில் அவர்பால் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. ஊர்ப் பசுக்களை மேய்க்கும் இடையன் ஒருநாள் ஒரு பசுவைக் கோல்கொண்டு புடைத்தான். விசாரசருமர் அது கண்டு வெகுண்டார். பசுக்களின் மேன்மையை உள்ளவாறுணர்ந்தார். இடை மகனை நீக்கித் தாமே பசு மேய்க்கத் தொடங்கி மேய்த்து வந்தார். இவர் மேய்க்கும் நன்முறையினால் பசுக்கள் செழித்தன. கறவாமலே பால் பொழிந்தன. அதுகண்டு பசுப்பால் சிவனுக்குத் திருமஞ்சனமாகும் என்ற குறிப்புணர்ந்தார். மண்ணிக்கரையினில் மணலால் கோயிலாக்கி மணலால் சிவலிங்கம் வைத்துப்

பசுப்பாலைத் திருமஞ்சன மாட்டினார். அதுகண்டு எச்ச தத்தன் வெகுண்டு திருமஞ்சனப்பாற் குடத்தைக் காலால் இடறிச் சிந்தினான். அதுகண்டு விசார சருமர் அவன் கால்கள் சிந்தியதனாலே அவனை வெகுண்டு தந்தை யெனவே யறிந்து பக்கத்திற் கிடந்த கோலை எடுத்தார். அதுவே மழுவாயிற்று. அதனால் அவன் இருதாள்களை யும் வெட்டினார். இறைவர் வெளிப்பட்டு அவருக்குச் சண்டீசனும் பதந்தந்து மகனாகக் கொண்டருளினார். எச்ச தத்தனும் விசாரசருமரால் தண்டிக்கப்பட்டுக் குற்றம் நீங்கிச் சுற்றமுடன் சிவலோக மடைந்தான்.

இவ்வாறு உலகச் சுற்றமாகிய பற்றையும் பிறவிப்பற் றையும் விசாரசருமர் எறிந்து உதறினார். அது இறைவ ரைப் பற்றிய அன்பின் திறத்தாலாகியது. அது வருதற் குப் பவித்திரை அக்குழவியை ஈன்றெடுத்து வளர்த்த சார்பினாலாகியது. முன்னைவிதியும் உடனின்று துணை செய்தது. குழந்தைகளின் நல்வளர்ச்சிக்குத் தாய் முக்கிய சார்பாகிய துணைக்காரணமாயுள்ளவள். எச்சதத்தன் செய்த சிவாபராதம் சுற்றத்தாரையும் சூழ்ந்தது. அவன் தண்டிக்கப்பட்டு புனிதமானவுடன் சுற்றத்தாரும் புனித மடைந்து சிவலோக மடைந்தனர். அவனுடனே பவித்தி ரையும் சிவலோகம் அடையப் பெற்றனள்.

# 16. மாதினியார்

பெண்ணையாற்றினால் வளம்படுத்தப் பெற்ற திருமுனைப்பாடி நாட்டிலே தெய்வநெறிச் சிவம் பெருக்கும் திருவாமூரிலே வேளாளர் மரபிலே குறுக்கையர் குடியிலே புகழனார் என்றொரு பெரியவர் இருந்தார். அவர் மனைவியார் மாதினியார் என்பவர். இதுபோன்ற நலங்களுடைய மாது இனி யார் உளர் ? என்று சொல்லத்தக்கபடி அப்பெயர் அமையப் பெற்றவர் அந்த அம்மையார். அக்குடிக்கு உரிமையுடைய ஒப்பற்ற குலக்குடியிலே வழிவழி வந்தவர். இல்லறம் புரிந்துவிருந்தளிக்கும் மேன்மையுடையவராய் வாழ்ந்தார். அவர் மணிவயிற்றிற் செங்கமல மலர்த் திருவைப் போன்ற திலகவதியம்மையார் பிறந்தார். அவர் பிறந்து சிலமுறை யாண்டுகள் சென்றபின் கலைகள் தழைப்பவும் தவநெறி வாழ்ந்திடவும் இருளை நீக்கி ஒளிதரும் ஞாயிறுபோல பின் மலரும் மருணீக்கியார் வந்தவதரித்தார். தந்தையாரும் தாயாரும் பெருமகிழ் சிறந்து மைந்தரை முறைமையால் வளர்ப்பார்களாயினர். திலகவதியாருக்கு 12 வயதாயிற்று. கலிப்பகையார் என்பவருக்கு மணம்பேசி நிச்சயிக்கப் பட்டது. ஆனால் மணம் நிகழ்வதற்குமுன் கலிப்பகையார் அரசனேவலின்படி போர்முனைக்குப் போயினார்.

தொன்றுதொட்டு நிலையாமை யுடைத்திவ்வுலகம் என்ற உண்மையின்படி வினையின் பயனாகப் புகழனார் இவ்வுலக வாழ்வைத் துறந்து விண்ணுலகம் புக்கனர். அவர் உயிர் நீத்த உடனே சுற்றத்தாரையும் மக்களையும் துகளாக எண்ணி நீத்து உடன் என்றும் பிரியாத உலகமடையும் கற்புநெறி வழுவாமற் மாதினியார் தாமும் உயிர் நீத்துக் கணவருடன் சேர்ந்தனர்.

கணவருயிர் நீத்தபோது தாமும் உயிர்விட்டு அவருடன் போய்ச் சேருவதே கற்புநிலை யென்று முன்னுளிற்

கருதப்பட்டது. தமிழ் இலக்கணமும் விதிக்கின்றது. பழந்தமிழ் இலக்கியங்களும் புகழ்ந்து பேசுகின்றன. அவ்வாறு செய்ய இயலாத பெண்டிர் கைமை நோன்பு மேற்கொள்ளுதல் பற்றியும் தமிழ் நூல்களிற் கேட்கின்றோம். விதவா விவாகம், மறுமணம் முதலிய வழக்குக்கள் முன்னூல்களில் இல்லை. அவையெல்லாம் நவீன கோர நாகரிகத்தின் விளைவுகளேயாம்.

ஒத்தமரபில் ஒத்தகுடியில் வழிவழி வந்தவர்களுள்ளே மணஞ்செய்தல் முன்னுள் மரபு. "இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி" என்று திருமுருகாற்றுப்படையிற் கூறியபடி தந்தை வழியும் தாய் வழியும் சுட்டியறியத் தக்கதாய் பலமுறையும் வழி வழி வந்த மரபில் திருமணங்கள் நிகழும். மாதினியார்பாற் றிலகவதியார் பிறந்து சிலமுறை யாண்டுகளுக்குப் பின் தான் மருணீக்கியார் அவதரித்தார். 2, 3 ஆண்டுகளுக்கொருமுறைதான் மகப்பேறு பெறுவது உடல்வளர்ச்சிக்கும் நல்வாழ்விற்கும் ஏற்றது.

# 17. திலகவதியம்மையார்

புகழனுருக்கும் மாதினியாருக்கும் மகவாகி வந்து பிறந்தார் திலகவதியம்மையார். அவர் பிறந்து சீராய்ப் பன்னிரண்டாண்டு வளர்ச்சியடைந்தார். மணப்பருவம் வந்தது. அப்போது அவரை மணம் பேசியனுப்பினர் கலிப்பகையார் என்ற காண்டகு வீரர். மணமகனுக்கு வேண்டிய எல்லா நலன்களும் அவரிடம் நிறைந்திருந் தன. சிவபெருமானிடம் அன்புடையவர். அரசனிடம் அரு ளுடையார். வீரத்திறத்தில் அடல் ஏறுபோல்வர். மிகுந்த அழகுடையவர். ஒத்தகுடி வேளாளர் குடித்தலைவர். மணம் பேசவந்த மூதறிவோர்கள் வந்த படியைப் புகழனரிடமறி வித்தனர். அவரும் குலமும் குணமும் முதலியவற்றைப் பேசி மணமிசைந்தார். அவர்கள் சென்று கலிப்பகை யார்க்கு அறிவித்தனர். ஆனால் மணமுடிப்பதன் முன் மன்னவர்க்கு வடபுலத்தோர் போரிட்டு வந்தனர். கலிப் பகையாரைப் போர்முனையிற் சென்று போர் செய்யும்படி சொல்லி அவருக்கு மன்னவன் விடைகொடுத்தனுப்பி னன். அவரும் விடைகொண்டு அவ்வினை மேற்சென்று நெடுநாள் போர்செய்து நின்றனர்.

இப்பால் இங்குத் திலகவதியாரின் தந்தையார் புகழ னர் பழமையாக வரும் " நிலையாமை " என்றதனலே தீய வினைப்பயத்தாலே பிணி மூண்டு இவ்வுலகைவிட்டு நீங்கி விண்ணுலகடைந்தனர். கணவனர் உயிர்நீத்தவுடனே மனைவியார் மாதினியார் மக்களையும் சுற்றத்தாரையும் துகளாகவே நீத்துக் கணவனருடன் போய்ப் பிரியாத உலகெய்தும் கற்பு நெறி வழுவாமல் கணவனருடன் சென்றுவிட்டார். இவ்வாறு தந்தையாரும் தாயாரும் இறந்து விட்டதனல் திலகவதியாரும் தம்பியாராகிய மருணீக்கியாரும் பெருந் துயரத்தி லழுந்தினர்கள்.

கிளைஞர்கள் மனந்தேற்றத் தேறி தந்தை தாயர்க்குச் செய்யவேண்டிய இறுதிக் கடமைகளை எல்லாம் ஒழுங்காகப் பெருகச் செய்து முடித்தனர்.

இங்கு இவ்வாறாக அங்கு அரசனுக்காகப் போர் முகத்துப்போயின கலிப்பகையார் போரில் உயிர் கொடுத்துப் புகழைக் கைக்கொண்டனர். அவர் அரசனுக்காகச் சென்று தம்முடைய கடன் கழித்த பெருவார்த்தை உலகோர் சொல்லக்கேட்டனர் திலகவதியார். "எனது தந்தையாரும் தாயாரும் என்னையவர்க்குக் கொடுக்க இசைந்தார்கள். அந்த முறைமையினுல் நான் அவருக்கே உரியது. ஆதலால் என் உயிரை அவர் உயிரோடு போய்ப்பொருந்தச் செய்வன்" என்று துணிந்தார். அவரடிகளில் வீழ்ந்து மருணீக்கியார் புலம்புவாராய், "அன்னையும் அத்தனும் போய்விட்டபின் நான் உம்மை வணங்கப் பெற்றதனுல் உயிர் தாங்கி நிற்கின்றேன்; என்னை இனித்தனியே கைவிட்டுப் போவீராகில் நான் உமக்கு முன்னே உயிர் நீப்பேன்" என்று சொல்லி மிக்க துன்பத்துளாழ்ந்தனர். தம்பியார் உலகத்தில் உயிர் வாழ்ந்திருக்கவேண்டும் என்று தயை கொண்டனர் திலகவதியார். அந்தத் தயையானது அவர் உயிர் நீக்கும் செயலை விலக்கிற்று. உயிரைத் தாங்கினுர். வேறு மணம் செய்து கொள்ளவில்லை. எல்லா உயிர்களிடத்தும் கருணை பூண்டு மனையிலிருந்து தவஞ் செய்து இருப்பாராயினர். தம்பியார் துயர் நீங்கினுர். அவருக்கு வயது வந்தது. தேச நெறி நிலையாமையைக் கண்டார். அதுகண்டு அறங்கள் செய்வாராயினர். உலகில் புகழ்விளங்கும்படி பலருக்கும் நிதி முகந்து கொடுத்தார். கருணையினுல் குற்ற மற்ற அறச்சாலைகளையும், தண்ணீர்ப் பந்தர்களையும் அமைத்தார். சோலைகளை வளர்த்தார். குளங்களைத் தோண்டினுர். வந்தோர்களுக்கு வேண்டுவனவற்றை மகிழ்ந்தளித்தனர். விருந்தோம்பினுர். நாவலர்களுக்கு

நலம் பெருக நல்கினர். எல்லார்க்கும் தவிராத ஈகைத் துறை நின்ருர். நிலையில்லாத உலகியல்பு கண்டு நிலை யில்லாத வாழ்க்கையில் உட்படமாட்டேன் என்று அறவே துறவு பூண்டார். சமய விசாரணை செய்யத் தொடங் கினர். சமயங்களின் நல்லாற்றைத் தெரிந்துணரும்படி இறைவர் அருளாமையினலே கொல்லாமை என்ற போர் வையின்கீழ் மறைந்து கொடுமைகளைச் செய்து ஒழுகு கின்றவர்களாகிய சமணசமயத்தைச் சேர்வாராயினர். பாடலிபுத்திர நகரிலே சமண் பள்ளியைச் சேர்ந்தார். சமணர்கள் வீடறியும் நெறியிதுவே என்று மெய்போற் காட்டித் தங்களுடன் கூடவரும் உணர்ச்சி பெறும்படியாக அவர்க்குக் குறிகள் பலவற்றையும் கொளுவினர்கள். சமண சமயக்கொள்கைகளை யெல்லாம் நன்ருகக் கற்றனர். அவற்றிற் சிறந்து விளங்கினர். சமணர்கள் அதுகண்டு மகிழ்ந்து தங்களின் மேலாம் **தருமசேனர்** என்னும் பட்டப் பெயர் கொடுத்தனர். அதில் அறிவு மிகுந்தவராய்ச் சித்த நிலையறியாத புத்தர்களை வாதினில் வென்ருர். சமண சமயத் தலைமையில் மேம்பட்டு விளங்கினர். இவ்வாறு அவர் ஒழுகிவருநாளிலே தவநெறியில் வாழ்வாராகிய திலகவதியார், தொன்மையாக வந்த சுற்றத்தொடர்பு ஒழிந்ததனலே தூய சிவநன்னெறி சேர்வதற்கு இறைவர் தாளில் சரண் அடைவாராயினர். திருவாமூரைவிட்டு கெடில நதியின் வடகரையிலுள்ள திருவதிகை வீரட் டானத்தைச் சேர்ந்தனர். அங்குச் சென்று வீரட்டானேசு வரரை வணங்கினர். குற்றங்களை நீக்கும் திருநீறு உருத்திராக்கம் இவற்றைத் தாங்கினர். அன்று முதல் தொடங்கித் தமது கையினல் திருப்பணிகள் செய்யலாயி னர். திருக்கோயிலுக்கு அணிமையில் ஒரு சிறிய திருமடம் அமைத்துக்கொண்டனர். அத்திருமடத்தின் மனைக்கட்டு இன்றுமுள்ளது. அதில் ஒரு புதிய திருமடம் அமைக்கப்பட்டுள்ளது. விடிவதற்குமுன் திருக்கோயிலில்

திருவலகிட்டும் புனிறகன்ற ஆன்சாணத்தால் நன்கு திருமெழுக்கிட்டும் பணிசெய்தனர். தமது தம்பியார் கோளுறு தீவினைப்பயத்தினுலே பிற சமயத்துட் புகுந்த தனுக்கு மூண்ட பெருந்துன்பமடைந்தாராகி இறைவனை நோக்கித் தொழுது, "தேவரீர் என்னை ஆண்டருளு வீராகில் அடியேன் பின்வந்த தம்பியை ஈண்டு வினைப் பர சமயக் குழியிலிருந்து எடுத்தருளவேண்டும்" எனப் பலமுறையும் விண்ணப்பம் செய்தனர். தவமென்று பாயிடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் சமண் என்னும் அவநெறியில் வீழ்வானுகிய அவனை வீழாதே அருள வேண்டும் என்று திலகவதியார் பரவத் தீவினை தீர்ப்பா ராகிய இறைவர் திருவுள்ளம் கொண்டனர்; திலகவதி யார்க்குக் கனவில் தோன்றி "உன்னுடைய மனக்கவலை ஒழி நீ; உன் உடன் பிறந்தானுகிய தம்பி முன்னைப் பிறவியில் ஒரு முனிவனுக இருந்து எம்மை அடையத்தவஞ் செய்தனன். அத்தவத்திற் சிறிது குறை நேர்ந்ததனுலே சூலை நோய்தந்து ஆட்கொள்ளத் திருவுள்ளங் கொண் டுள்ளோம்" என்றருளினுர்.

தருமசேனர் வயிற்றிற் சூலைநோய் சென்று பற்றியது. அவர் கொடுந்துயருழந்தார். கொடுவிடமும் வச்சிரமும் பிறவுமாகிய கொடிய வெல்லாம் ஒன்ருகக்கூடிப் புகுந்தது போல அவரை வருத்தம் செய்தது. நோய் மிகவே அவர் வருந்திப் பாழியறையில் சுருண்டு விழுந்தயர்ந்தார். மந்திரமும் மருத்துவமும் கைவந்து வல்லவர்களாகிய சமணர்கள் சூழ்ந்துகொண்டு தாம் வல்ல முயற்சிகளை எல்லாம் செய்தனர். பீலியைத் தடவி மந்திரித்தனர். மந்திரித்த குண்டிகை நீர் குடிப்பித்தனர். நல்ல மருந்து களைப் புகட்டினர்; ஒன்ருலும் நோய் தணியவில்லை. இது நம்மாற் போக்கரிது என்று சொல்லிக் கைவிட்டகன்றனர். சூலை நோயால் மிக வருந்திய தருமசேனர்க்குத் தமக்கை யார் திலகவதியாரின் நினைவு வந்தது. அவர்பாற்

சென்று தமது நிலையைச் சொல்லித் தாம் உய்யும் வகையைக் கேட்டறிந்து வரும்படி இரவிலே தமக்கு ஊட்டுவோனாகிய சமையற்காரனை அனுப்பினார். அவனும் அவ்வாறே இரவிலே சென்று அப்போதே திருவதிகையினை யணைந்து திலகவதியார் திருமடத்திற் சேர்ந்து தம்பியார் அனுப்ப வந்ததை அறிவித்தான். சூலைநோய் வருமென்று முன்னமே இறைவர் அறிவிக்க அறிந்திருந்தாராதலின், “ தீங்குளவோ ?” என்று கேட்டார். அவன், “ஆம் ; கொல்லாது சூலை வந்துள்ளது ; குடரை முடக்கியது ; தீராமையால் எல்லாரும் கைவிட்டகன்றனர். இச் செய்தியை என்னுடன் பிறந்த நல்லாள்பாற் சென்று சொல்லி நான் உய்யும்படியைக் கேட்டுவா, என்று என்னை அனுப்பினார் ” என்றான். அவர் “நான் உன்னுடன் போந்து நன்மையறியாத சமணர் பள்ளியில் வரமாட்டேன் என்ற செய்தியை அவனுக்குச் சொல்லு ” என்று அவனிடம் சொன்னார். அவனும் அவ்வாறே சென்று அறிவித்தான். அவர் அதுகேட்டுத் திருவதிகை சேர்வதற்குத் துணிந்தெழுந்தார். உடுத்த பாயினை விட்டெறிந்தார் ; குண்டிகையையும் பீலியையும் எறிந்தார் ; வெண்புடவை யுடுத்தார் ; சிறிது ஊக்கம் வந்தது : கைதருவாரை ஊன்றிக்கொண்டு செல்லத் தொடங்கி அன்றிரவே பிறரறியாதபடி திருவதிகை சேர்ந்தார். இரவில் சமையற்காரனை அனுப்பியதும் இரவில் பிறரறியாதபடி சென்றதும் என்னையோ எனின் : சமணர்கள் பொல்லாதவர்கள் ; கொல்லாமை என்ற போர்வையுள்ளே மறைந்து நின்று கொலை முதலிய எவற்றையும் செய்வார்களாதலால் என்க. திருவதிகை சேர்ந்தார். திலகவதியாரிருந்த திருமடத்தைச் சேர்ந்தார். அம்மையார் திருப்பள்ளியெழுச்சிக்குப் பணிசெய்ய எதிர்வந்தார். அவரடியிற்றாழ்ந்தார். “ நமது குலம் செய்த நற்றவத்தின் பயன் அனையீர் ! இந்த உடலிலே பற்றிய கொடிய சூலை நோயால்

வருந்தியடைந்தேன் ; உய்ந்து கரையேறும் வழி சொல்வீர்'' என்றார். ''பரசமயக் குழியில் விழுந்தயர்வீர்! எழுந்திரீர். இது இறைவரருளேயாகும். இறைவரை அடைந்து பணி செய்வீராக '' என்று அவருக்குத் திருநீற்றை அஞ்செழுத்தோதிக் கொடுத்தார். அவர் அதை யேற்றுத் திருமேனி நிறையப் பூசிக்கொண்டனர். திருமெழுக்கும் தோண்டியும் கொண்டு அவரையும் அழைத்துக்கொண்டு திருக்கோயிலுக்குள் சென்று இறைவர் திருமுன் விட்டனர். அவரும் நோயுடன் சென்று திருமுன்பு நின்று இறைவரைப் பாடும் உணர்வு வரக் " கூற்றாயினவாறு விலக்ககிலீர் '' என்று பாடினர். நோய் அக்கணமே நீங்கிற்று. திலகவதியார் தாம்பெற்ற பேற்றை எண்ணி மகிழ்ந்து இறைவரை வணங்கினர். தருமசேனருக்கு அவர் திருவாக்கின் வளத்தை நோக்கித் " திருநாவுக்கரசு '' என்று உன் பெயர் உலகில் விளங்குக '' என்று இறைவர் அசரீரியின் மூலம் அருளினர். அவர் அன்று முதல் பணிசெய்வாராயினர். திலகதியார் வரலாறு இதனோடு முடிகின்றது. அவரைத் திருநாவுக்கரசர் தாம் கடலில் கல்லின் மிதந்து கரையேறிய பதிகத்தில் இறைவரே " உடன் றோன்றினராய் '' வந்தருளினர் என்று துதித்துப் போற்றினர்.

மெய்ம்மைப் பணிசெய்த விருப்பதனல்
விண்ணோர் தனிநாயகனர் கழலிற்
றம்மிச்சை நிரம்ப வரம்பெறுமத்
தன்மைப் பதிமேவிய தாபதியார்
பொய்ம்மைச் சமயப்பிணி விட்டவர்முன்
போதும் பிணிவிட்டருளிப் பொருளா
எம்மைப் பணிகொள் கருணைத்திறமிங்
கியார் பெற்றனர் ? என்றிறைஞ்சினரே ''

(திருநாவுக்கரசர் புரா-78)

கூற்ருயின வாறு விலக்ககிலீர்
　　கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்ரு யடிக்கே யிரவும்பகலும்
　　பிரியாது வணங்குவ னெப்பொழுதும்
தோற்ரு தென்வயிற் றினகம்படியே
　　குடரொடு தொடக்கி முடக்கியிட
ஆற்றே னடியே னதிகைக்
　　கெடில வீரட்டானத் துறையம்மானே.
(அரசு - தேவாரம் - திருவதிகை வீரட்டானம்-1)

இச் சரிதத்திளுல் பற்பல உண்மைகளை நாம் அறிந்து ஒழுகவேண்டியவர்களா யுள்ளோம். ஒரு சிலவற்றை மட்டும் இங்கே தருகின்ருேம்.

திலகவதியார் 12வது வயதிலேயே ஒரே நாளில் தந்தையையும் தாயையுமிழந்தார். மிகவும் துன்பத்து ளாழ்ந்தினர். இஃது உலகியல்பி னிகழ்வதுதான். ஆனல் இங்குத் திலகவதியாருக்கு நேர்ந்த துன்பம் மிகக் கொடியது. சிறு கன்னிப் பருவத்தில் தாயை இழத்தல் பெருந் துன்பம் ; அதுவும் சடுதியிலிழத்தல் பெருந்துன்பம். இல்லத்தில் 10 வயதளவில் உள்ள தம்பியார் ஒருவரைத் தவிர அக்குடும்பத்தில் வேறு ஒருவருமில்லை. குடும்ப பாரம் முழுவதும் திலகவதியார்மேல் விழுந்தது. ஆயினும் ஒருவாறு கிளைஞர் மனந்தேற்றத் தேறித் தந்தை தாயார்க்குச் செய் கடன்களெல்லாம் செய்து முடித்தனர். ஒருவாருகத் தேறியிருந்த அவர்க்கு மேலும் ஒரு பெருங் கொடுந்துன்பம் நேரிட்டது. அவர்க்கென்று மணம்பேசியிருந்த கலிப்பகையார் மன்னவனுக்காகச் சேனைத் தலைமை பூண்டு வடபுலத்தார்மேற் போர்க்கென்று சென்று நெடுநாட் போர்செய்து நின்றவர் போரில் இறந்தார். உயிர்கொடுத்துப் புகழ்கொண்டார். தம்முடைய கடமையைச் செலுத்தி ஒழிந்தார். இச் செய்தி சிலநாளில் இங்கே எட்டியது.

அவ்வார்த்தை திலகவதியார் கேட்டார். இடி விழுந்தது போலாயினர்.

தந்தையும் தாயும் என்னை அவருக்குக் கொடுக்க இசைந்தனர். அந்த முறையால் அவர்க்கே நானுரியவளாய் விட்டேன். என்னுயிரை அவருயிரோடு இசைவிப்பன் என்று எரிபாயத் துணிந்துவிட்டனர். கணவனிறந்தால் அவனுடன் எரிபாய்ந்திறத்தல் அந்நாள் வழக்குகளிலொன்று. அது கற்பினியல் என்று கருதப்பட்டது. பழந்தமிழ் நூல்களில் போற்றப்பட்ட வழக்கு. தமிழ் இலக்கணத்திலும் பேசப்பட்டது. திலகவதியார் தாயார் மாதினியார் அவ்விதமே சென்றார். ஆனால் இங்கு மேலுமோர் நலம் கவனிக்கத் தக்கதாம். இங்கு மணம் பேசித் தந்தை தாயார் ஒப்பினார்களேயன்றித் திருமணம் நிகழவில்லை. "வதுவை வினைமுடிப்பதன்முன்" என்கிறார் ஆசிரியர். தந்தை தாயார்களின் ஒப்புதலிலேயே மணம் நிகழ்ந்து விட்டதாகத் திலகவதியார் கொண்டனர். அஃது ஒரு பெருங் கொள்கை. பெண்களை மணம்செய்து கொடுக்கும் உரிமை பெற்றோர்களுக்கே யுண்டு. அவர்களது மண இசைவே முடிவு. இசைவு என்ற மனநிகழ்ச்சியாலே அச்செயல் நிகழ்ந்துவிட்டது. ஏனைய மணவினைகள் எல்லாம் வெளிச் சடங்குகளாய்ப் பலரறியச் செய்வனவேயாம் என்று கொண்டனர் திலகவதியார். இது நம் நாட்டு முன்னைய வழக்கு. பெண்களைத் தமக்கென்று செயலில்லாக் கொடைப் பண்டங்களாகவே கொண்டனர். "பெண்ணுரிமை" என்பனவெல்லாம் பிற்கால வழக்கு. ஒன்றன்பின் ஒன்றாகப் பல மணங்கள் செய்தல் இந்நாள் நவநாகரிகக் கோரவழக்கு என்று ஓரிடத்தில் எழுதினேன். அதைப் பார்த்த பெரியார் ஒருவர் "ஒன்றன் பின் ஒன்றாக" என்பது "ஒருவர் பின் ஒருவராக" என்றிருக்க வேண்டுமே என்றார். அதற்கு நான், இவ்வழக்கு மேற்கொள்பவர்கள் அஃறிணையே யாவரன்றி உயர்திணை

யாகார்கள். இவர்கள் மேற்கொள்வது அஃறிணையாகிய மிருக வழக்கே யாகுமென்றேன். மணமாகாத நிலையில் பெண்கள் பெற்றோர்களின் காவலிலும், மணம் செய்த பின் கணவன் காவலிலும், பிற்காலத்தில் மக்கள் காவலிலும் இருக்கத்தக்கவர்கள் என்பது நம் நாட்டு முன்னாள் மரபு. இது சமூக நலத்துக்கும், குடும்ப நலத்துக்கும், தனி நலத்துக்கும் நன்மை தருவதாம்.

இந்நாளில் நமது நாடு மேல் நாடுகளைப் பார்த்து அவற்றின் வழக்கங்களையே மேல் என்று கொண்டு அதற்குத்தக்கபடி மாறுதல்களை யடைய முயன்று வருகின்றது. மணம் என்பதை மிருக உணர்ச்சிக்காகவே கொண்டு ஒழுக முயன்று வருகின்றது. அதையொட்டியே மக்களின் மனப்பான்மையும் அதற்கிசைய அரசியல் மனப்பான்மையும் அமைந்து வருகின்றது. உண்டல், உடுத்தல், மகப்பெறுதல் இவை எல்லா நாடுகளுக்கும் ஒக்க நிகழ்வனவே யாகும். அவை உடலோடு ஒழிவன. அழியுந்தன்மையுடையது உடம்பு. உயிர் என்ற ஒரு பண்டம் உண்டு; அது அழியாதது. பிறவிகள் தோறும் தொடர்ந்து வருவது என்ற நினைவே யில்லாது வாழ்வன பிறநாடுகள். நமது நாடு ஒன்றே ஆன்மீக உணர்ச்சியுடன் வாழ்வது. அதுவே நம் நாட்டுக்குச் சிறப்பிலக்கணமாம். அதுவே நமது நாட்டுக்குச் சிறப்புத் தருவது. அதுவே மக்கள் மேம்பாடு அடைவதற்குரிய குறிக்கோளாயிருக்கத்தக்கது. அந்தக் குறிக்கோளைத் தேடித் தருவதற்குத் துணைசெய்வது பெண்ணுலகமே யாம். நம் நாட்டில் இந்நாளில் இவ்வளவிலாவது தருமங்கள் நிகழ்ந்துவருவது பெண்களாலே என்பதுண்மை. அவ்வுலகம் தூய்மையாக ஆன்ம உணர்ச்சியோடு ஒழுகினாலன்றிச் சமூகம் உயிரினியலில் மேம்பாடடைதல் இயலாது. நமது முன்னாள் மரபிலிருந்து மாறி இந்நாளில் **சீர்திருத்தம்** என்ற பெயரால் நிகழ்வன எல்லாம் பிழைபாடுகளேயாகும். சீர்திருத்தம் என்றால்

" சீரைத் திருத்தம் செய்வது " என்ற பொருளில் அமையு மேயன்றிச் "சீரகத் திருத்தம் செய்வது" என்றமையாது. இந்நாளில் போற்றப்படும் " விதவா மணம் " " கலப்பு மணம்" "விவாக ரத்து" என்றெல்லாம் இயக்கங்கள் இந் நிலையில் வருவனவேயாம். கீழ்க் கீழ் போய்க்கொண்டே மேல் மேல் போவதாக எண்ணும் மயக்க உணர்ச்சியில் எழுவன. " என் குழந்தைகளும் உன் குழந்தைகளும் நம் குழந்தைகளும் ஒக்க விளையாடுகின்றன" என்று கூறி நிற் பது நம் நாட்டுக்கு மேன்மை தரும் ஒழுக்கமன்று. ஐம்புல வின்பங்களை அடக்கித் தம் வயமாக்கித் தம் வயத்தில் நிற்க வைத்தலாலேதான் ஆத்மிக உயர்வு வருமேயன்றி அவற் றின் வழியே தாம் நடப்பதால் வராது. ("தம்மை யைந்து புலனும் பின் செல்லும் தகையார் " பெரிய புராணம் - சண்டீ - புரா - ) இந்த ஒழுக்கம் நம் நாட்டிலேதான் உண்டு. ஏனைய நாடுகளில் (பெரும்பான்மை) இல்லை.

இவ்வாறு தாம் கணவர் என்று கொண்டவருடன் சேர உயிர் துறக்க நின்ற திலகவதியார் அடியில் வந்து வீழ்ந்து தம்பியார் மருணீக்கியார் புரண்டழுதார். " அன் னையு மத்தனும் போயினபின் உம்மை வணங்கப் பெற்றத னால் உயிர்தரித்து வாழ்ந்தேன் ; என்னை இனித் தனியாக இருக்கக் கைவிட்டுப் போவீரானால் உமது முன்னே நானும் உயிர் நீப்பேன் " என்று அழுதார். அம்மையார் தம்பியார் பேரில் தயை கூர்ந்தார். தம்பியார் இறந்துபடாமல் உள்ளாராகவேண்டும் என்று தயா வைத்தார். " தாமும் இறந்து தம்பியாரும் இறந்துபடில் தம் குடும்பமே இதனோடு இற்றுவிடும். குடும்பத்துக்கு ஒருவன் வேண்டுமே " என்று எண்ணினார். இந்த தயா வானது அவர் அம்மையுலகில் கணவனுடன் சேர எண் ணிய துணிபையும் மாற்றிற்று. இது அவர் தம்பியாருக் குச் செய்த முதலாவது அருளிப்பாடு. தம் நலத்தைக் கருதாது செய்த தனிச்செயல். உயிர் தாங்கியிருக்க

இசைந்தார். அவர் செய்த மேம்பட்ட அருள் மேலே காண்போம். ஆனால் மங்கலநூல் பூணும் மறுமணம் செய்துகொள்ளவில்லை. எல்லா உயிர்களிடத்தும் அருள் பூண்டார். மனையில் இருந்தபடியே தவஞ்செய்திருந்தார். கணவனை யிழந்தோர்க்கு உடன் ஏகுதல் விதித்த தமிழ் இலக்கணம். அது கூடாவிட்டால் தாபதநிலை என்று ஒன்றையும் விதித்துள்ளது. அந்த வழியே மரபு வழக்கில் உள்ளது. அந்நிலையை மேற்கொண்டிருந்தனர் திலகவதியார்.

இவ்வாறு ஒழுகிவருகின்ற காலத்தில் தம்பியார் சமண சமயம் புக்கனர். இதனோடு திலகவதியாருக்குக் குடும்ப பாசம் ஒழிந்தது. தம் இல்லத்தையும் பதியையும் விட்டு நீத்து ஒழித்தனர். உலகப்பற்று ஒழியவே வீட்டையும் ஊரையும் விட்டனர். திருவதிகை சேர்ந்து இறைபணி செய்யலாயினர். தம்பியாரை பரசமயக் குழியினின்றும் மேல் ஏற்றும்படி இறைவரை வேண்டினர். இறைவரும் அருளினர். இது தம்பியாருக்குச் செய்த இரண்டாவது அருளாகும். இதனாலே தம்பியார் மீண்டுவந்தனர். வந்தவருக்குத் திருநீறு அளித்தனர். பஞ்சாக்கர உபதேசம் செய்து தூய்மைப்படுத்திச் சிவன்பணி செய்யப் பணித்தனர். இது அவர் செய்த மூன்றாவது அருளிப்பாடு. இதனால் சைவத்துக்கு ஒரு சமயாசாரியாரைத் தேடித் தந்தனர். இவர் இவ்வருளிப்பாடுகள் செய்திலரேல் சைவ சமயாசாரியருள் ஒருவரை நாம் பெற்றிருக்கமாட்டோம். மருணீக்கியாரது முன்னைத் தவமும் உடனின்றது. குரு உபதேசமும் திருவருளும் துணைசெய்தன.

இதுகொண்டு சிலர் பரசமயம் புக்கு மீண்டோர்க்குப் பஞ்சாக்கர உபதேசமும் திருநீறுமே போதியன என்று கூறுவர். இவை போதா. உரிய கழுவாயும் செய்யப்பட வேண்டும். அக்கழுவாய்தான் சூலையின் உருவமாய்த் திருவருள் கூட்டவந்தது என்க. இதற்கான கழுவாய்கள் நூல்களுள் விதிக்கப்பட்டுள்ளன.

# 18. காரைக்காலம்மையார்

சோழவள நாட்டிலே பெருமை மிகுந்த வழியிலே வாய்மையிற் சிறந்த பெருவணிகர் குடிகள் நிறைந்து கடற் கழிகள் சூழ்ந்து வளம்செழித்த நகரம் காரைக்கால் என்பதாகும். அதிலே வணிகர் குலத்திலே தலைவராய் விளங்கியவர் தனதத்தனார். அவர்செய்த தவத்தினால் அவர் பால் திருமகள்வந்து அவதரித்தாற்போல் பேரழகு மிகுந்த **புனிதவதியார்** பிறந்தார். அவர் தளர்நடைப் பருவத்திலேயே முன்னைத் தவத்தின் பயனாகும் தொடர்ச்சியினாலே சிவபெருமானிடத்தில் அன்பு பெருகும் மொழி பயின்று பெருங்காதல் மிகுந்த தண்மை சிறந்து விளங்கினார். கிளைஞர்போற்றச் சிவனன்பினுடன் அழகின் கொழுந்து எழுந்தாற்போல வளர்வாராயினர். சிறுமியர் விளையாட்டுக்களிலெல்லாம் சிவபெருமான் திருவார்த்தைகளையே பயின்றார். தொண்டர்கள் வந்தாற் தொழுதெழுவார். உறுப்பு நூலோர் நல்லனவெனக் கூறும் நலங்களெல்லாம் நிரம்பின. "இல்லிகவாப்பருவத்தை யடைந்தனர். இல்லிகவாப் பருவமானது பெண்கள் வீட்டை விட்டு வெளியிற்போய் விளையாடத்தகாது என்று போற்ற வரும் பருவம். மணப் பருவம் வரவே இவர்கள் மரபினுக்கேற்ற குடியில் நாகப்பட்டினத்தில் நிதிபதி என்பான் மகன் பரமதத்தனுக்கு மணம்பேசி முடித்தனர். குறித்த நாளில் நூல் விதிப்படி மணம் நிகழ்ந்தது. குடிக்கொரு மகவாதலினால் நாகையினிற் போகாமே காரைக்காலிலே அணிமாடம் மருங்கு அமைத்து அளவிறந்த செல்வங்களைத் தனதத்தன் கொடுப்பக் கொண்டு தனியாக அவர்கள் இல்வாழ்க்கை நடத்தினர். பெருஞ் செல்வர்கள் தமக்கு ஒரே மகளாக இருப்பின் மணமகன் வீட்டுக் கனுப்பாமல் தம்மிடமே வைத்து வாழவைக்கும் மரபு அந்

நாளிலு மிருந்தது. ஆனால் மாமனார் வீட்டிலேயே இருத்தல் சிறந்ததன்று என்று கருதி வேறு தனியிடத்தில் வாழ்க்கை நடத்தும் மரபு வழக்கும் இருந்தது. பரமதத்தன் வாணிகம் நடத்தினார்; மனைவியார் புனிதவதியார் மனையிலிருந்து சிவனடி மறவாத சிந்தையாராய் அன்பு பெருக இல்வாழ்க்கை நடத்திவந்தார். பரமதத்தன் வாணிகஞ்செய்து வளத்தைப் பெருகச்செய்து வந்தான். அம்மையார் சிவனடியார்கள் வந்தால் அவர்களுக்கு அன்புடனே திருவமுது செய்விப்பார். பொன்னும் மணியும் ஆடைகள் முதலாயினவற்றை அன்புடனே அவ்வவர் தகுதிக்கேற்ப வேண்டுவனவற்றைக் கொடுப்பார். இவ்வாறு சிவனடிக்கீழ் அன்புமிக ஒழுகிவந்தார்.

இப்படி ஒழுகிவரும் நாளிலே தம் காரியமாகவந்த சிலர் பரமதத்தனுக்கு இரண்டு மாங்கனிகள் தந்து தம் காரியத்தை முடித்துச் சென்றனர். அவன் அக்கனிகளை வீட்டிற் கொண்டுபோய்க் கொடுக்கும்படி ஏவலாளனிடம் கொடுத்தான். அவற்றைவாங்கி அம்மையார் வீட்டில் வைத்தனர். அதன்பின் வயது சென்ற ஓர் அடியவர் மிகப் பசித்தவராய் வீட்டிற்கு வந்தனர். அப்போது கறியமுது சித்தமாகவில்லை. திருவமுதுமட்டும் சித்தமாகியிருந்தது. அடியவரின் பசியைநோக்கி அவர்பசி தணிப்பேன் என்று துணிந்து திருவமுது மட்டும் படைத்து அந்த மாங்கனிகளில் ஒன்றை இட்டு உபசரித்தார். வந்த அடியவர் மூப்பினாலும் பசியினாலும் பழத்துடன் அமுதுண்டு அம்மையாரின் அன்பிற்கு மகிழ்ந்துபோயினர். அவர் போயினபின் நண்பகலில் பரமதத்தன் வந்து நீராடி உண்ணப் புக்கனன். அவனுக்கு உணவு படைத்து அம்மையார் மீதமிருந்த ஒரு மாங்கனியையும் கொண்டுவந்து படைத்தனர். மனைவியார் தாம்படைத்த மதுர மிகவாய்ந்த கனியை நுகர்ந்த பரமதத்தன் அதன் சுவையாராமையால் “ இன்னும் ஒரு கனி உண்டு, அதனை

யும் இடுக" என்று கேட்டான். அதற்கு அம்மையார் அதனை அடியவர்க்கு இட்டதனைச் சொல்லமாட்டாதவ ராய்க் கனி கொண்டுவருவார்போல உள்ளே சென்று இறைவனை வேண்டினார். அவர் கையில் திருவருளால் ஒரு மாங்கனி வந்தது. அதைக் கொண்டுவந்து கலத் தில் இட்டனர். அதனை உண்ட பரமதத்தனுக்கு அதன் சுவை, அமுதத்திலும் மேலாக இருந்தது. " இக்கனி மிக வும் சுவையுடையது. முன்னர்கொடுத்த கனியன்று ; மூவுலகினும் கிட்டாதது. இதனை நீ எங்கேபெற்றாய் ?" என்று மனைவியாரைக் கேட்டான். இறைவர் தமக்குச் செய்த அருட்டிறத்தைச் சொல்லக் கூடாமையின் அதைச் சொல்லமாட்டாமலும் கணவனிடம் கற்புநெறி ஒழுக்கத்தி னால் வேறு சொல்லமாட்டாமலும் திகைத்து நின்றார். செய்தபடி உண்மையைச் சொல்லுவதே கடமை என்னும் சீலத்தினால் நடந்ததை உள்ளபடியே சொன்னார். இறை வன் திருவருளைத் தெளியமாட்டாதவனாய்ப் பரமதத்தன், " இது இறைவர் திருவருளானால் இன்னமும் ஒரு கனி அருளால் அழைத்துத் தா " என்றான். அவர் உள்ளே சென்று, " இதனைத் தாராவிடில் என்னுரை பொய்யாகும் ; ஆதலின் இன்னமும் ஒரு கனி அருளவேண்டும் " என்று இறைவனை வேண்டினார். ஒரு கனி வந்தது. அதனைக் கொண்டுவந்து கணவன் கையிற் கொடுத்தார். அவன் அதிசயித்து வாங்கினான். ஆனால் அது உடனே மறைந்து விட்டது. வணிகன் பயந்தான். அம்மையாரை ஒரு தேவதை என்று துணிந்தான். " அவருடன் வாழ்வது தகாது; நீங்கிவிடவேண்டும்" என்று துணிந்துவிட்டான். அச்சத்தையும் அத் துணிவையும் வெளிக்காட்டாமல் மறைத்து ஒழுகிவந்தான். கப்பலேறி வாணிகத்தில் பெரும் பொருளீட்டிப் பாண்டி நாட்டில் ஒரு பட்டினத்தைச் சேர்ந்து முன்னை மணத்தைப்பற்றி வெளியிடாமல் அங்கு ஒரு கன்னியை மணந்து வாழ்ந்தான். ஒரு பெண் மக

வைப் பெற்ருன். அதற்குத் தன் முன்னை மனைவியாரின் பெயரையிட்டான். சில ஆண்டுகள் செல்ல இச்செய்தியைக் கேட்டும் கண்டும் அறிந்த கிளைஞர்கள் அம்மையாரை அவனிடம் அழைத்துக்கொண்டு வந்தார்கள். கணவனுக்கு அறிவித்தார்கள்.

பரமதத்தன் மிகவும் அஞ்சினுன். தன் மனைவியையும் இளங் குழந்தையையும் உடன்கொண்டு மனைவியாரும் சுற்றத்தார்களும் தங்கிய இடத்துக்கு வந்தான். மனைவியாரைக் கண்டு, "யான் உமது அருளால் வாழ்ந்து வருகிறேன். இந்த இளங் குழவிக்கு முறைமையால் உமது பெயரை இட்டிருக்கிறேன்" என்று அவர் முன் பணிந்து அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுன். அம்மையார் வெள்கிக் கிளைஞர்பால் ஒதுங்கி நின்றனர். கிளைஞர்கள் அவனை நோக்கி, "உன் மனைவியை நீ வணங்குவதென்னை!" என்று கேட்டனர். அதற்கவன் "இவர் மானிடமல்லர். நற்பெருந் தெய்வமேயாவர். அந்த உண்மையை நான் அறிந்து அகன்றுவந்தேன்; அதன் பின் பெற்ற இக்குழந்தைக்கு அவர் பெயரைச் சூட்டியிருக்கிறேன்; ஆதலால் வணங்கினேன். நீங்களும் வணங்குங்கள்" என்று சொன்னுன். அம்மையார் நிகழ்ந்ததையறிந்தார். "இங்கு இவன் குறித்த கொள்கை இதுவாகும்; இனி இவனுக்காகத் தாங்கிய இந்த உடம்பில் ஊனினுல் உள்ள அழகையெல்லாம் உதறிவிட்டு எலும்பு உடம்பேயாகப் பேய் வடிவம் தந்து அங்கு உன்பால்வர அருள வேண்டும்" என்று இறைவரை வேண்டினுர். அங்ஙனமேயாக ஊனையெல்லாம் உதறினுர். எலும்புக்கூடாகிய பேய் வடிவம் பெற்ருர். அற்புதத் திருவந்தாதியும் திருவிரட்டை மணிமாலையும் பாடினுர். அங்கிருந்து வடக்கே திருக்கயிலையை நோக்கி மன வேகத்திற் சென்ருர். கண்டவர்கள் எல்லாம் வியப்புற்றஞ்சிப் "பேய்! பேய்!!"என்று ஓடினுர்கள். அம்மையார் "அண்டர் நாயகனுர் என்னை

அறிவரேல் அறியா மாக்களுக்கு நான் எவ்வுருவாயிருந்தா லென்னை ?'' என்று சொல்லித் திருக்கயிலை மலையை அடைந்தனர். அங்குக் காலினுல் நடவாமற் தலையினுல் நடந்தேறினுர். உமையம்மையாரின் திருநோக்கம் அவர் மேற்பட்டது. அவர் இறைவரை நோக்கித் " தலையினுல் நடந்து இங்கு ஏறிவரும் ஓர் எலும்புடலின் அன்பு என்னே ?'' என்ன இறைவர்," வருகின்ற இவள் நம்மைப் பேணும் அம்மைகாண். இந்த வடிவமும் நம்மைவேண்டிப் பெற்றனள்'' என்றருளினுர். இதற்குள் அம்மையாரும் திருமுன்பு வந்து சேர்ந்தனர். இறைவர் அவரை ''அம்மையே!'' என்றழைத்தனர். அவர் ''அப்பா'' என்று பாதங்களில் வீழ்ந்து வணங்கி எழுந்தனர். " உனக்கு என்ன வேண்டும் ?'' என்று இறைவர் கேட்டருளினர். ''இறவாத இன்ப அன்பு வேண்டும் ; மீண்டும் பிற வாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும் மறவாமை வேண்டும் ; நீ திருக்கூத்து ஆடும் போது உன் திருவடியின்கீழ் நான் மகிழ்ந்து பாடி யிருக்க வேண்டும் '' என்று வரம் கேட்டார். இறைவர் அவ்வாறே அருள்கொடுத்து, "திருவாலங்காட்டிற் சென்று நீ நமது நடனம் கண்டு ஆனந்தம் சேர்ந்து எப்போதும் நம்மைப் பாடி இருப்பாயாக '' என்றருளினுர். அம்மையார் அவ் வாறே திருவாலங்காட்டைத் தலையால் நடந்து அடைந்து அங்கே ஐயன் ஆடும் எடுத்த பாதத்தின்கீழ் அமர்ந்திருந் தார். அம்மையார் மூத்த பதிகங்களை அருளிச்செய்தனர். அங்கு அம்மையார் பாடிக்கொண்டு திருவடிக்கீழ் அமர்ந் திருக்கும் திருக்கோலம் இன்றும் காணவுள்ளது.

அம்மையார் சரிதத்திலிருந்து நாம் பல வுண்மைகளை உணர்ந்து உய்யவுள்ளோம்.

பெரிய புராணத்துள் வரும் சேயிழையார் சரிதங்கள் அவ்வந் நாயன்மார்களின்சரிதங்களிடையே விரவிவருவன வன்றித் தனியாக விரிந்தமுழுச் சரிதமாக வுள்ளது இஃது

ஒன்றேயாம். அம்மையார் சமயாசாரியர்கள் காலத்துக்கு முற்பட்டவர் என்று கருதப்படுகின்றது. தனிப் பதிகங்களாற் றோத்திரமாக அருளிய வழக்கு இவர்முதலே தொடங்குகின்றது. இவர் பதிகங்கள் அதனாலே மூத்த பதிகங்கள் என்று வழங்கப்பட்டு வருகின்றன. அம்மையார் தமிழ்க்கவி பாடுவதில்—அதிலும் அருட்கவிகளாகப் பாடுவதில்—வல்லமை யடைந்திருந்தார். சைவத்திறத்தில் பெண்பாலருள் இவர் ஒருவரே கவிவாணர்.

அம்மையாரிடத்துச் சிவனடிக் கன்பின்றிறம், பிறந்த பொழுதே தோன்றி வள்ர்வதாயிற்று. அது முன்னைப் பிறவியின் தொடர்பால் ஆகியது.

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்—நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர்"

என்று அம்மையார் தம் திருவாக்கினாலே அற்புதத் திருவந்தாதியில் அருளியுள்ளார்கள். இறைவரை வேண்டித் தாம்பெற்ற பேய்வடிவத்தை அவ்வாறே தமது திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்திற் பாடியுள்ளார்கள்.

"கொங்கை திரங்கி நரம்பெழுந்து குண்டுகண்
வெண்பற்குழி வயிற்றுப்
பங்கிசிவந் திருபற்க ணீண்டுயர் நீள்கடைக்
காவலோர் பெண்பேய்."

கணவன் இன்னொரு கனிஉளது; அதனையும் இடுக என்று கேட்டபோது அம்மையார் அதனை அடியார்க்குப் படைத்து விட்டேன் என்று சொல்லி யிருக்கலாமே! சொல்லாத தென்னை? எனின், மாங்கனிகளைப் பற்றிக் கணவன் உத்திரவில்லாமலும், கருத்தறியாமலும் விநியோகம் செய்தது கடமைத் தவறு என்றும் கற்பினுக்கு

வழுவென்றும் அம்மையார் கருதியிருக்கக்கூடும். இச் சரித முழுமையும் திருவருள் விளைவினால் நிகழ்ந்ததாகலின் அதில் மேலும் ஆராய்ச்சி செய்ய நாம் தகுதியற்றவர்கள் என்றே கொள்ளவேண்டும். முதலில் ஒரு பழம் அம்மையார் வேண்ட அளித்த இறைவர் அதில் ஏன் அதிக சுவை வைத்து மாங்கனியை அதிமதுரக் கனியாக அளித்தார்? எனின் அடியவர்மூலம் இறைவர் ஒரு மாங்கனி உண்டருளினர். அது இறைவர்மேற் கடனாக நின்றது. வாங்கிய கடனைத் திருப்பித் தரும்போது வட்டியுடன் தரவேண்டியது நெறியன்றோ? அதனால் அது சுவைமிகுந்த தென்பது. பின்னர் தந்தகனி மறைந்து போவானேன்? எனில் அது உண்பதற்காகத் தரப்பட்டதன்று. சாட்சிக்காக மட்டில் தரப்பட்டது. அம்மையார் தம் உரை பொய்யாகாமை காட்டும் பொருட்டுச் சாட்சிக்காகவே வந்ததாதலின் அது அவன் கையிற் போந்தவுடன் மறைந்தது. கணவன் அந்த இரண்டு மாங்கனிகளுள் ஒன்றையும் வைக்காமல் தானே உண்ண எண்ணிக் கேட்டது அவனது வன்கண்மையைக் காட்டுவதன்றோ? எனின், அற்றன்று. அவன் வன்கண்ணனல்லன்; நாச்சுவைக் கடிமைப்பட்ட தீனியாசை யுடையவனுமல்ல. அவன் இல்வாழ்க்கை நல்வாழ்க்கையாகவே அன்புடனும் ஆர்வத்துடனும் நடைபெற்றது. " தகைப்பில் பெருங் காதலினால் தங்குமனை வளம்பெருக்கி " என்கிறார் ஆசிரியர். இரண்டு கனிகளுள் ஒன்று மனைவியாருக்கென்று எண்ணக்கூடியவன்தான். அன்று அவன் நாச்சுவைக்கு அடிமைப்பட்டு மற்றொரு கனியையுங் கேட்டது, திருவருள் வசத்தாலாகியதென்றே கருதத்தக்கது. அம்மையாரை வழிபடும் அடியார் பரம்பரையில் முதல்வனாக வரும் அக்கணவனை நாம் வணங்கி வாழவேண்டியதே முறை.

அம்மையார் திருவருளால் மாங்கனி பெற்றதைச் சாமானிய இந்திரஜால வித்தையோடொப்ப எண்ணி

வைத்து அவ்வாறே இந்நாள் நவீன நாடகத்தில் ஒரு காட்சியும் வகுத்து ஆபாசமும் அபசாரமும் செய்கிறார்கள். திருவருளின் வழிகளை அறியாத பாவம். அது தவறு. திருவருட்சரிதங்களை அவற்றுக்குரிய தகுதியிலே வைத்துப் பாராட்டுதல் வேண்டும்.

அம்மையாருடைய பெருமை மிகப் பெரியதாகும். தாயுமிலி தந்தையிலி யாகிய இறைவராலே "அம்மையே!" என்று அழைக்கப்பெற்ற பெருமை யுடையவர். அவர் பெயரைத் தானும் சொல்ல அஞ்சித் திருத்தொண்டத் தொகையில் "பேயார்" என்று போற்றப்பட்டுள்ளார். பெரிய புராணத்தில் அவர் சரிதத்திற்கு அவர் பெயராற் கூறாது, "காரைக்காலம்மையார் புராணம்" என்றே பெயரிட்டார் ஆசிரியர். அவர் தலையால் நடந்து சென்று அடைந்த தலமாகிய திருவாலங்காட்டைக் காலால் மிதிக்க அஞ்சித் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் நகருக்குப் புறம்பே ஓரிடத்தில் தங்கியருளினார். உலகியலில் கற்புடைய மனைவியர் உடல் வனப்புத்தாங்கி நிற்பதெல்லாம் கணவன் பொருட்டேயாம் என்று கற்பு நிலை யொழுக்கம் காட்டிய பெரியார் அம்மையார். நமது மனம், சொற் செயல்களெல்லாம் இறைவரறியவே என்றும் உலகவர் என்னபடி யறிந்தாலென்ன என்றும் காட்டி யொழுகிய பெரியார். அவரை வழிபட்டுய்வோமாக.

# 19. அப்பூதிநாயனுர் மனைவியார்

சோழவள நாட்டிலே திங்களூரிலே மறையவர் மர பிலே அப்பூதியார் என்றெருரு பெரியவர் இருந்தார். அவர் திருநாவுக்கரசு நாயனுரின் பெருமையினையும், திருத்தொண்டின் உறைப்பையும் கேட்டு அவரிடத்திலே அன்புகொண்டு ஒழுகிவந்தார். தமது பிள்ளைகளுக்கு அவர்பேரை யிட்டார். தாம் செய்யும் தண்ணீர்ப்பந்தர் முதலிய தருமங்களை அவர் பெயராலே செய்துவந்தார். அவரை நேரிற்கண்டாரில்லை. ஒரு நாள் திருநாவுக்கரசர் அவரது தண்ணீர்ப்பந்தரைக் கண்டு அதன் திறத்தை வியந்து அதில் தமது பெயர் எழுதியிருக்கக் கண்டு அவர் திருமனைக்கு எழுந்தருளினுர்.

அவர் அப்பூதியாரை நோக்கி "திருப்பழனத்திலிருந்து வருகின்றேம்; வழிக்கரையில் நீர் வைத்த வளமுடைய தண்ணீர்ப்பந்தரைக் கண்டோம். பிற அறங்களையும் கேட்டறிந்தோம். அதில் உம்முடைய பெயரை எழுதாமல் வேறெருரு பேர்முன் எழுதவேண்டிய காரணமென்னை? கூறும்!" என்று கேட்டனர். அப்பூதியார் மனந்தடுமாறிற்று. "சமணர்களுடன் கூடிய மன்னவனது சூழ்ச்சியைத் திருத்தொண்டினுறைப்பாலே வென்றவர் தம் திருப்பெயரோ வேறு ஒரு பேர்?" என்றுர். "கடலில் கல்லே மிதவையாக ஏறிவந்தவரது பெருமை உலகமெல்லாம் பரவியுள்ளது; நீர் எவ்வூர்? மங்கலமாகிய திருவேடத்துடன் நின்றிவ்வகை மொழிந்தீர்! நீர்தாம் யார்?" என்று கூறினர். அவரது அன்பின் மேன்மையை அறிந்து "சூலையினுல் ஆட்கொள்ள அடைந்துய்ந்த தெருளும் உணர்வில்லாத சிறுமையுடையேன் யான்" என்றுர். அப்பூதியார் மனமகிழ்ந்தார்; ஆடினுர்; சூழ ஓடினுர்; மனையினுள் புகுந்து மனைவி மக்களையும் சுற்றத்தாரையும் அழைத்து வந்தார். அரசுகளை வணங்கிப் பூசனைகள்

செய்தார். பின் மகிழ்ந்து அவருக்கு விருந்து செய்ய முயன்றனர். அமுதுகள் எல்லாம் சித்தமாயின. வாழைக் குருத்தை அரிந்து கொண்டுவரத் தமது மூத்த மகனை ஏவினர். அவனும் இந்தப்பணி தனக்கு வாய்த்ததுபற்றி மகிழ்ந்து சென்று தோட்டத்தினுள் புகுந்து வாழைக் குருத்தை அரிந்தான். அப்போது ஒரு பெரிய நாகப் பாம்பு அவனைத் தீண்டியது. பாம்பை உதறி வீழ்த்திவிட்டுத் திருமனைக்கு ஓடிவந்து குருத்தைத் தாயார்கையில் நீட்டி வீழ்ந்தான். பெரியவர் அமுதுசெய்யத் தடையாயிருக்கலாகாதென்று, இச் செய்தியை ஒருவரிடமும் அவன் சொல்லவில்லை. அவன் உடம்பிலுள்ள வடுவினாலும் மேனி கருகிய விதத்தாலும் பிற அடையாளங்களாலும் அவனைப் பாம்பு தீண்டியது என்று அறிந்தனர் பெற்றோர்கள். பெரியோர் திருவமுது செய்யத் தடையாயிருக்குமே என்று கருதி அவர்கள் அவன் உடம்பை ஒரு பாயில் மூடிமறைத்து வைத்துவிட்டுத் திருவமுது செய்விக்கும் முயற்சியில் ஈடுபட்டார்கள். திருநாவுக்கரசர் திருவமுது செய்ய உட்கார்ந்து அப்பூதியாருக்கும் மனைவியாருக்கும் திருநீறு ஈந்தனர். "திருநீறு அளிக்க மூத்தபிள்ளை எங்கே?" என்று கேட்டனர். அவர்கள் உண்மையை விரித்துக் கூறாமலும் பொய்சொல்லாமலும் "அவன் இப்போது உதவான்" என்றார்கள். திருநாவுக்கரசர் திருவுள்ளத்தில் திருவருளால் ஒரு தடுமாற்றம் வந்தது. "அவன் என்ன செய்தான்; இதற்கு ஒன்று உண்டு; மெய்விரித்துரையுங்கள்" என்று கேட்டனர். உள்ளதை உள்ளபடியே சொன்னார்கள். அவர் வியந்து "உலகில் யாவரிப்படிச் செய்பவர்கள்?" என்று பாராட்டி அந்த உடலைத் திருக்கோயிலின் முன் கொண்டுவரும்படி செய்தார். அதைநோக்கி "ஒன்று கொலாம்" என்ற திருப்பதிகம் பாடி யருளினர். விடம் நீங்கிப் பிள்ளை எழுந்தான். அவனுக்குத் திருநாவுக்கரசர் திருநீறு அளித்தார். பின்

மனையிற் போய் திருநாவுக்கரசரும் அப்பூதியாரும் மைந்தர்களும் ஒருங்கே யிருந்து அமுது செய்தார்கள். மனைவியார் மகிழ்ச்சியுடனே திருவமுது பரிமாறினர். இவ்வாறு திருநாவுக்கரசர் திருவருளைப் பெற்றவர்களாய் அவ்வாற்றால் வீடு பெற்றனர்.

இச் சரிதத்தில் விளக்கமாய் அறியப்படுவது அப்பூதியார் அந்தணர். திருநாவுக்கரசர் வேளாளர். அந்தணராயிருந்தும் அப்பூதியார் அரசுகளைக் குருவாகக் கொண்டு தொண்டுபூண்டொழுகி வந்தார். அவரைக் காணாதிருந்தும் அவர் பெருமையைக் கேட்ட அளவிலே அவர்பால் அன்பு செலுத்தினர். தமது மரபின் மேம்பாட்டை அடியோடு மறந்துவிட்டொழித்தார். அவரோடு உடனுண்டார். இவையெல்லாம் அன்பின் மேம்பாட்டாலேதான் ஆவன. மனைவியார் அவருடன் ஒற்றுமையுடையராய் ஒத்துழைத்தார். அவரும் அப்பூதியாரும் மைந்தரும் ஒருங்கிருந்து அமுது உண்டார்கள். மனைவியார் மகிழ்ந்து அமுது படைத்தனர். மனைவியாரது ஒத்துழைப்பு இல்லாதிருந்தால் இவை இயலா. அது கற்புநிலையுமாம். இந்த உதாரணத்தை ஆதரவாகக் கொண்டு இந்நாளில் சாதிவேற்றுமை ஒழிப்புச் சீர்திருத்தக்காரர்கள் எல்லாரும் ஒருங்கே இருந்து உண்ணலாம் என்று முடிவுகட்டுகிறார்கள். அது சரியன்று. ஒரே வகையான பழக்கவழக்கங்களும் சமூகநிலை வழக்கும் இருந்தாலன்றி உடனுண்ணல் ஒவ்வாது. அவ்வாறு செய்தல் கேடுதரும். பொதுவாக, உடனுண்ணல் கூடுமானவரை விலக்கத்தக்க தொன்று. மன ஒற்றுமையில்லாத பிறர் காண உண்ணுதல் திருஷ்டி வேறுபாட்டால் சுகக்கேடு செய்யக்கூடியது. இது அனுபவத்திற் கண்ட உண்மை இங்கு உடனுண்டது அன்பின் றிறத்தாலாகியது அதுவேறு.

மகன் அரவால் கேடுபட்டபோதிலும் அதைப் பொருட்படுத்தாமல் அதனை மறைத்துத் தாயார் அடியார்க்

கழுதூட்டுதலில் முற்பட்டது, அரும்பெருஞ் செய்தற்கரிய செயல். சாதாரணமாய்ப் பெண்கள் இந்நிலையில் அழுது புலம்புவர். வந்த அடியாரையும் நிந்திப்பர். இங்கு மனைவியார் செயல் அவர்பால் ஊன்றியிருந்த சிவனடிமைத் திறத்தின் வலிமையை உணர்த்துவது.

மகனை விடந்தீர்த்த பதிகத்தைப்பற்றிச் சிலவார்த்தை இங்குச் சொல்வது அவசியம். அத்திருப்பதிகம் முழுதும் மந்திர சொரூபமாயுள்ளது. முதற்பாட்டு "ஒன்றுகொலாம்" என்று தொடங்குகிறது. இரண்டாவது பாட்டு "இரண்டு கொலாம்" என்றும் மூன்ருவது பாட்டு "மூன்றுகொலாம்" என்றும் இவ்வாறே வந்து பத்தாவது திருப்பாட்டுப் "பத்துக் கொலாமவர் பாம்பின் கண் பாம்பின்பல்" என்று நிறைவாகிறது. இதனை விடந்தீர்க்க என்று சங்கற்பித்து ஆணையிட்டபடியால் இப்போது 1300 ஆண்டுகளுக்கு மேலாகியும் அந்தச் சக்தி அப்பதிகத்தில் நின்று நிலவி வருகின்றது. இதனை இப்போதும் கண்கூடாகக் காணலாம். திருச்சிராப்பள்ளி சில்லாவில் லால்குடித் திருமங்கலம் என்ற பதியில் (இது ஆனாய நாயனுர்தலம்) என் உறவினர் கிராம முன்சீபாக இருந்தார். அப்பக்கத்தில் அரவு கடியுண்டவர்களை அவரிடம் வசமிழந்த நிலையில் தூக்கிக்கொண்டு வருவார்கள். அவர் இந்தப் பதிகத்தைப் படிக்கச்செய்து திருநீறு தடவியே விடந்தீர்த்து வந்தது எனக்கு நேரில்தெரியும். மற்றவர்களும் இதனைக் கையாண்டு உண்மை காணலாம். உலகுக் குபகாரமாயிருக்தும். வேறு ஒரு மருந்தும் மந்திரமும் வேண்டியதில்லை.

## 20. திருநீலநக்க நாயனர் மனைவியார்

சோழவள நாட்டிலே மறையவர்கள் வாழும் சாத்த மங்கை என்னும் செழுநகரிலே மறையவர் மரபிலே நீல நக்கர் என்னும் சீலத்தாற் சிறந்த மறைமுனிவர் இருந் தார். சிவனையும் சிவனடியார்களையும் பணிவதும் பாத வர்ச்சனை புரிவதும் என்னு மிரண்டுமே வேதங்களின் உள்ளுறையாவன எனத் தெளிந்து ஆசையுடன் அவை யிரண்டுமே செய்யும் கருத்துடையரா யிருந்தார். சிவாகம விதிப்படி சிவபூசை செய்வார். அடியார்களை அமுதுசெய் விப்பார். அவர் ஒரு திருவாதிரை நாளில் அவ்வூரிலுள்ள " அயவந்தி " என்னும் திருக்கோயிலுள் எழுந்தருளிய இறைவரைப் பூசிக்க எண்ணினர். பூசைக்கு வேண்டிய சாதனங்களை எடுத்துக்கொண்டு மனைவியாரையும் உடன் கொண்டு திருக்கோயிலுக்குவந்தார். பூசைச் சாதனங்களை வேண்டியவற்றை வேண்டியபடி மனைவியார் எடுத்தேந்த முறைமையாற் பூசனைமுடித்தார். இறைவர் முன்பிருந்து ஆராத காதலினல் இறைவரை நோக்கியபடியே சீபஞ்சாக் கரத்தை எண்ணத்திற்கொண்டு செபிப்பாராயினர். அப் பொழுது சுதைச் சிலம்பியொன்று தன்னிலையினின்று வழுவி இறைவர் திருமேனிமேல் விழுந்தது. விழுந்த போது அயலில் நின்ற மனைவியார் விரைந்து அச்ச முடனே இளங்குழவிமேல் சிலம்பிவீழ அதை நீக்க ஊதித் துமிப்பவர்போல அன்பினல் பதைத்து ஊதி முன் துமிந் தனர். திருநீலநக்கர் அதுகண்டு கண்புதைத்து "என்ன காரியஞ் செய்துவிட்டாய் ?" என்று வினவினர். " சுதைச் சிலம்பி இறைவர் திருமேனிமேல் விழ அதை ஊதித் துமிந் தனன் " என்றார் மனைவியார். நாயனர் கோபித்துப் பூசையில் இந்த அனுசிதம் நேர்ந்ததே என்று வருந்தி, " சிலம்பி விழுந்தால் அதை வேறுவிதமாக அப்புறப்படுத்

தாமல் வாய்நீர்பட ஊதித் துமிந்தாய்! உன்னை யான் இங்கே துறந்தேன்" என்றனர். பூசைமுடித்து மனைக்குப் போயினர். அஞ்சும் உள்ளத்தினோடு அவருடன் செல்லமாட்டாமல் மனைவியார் திருக்கோயிலிலேயே தங்கினர். இரவில் நாயனார் திருமனையில் பள்ளிகொண்டு துயிலும்போது இறைவர் அவரது கனவிற்றோன்றித் தமது திருமேனியைக் காட்டி, "இதோ பார்! ஊதித்துமிந்த பாகம் ஒழிய மற்ற பக்கத்தில் சிலம்பியின் கொப்புள் கண்டிருக்கிறது" என்று காட்டியருளி மறைந்தனர். திருநீலநக்கர் அஞ்சியெழுந்து இறைவரைப் போற்றினர்; விடிந்ததும் எழுந்து திருக்கோயிலுக்குச் சென்று வழிபட்டு மனைவியாரையும் உடன்கொண்டு மனைக்கு வந்தனர்.

சிலநாட் கழித்துத் திருஞானசம்பந்த நாயனார் சாத்தமங்கைக்குப் பரிசனங்களுடனும், திருநீலகண்ட யாழ்ப்பாணர், அவர் தேவியார் மதங்கசூளாமணியார் இவர்களுடனும் எழுந்தருளினர். அவர்களையெல்லாம் தமது திருமனையில் வைத்து உபசரித்துத் திருவமுதூட்டி மகிழ்ந்தார். திருநீலகண்ட யாழ்பாணரும் மதங்கசூளாமணியாரும் அன்றிரவு பள்ளிகொள்வதற்குத் திருமனையின் நடுமனை வேதியின் பக்கத்தில் இடங்கொடுத்தனர். வேதியில் தீவலஞ்சுழித் தெழுந்தது.

இறைவர் திருமேனிமேல் சுதைச் சிலம்பி விழக்கண்டு இளங்குழவிமேல் சிலம்பி விழுந்தாற்போலப் பதைத்து மனைவியார் ஊதித்துமிந்தது அவரது அன்பின் பெருக்கினாலாகியது. சிலம்பி மேனியில் விழுந்தால் அதன் நீர் விடமாகிக் கொப்புளை உண்டாக்கும்; அதை ஊதித்துமிந்தால் அந்த விடம் மாறும்; இது உலகியல்பு. இளங் குழவிகள்மேல் சிலம்பி விழுந்தால் இவ்வாறு உடனே பதைத்து ஊதித் துமிதல் தாய்மார்களின் வழக்கு. இங்கு அந்த அன்பின் திறத்துள் நின்று இறைவர் அனுபவித்தருளினர். ஆனால் அதனை நாயனார் வாய்நீர் படுதலால் அனு

சிதம் என்று கருதி முனிந்தனர். இறைவர் அவரைத் தெருட்டிய அருட்டிறங் கண்டு போற்றி யுய்வோமாக.

கண்ணப்பர் திருவாய்நீர் உமிழ்ந்ததனைக் கங்கை அபிடேகமாக அன்பின் காரணத்தால் இறைவர் ஏற்றரு ளிய கருணைத்திறம் இங்குவைத்துக் கருதத் தக்கது.

திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கும் மதங்கசூளாமணி யாருக்கும் நடுமனை வேதியின் பக்கத்தில் பள்ளிகொள்ள இடங்கொடுத்து அமைத்ததுவும் அம்மையாரது அன்பின் மேன்மையைக் காட்டுவதாகும்.



## 21. நமிநந்தியடிகணாயனார் மனைவியார்

சோழ நாட்டிலே திருவாரூர்க்கு அணிமையில் தென்புறத்தில் ஏறக்குறைய 6 நாழிகை யளவில் உள்ளது இப்போது "திருமப்பற்று" என்று வழங்கும் "திருஏமப் பேறூர்" என்னும் செழும்பதி. அதில் மறையவர் மரபிலே சிவபத்தியிற் சிறந்த சீலமுடைய நமிநந்தியார் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர் திருக்கோயிலில் விளக்கெரிக்க விரும்பித் திருவாரூரில் ஒரு மனையில் விளக்குக்கு நெய் வேண்டிக் கேட்டார். அது அமணர் மனையாயிருந்தது. அவ்வமணன் இழித்துரைத்தனன். அதனைப் பொருது நமிநந்தியார் இறைவர் முன்பு முறை யிட்டனர். குளத்து நீர் முகந்து விளக்கெரிக்கும்படி அருளாணை பிறந்தது. அவ்வாறே பக்கத்திருந்த குளத்துநீரை முகந்துகொண்டு வந்து விளக்கெரித்தார். இதனைத் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தில் "நம்பி நந்தி நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே" என்று போற்றியுள்ளார்.

ஒரு நாள் தியாகேசர் திருமணலிக்கு எழுச்சியாக எழுந்தருளினர். அங்கு நமிநந்தியாரும் சென்று சேவித்தனர். எங்கும் எல்லாக்குலத்திலுள்ளோரும் போத உடன் சேவித்தனர். பொழுது வைகச் சேவித்துத் திருமனைக்கு வந்து மனையினுட் புகுதாதே புறங்கடையிற் றுயின்றனர். இல்லத்து முழுதும் தருமம் புரி மனைவியார் வந்து "உட்புகுந்து இறைவர் பூசனையினை முடித்து அங்கிவேட்டு அமுதுசெய்து பள்ளி கொள்வீர்" என்று சொன்னர். அதற்கு நமிநந்தியார், "திருமணலிக்கு எழுச்சி சேவிக்கச் சென்றிருந்தேன். எங்கெங்கிருந்தும் எல்லாரும் வந்தனர். உடனிருந்து சேவித்ததனுல் இழிவு தொடக்கிற்று (தீட்டு வந்தது) ஆதலாலே குளித்துத் தூய்மை செய்தே இறைவர் பூசனை தொடங்கவேண்டும். அதற்கு வேண்டும் குளிர்ந்த நீர் முதலியவற்றைக் கொண்டுவா" என்றனர். மனைவியார் அவை கொணர்தற்கு மனைக்குட் சென்றனர். அவ்விடையில் உடலின் அயர்விஞலோ? திருவருளினுலோ? அறியோம், விரைவில் உறக்கம்வரவே அன்பர் துயில் கொண்டனர். அவரதுகனவிலே தியாகேசர் அவரது பூசனைக்கு வருவார்போல வந்தருளித் "திருவாரூரிற் பிறந்து வாழ்பவர்க ளெல்லாரும் நம்முடைய கணங்களாவர். இத்தன்மையை நீ காண்பாய்" என்றருளி மறைந்தருளினர். அன்பர் விழித்து அஞ்சி எழுந்து இரவு பூசனை செய்யாது தாழ்த்தேன் என்றுகொண்டு மனைவியார் கூறியபடியே எழுந்த படியே உட்சென்று பூசைசெய்து துயின்றனர். விடியலில் அவ்வாரூரில் வாழ்வார்கள் எல்லாரும் சிவகணங்களாக இருக்கக் கண்டு இறைஞ்சி வாழ்ந்தனர்.

இறைவர் திருவெழுச்சியிலே உடன் சேவிக்கும் அடியார்களுள் மரபின் ஏற்றத் தாழ்ச்சிகள் பாராட்டுதல் தக்கதன்று. வைணவர்களுக்குள்ளும் "கோஷ்டி" என்ற பெயரால் இவ்வழக்கத்தைக் கையாண்டு வருகிருர்கள்.

# 22. பகவதியார்

சோழநாட்டிலே வளம் பொருந்திய சீகாழிப் பதியிலே அந்தணர் மரபிலே கவுணியர் கோத்திரத்திலே சிவபாத விருதயர் என்ற பெரியார் இருந்தார். அவர் சைவ சீல ஒழுக்கத்தில் மேம்பட்டு இந்த உலகம் வாழும் பொருட்டுத் தவம் செய்யும் இயல்புடையராயிருந்தார். அவருடைய திருமனைவியார் மறையவர் மரபில் வரும் தன்மையுடையார். எவ்வுலகிலும் பெறுதற்கரிய பெருமையையுடையார். அவர் பெயர் பகவதியார் என்பது. மரபிரண்டும் சைவநெறி வழியாகவந்த மேன்மையுடையவர். சிவபெருமான் திருவடிகளை யல்லாது வேறு அறியாது திருநீற்றன்பு பாலிக்கும் தன்மையராய் மனைவாழ்க்கையிற் சிறந்துவிளங்கினர். இவ் விருவரும் தமது குடி தழைக்கும் பொருட்டுப் பிள்ளைப்பேற்றை விரும்பினர்கள். அந்நாளிற் சமண சாக்கியர்களுடைய பொய்கள் உலகிற் பரவியிருந்தன. மறைவழக்கம் குறைந்தது. அடியார்களிடம் திருநீற்றின் விளக்கம் அருகிப் போற்றப் பெறுமல் மங்கியது. அதுகண்டு சிவபாதவிருதயர் மனம் வருந்தினர். தமக்கு ஒருமகன் வேண்டும். அந்த மகன் பரசமயங்களை நிராகரித்துச் சைவத்தை ஓங்கச் செய்யவேண்டும் என்று கருதினர். தோணியப்பர் பெரியநாயகி இவர்களை வழிபட்டு வந்தனர். அதன் பயனுக உலகம் வாழவும், மறைகள் ஓங்கவும் சைவம் தழைக்கவும் பகவதியார் மணிவயிற்றிற் கருப்பம் உளதாயிற்று. பத்து மாதங்களிலும் வேத விதிப்படி செய்யவேண்டிய சடங்குகளை யெல்லாம் முறையாய்ச் செய்தனர். சூரியன் முதலிய எல்லாக் கோள்களும் உச்சங்களிலும் வலிய தானங்களிலும் நிற்கவும் சைவமும் வைதிகமும் தழைத்தோங்கவும் திருநீற்றுநெறி எங்கும் மேலோங்கவும் தமிழ்வளரவும் பரசமயங்கள் பாழ்படவும் சித்திரை மாதம் நல்ல ஓரையில் திருவாதிரை

நாளில் பிள்ளையார் திருவவதாரம் செய்தார். பிள்ளையார் அவதரித்த மகிழ்ச்சி திருமனையிலும் நகர முழுவதிலும் கொண்டாடப் பெற்றது. வைதிக நூல் முறைப்படி 10 நாட்களிலும் உரிய சடங்குகள் செய்தனர். எல்லா உலகுக்கும் இறைவியாகிய அம்மையாரது திருமுலைப்பாலுண்ண இருக்கும் பிள்ளையாரை மனைவியார் இறைவரது திருவடி போற்றும் அன்பே போற்றித் திருமுலை சுரந்தமுது செய்வித்தார். திருநீற்றுக் காப்பு அணிந்தார். அவர் செங்கீரை முதலாகிய பருவங்களைக் கடந்தார். பகவதியார் அவரைத் தாலாட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்த்தார். மூன்றுவது வயதிலே பெரியநாயகியம்மையார் திருக்கோயிலில் பிரம தீர்த்தக் கரையிலே பிள்ளையாருக்குத் தமது திருமுலைப் பாலைச் சிவஞானத்துடன் குழைத்து ஊட்டியருளினுர். அவர் திருஞானசம்பந்தராய் விளங்கினுர். அவர் 16 வயது வரை வளர்ந்து பலதலங்களுக்கும் சென்று வழிபட்டுப் பல அற்புதங்களைச் செய்தருளினர். அவருக்குப் பகவதியார் திருநீற்றுக் காப்பேந்தி ஆசீர்வதித்தனர். 16 வயதிலே திருநல்லூர்ப் பெருமணக் கோயிலிலே அவரது திருமணத்திலே வந்தெழுந்த சிவச்சோதியிலே அனைவருடன் சிவத்துடன் கலந்தனர் பகவதியார்.

இங்ஙனம் மூவுலகிலும் பெறுதற்கரிய பெரும்பேறு பெற்றனர். உலகுய்யவந்த திருஞானசம்பந்த மூர்த்தி நாயனுரை மகவாகப் பெற்று வளர்த்தப்பெற்றனர். அதன் காரணமாக இறைவன் திருவடியடையப் பெற்றனர்.

> பெருமலை பயந்தகொடி பேணுமுலை யின்பால்
> அருமறை குழைததமுது செய்தருளு வாரைத்
> தருமறைவி யார்பரமர் தாள்பரவு மன்பே
> திருமுலை சுரந்தமுது செய்தருளு வித்தார்.
>
> (திருஞான - புரா - 42)

ஆறுலவு செய்யசடை ஐயரரு ளாலே
பேறுலகி னுக்கென வரும்பெரிய வர்க்கு
வேறுபல காப்புமிகை யென்றவை விரும்பார்
நீறுதிரு நெற்றியில் நிறுத்திநிறை வித்தார்.
(திருஞான - புரா - 43)

தாயர்திரு மடித்தலத்துந் தயங்குமணித் தவிசினிலும்
தூயசுடர்த் தொட்டிலினுந் தூங்குமலர்ச் சயனத்துஞ்
சேயபொருள் திருமறையுந் தீந்தமிழுஞ் சிறக்கவரு
நாயகனைத் தாலாட்டு நலம்பலபா ராட்டினர். (ஷை - 44)

சூழவரும் பெருஞ்சுற்றத் தோகையருந் தாதியரும்
காழியர்தஞ் சீராட்டே! கவுணியர்கற் பகமே!"யென்
றேழிசையும் பலகலையு மெவ்வுலகுந் தனித்தனியே
வாழவரு மவர்தம்மை "வருக!வரு" கெனவழைப்ப. (ஷை - 48)

தாதியர்தங் கைப்பற்றித் தளர்நடையி னசைவொழிந்து
சோதியணி மணிச்சதங்கை தொடுத்தவடம் புடைசூழ்ந்த
பாதமலர் நிலம்பொருந்தப் பருவமுறை யாண்டொன்றின்
மீதணைய நடந்தருளி விளையாடத் தொடங்கினர். (ஷை - 51)

## 23. மதங்க சூளாமணியார்

(திருநீலகண்டயாழ்ப்பாணரின் மனைவியார்)

திருவெருக்கத்தம்புலியூரிலே பாணர் மரபிலே அவதரித்தவர் திருநீலகண்ட யாழ்ப்பாணர். அவர் யாழ் வாசிப்பதிற் சிறந்து விளங்கியதினாலே யாழ்ப்பாணர் என்று வழங்கப் பெற்றார். அவருக்குத் திருநீலகண்டர் என்று பெயர். அப்பெயர் கொண்டு தில்லையில் வேட்கோவர் திருநீலகண்டர் ஒருவர் உண்டு. அவரினின்றும் வேறு பிரித்துணரும் பொருட்டு இவர் மரபும் தொழிலும் சேர்த்து யாழ்ப்பாணர் என்று வழங்கப்பெற்றார். இவர் யாழிசையில் வல்லவர். இவரது மனைவியார் மதங்கசூளாமணியார் என்பவர். அவரும் இசையில் வல்லவர். யாழ்ப்பாணர் கருவிப்பாடலிலும் அவர்மனைவியார் கண்டப் பாடலிலும் வல்லவர்கள். இவ்விருவரும் சேர்ந்தே மதுரை திருவாரூர் முதலிய தலங்களிற் சென்று வழிபட்டு வந்தனர். மதுரையிலே இறைவர் அடியார்களுக்கு அறிவித்துப் பாணரைத் தமது திருமுன்பில் இருந்து பாடும்படி கட்டளையிட்டுப் பலகையிட்டுப் பாடல் கேட்டருளினர். திருவாரூரிலே வடக்கில் வேறு வாயில் வகுத்து அதன் வழியே உள்ளேவரச் செய்து பாடல் கேட்டருளினர். சீகாழியில் திருஞானசம்பந்த நாயனார்பால் இருவரும் சென்றனர். அவர் மகிழ்ந்து உடன்கூட்டி அழைத்துத் திருக்கோயிலுக்குப் புறமுன்றிலில் இருந்து பாடும்படி பணித்து இருவருடைய பாடலையும் இறைவரைக் கேட்பித்தனர். திருஞானசம்பந்த நாயனாரது திருக்கூட்டத்திலே சேர்ந்து அவருடனே பல பதிகளிலும் இருவரும் உடன்சென்று அவர் பாடும் திருப்பதிகங்களை யாழிலிட்டுப் பாடி வந்தனர். திருநீலநக்க நாயனார் திருமனையில் 'இரவு நடுமனை வேதியின் பாங்கர்ப் பள்ளிகொள்ள

இடங்கொடுக்கப் பெற்றுத் தங்கினர். மதங்கசூளா மணியாரது மிடற்றெலியும் பாணனாரது இசைக் கருவி யொலியும் ஒன்ருகி விரவி இசை செய்யும். இதனைக் கந்தரு வர்களும் அமர்ந்து கேட்டு வியந்து அனுபவிப்பார்கள். திருஞானசம்பந்த நாயனர் இவ்விருவரும் தம்முடனே தங்குதற்கு வேருக உறையுள் அமைத்துச் சிறப்பித்தருளி னர். அவ்வாறே சென்ற சென்ற பதிகளிலும் அமைத்தருளி னர். திருஞானசம்பந்த நாயனர் தமது யாத்திரையில் பாணரது பதியாகிய திருவெருக்கத்தம்புலியூருக்கு எழுந் தருளப் பாணனர், “ இப்பதி அடியனேன் பதி ” என்று காட்டினர். “ஐயரே நீர்வந்தவதரிக்க இப்பதி அளவில் லாத மாதவம் முன்பு செய்திருந்தது” என்று பாராட்டி மகிழ்ந்தனர். இறுதியில் அவரது திருமணத்தில் உடன் சேவித்துப் பாணனருடனே மனைவியாரும் சிவபதமடைந் தனர். இவர்கள் பாடல்கள் வெறும் செவியின்பந்தரும் வெற்றிசை யோசையாயொழியாது, இறைவன் புகழ்கள் பரக்கும் ஆன்ம சக்திவாய்ந்த பாடல்களாயிருக்கும்.

# 24. கொல்லிமழவன் மகள்

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர் மழநாட்டில் உள்ள திருப்பாச்சிலாச்சிராமம் பணிய எழுந்தருளிவருகின்ருர். அந்நாளில் அவ்வூரில் தலைவனுகக் கொல்லிமழவன் என்ற ஒருவனிருந்தான். அவன் மகளாகிய கன்னிகையைக் கொடிய முயலகனேய் பிடித்து வருத்திற்று. **முயலகன்** என்பது ஒரு கொடிய நோய். அதனுல் பிடிக்கப்பட்டவர்கள் திடீரென்று உணர்விழந்து வீழ்ந்திடுவர். கைகால் வலிப்பும் வரும். அந்நிலையிலே பிணம்போலக் கிடப்பர். இந்நோயினை நீக்குதற்குக் கொல்லிமழவன் பெருமுயற்சிகளெல்லாம் செய்தான். நோய் நீங்கவில்லை. எந்தவகையாலும் நோய்நீங்காதது கண்டு வருந்தினன். அவன் சிவனடி மறவாத சிந்தையுடையவன். சிவனடிக் கடிமைப் பண்பில் வருங்குலத்தில் வழி வழியாக வந்தவன். ஆதலினுல் வேறு புகலிடமில்லாமையாலே கன்னிகையைக்கொண்டுவந்து திருக்கோயிலில் இறைவர் திருமுன்பு இட்டு வைத்தான். அக்கன்னி அவ்வாறே கிடந்தனள். அந்நாளில் திருஞானசம்பந்த நாயனர் அப்பதிக்கு எழுந்தருளினர். அதுகேட்ட கொல்லிமழவன் மகிழ்ச்சிபூத்தனன். கன்னிகையை விட்டு ஓடிச் சென்ருன். நகரலங்கரிக்கச் செய்தான். வாழை, கமுகு, தோரணம் முதலியவற்றைக் கட்டினன். பூரணகும்பங்கள் வைக்கச் செய்தான். எதிர்கொண்டு சென்று நாயனர் வரும்போது சிவிகையின்முன் வீழ்ந்தான். அவர் “ எழுக ” என்று திருவாக்களிக்க எழுந்து நின்று அவருடன் திருக்கோயிலுக்கு வந்தான். அவர் சிவிகையினின்றும் இறங்கிக் கோயிலுக்குப் போந்தருளினர். அங்குத் திருமுன்பு நிலத்தில் வீழ்ந்துகிடந்த கன்னிகையைக் கண்டு “ இது என்ன ?” என்று கேட்டருளக்

கொல்லி மழவன் நிகழ்ந்ததை எல்லாம் சொல்லினன். கருணை மேலீட்டினால் அங்கு நின்றபடியே இறைவரை நோக்கித் "துணிவளர் திங்கள்" என்று தொடங்கி, "மங்கையைவாட மயல் செய்வதோ இவர் மாண்பு" என்று பதிகம் பாடியருளினார். பதிகம் முடிந்து திருக்கடைக் காப்புச் சாத்தி நின்ற அளவில் கன்னிகை உணர்வு பெற்று எழுந்து தந்தையிடம்போய் நின்றனள். தந்தையும் மகளுமாகத திருஞானசம்பந்த நாயனார் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி அருள் பெற்றனர்.

பதிகம் பாடிய அளவில் பிணி நீங்கியது. இப் பதிகம் பயில்வோருக்கு இப்பயனை இன்றும் கொடுத்து வருகிறது கண்கூடு. இப்பதிகம் பாடியதனால் அப்பதியில் நடராசர் திருவடிக்கீழ் இருந்த **முயலகனும்** அகன்றுவிட் டான் என்பர். அங்கு நடராஜர் திருவடிக்கீழ் இப்போது முயலகனில்லாமலே இருக்கிறது காணலாம்.

கொல்லிமழவன் மகள் திருஞானசம்பந்த நாயனார் திருவருள் பெற்றுய்ந்தவகையால் மிகத் தவஞ்செய்த பேறு பெற்றனள். அவளால் பின்னரும் உலகம் உய்ந்து வருகின்றது.

**மழவர்** என்பது மழ நாட்டிலரசு செய்த ஒரு குறுநில மன்னர் மரபு.

## 25. திருமருகல் - வணிகப்பெண்

திருஞானசம்பந்த நாயனர் திருமருகல்பதியிலே வழிபட்டுத் தங்கி எழுந்தருளியிருந்தனர். அந்நாளில் ஒரு வணிகன் வழிப்போக்கனுக ஒரு கன்னிகையையும் உடன்கொண்டு அவ்வழியே வந்தவன் பொழுது போயினமையால் திருக்கோயிலின் பக்கத்தில் ஒரு மடத்தில் இரவு தங்கினன். அன்றிரவு அவனை ஒரு பாம்பு தீண்டி விட்டது. விடந்தலைக்கேறியது. உயிர் போகும் நிலை வந்தது. மறு மாற்றம் கொடுப்பாரில்லை. கன்னிகை புலம்பினள். அரவந் தீண்டவும் கற்புநெறியால்தான் தீண்டாளாகிப் பக்கத்தில் வீழ்ந்தே அரற்றினள். அது கேட்ட அயலவர்கள், இடி—கருடபாவனை—வல்லவர்கள், வந்து தாம் அறிந்த எல்லாப் பாவனை மந்திரங்களாலும் தீர்க்க முயன்றூர்கள். விடம் இறங்கவில்லை. விடியல்நேரமாயிற்று. கன்னிகை மிக்க சோகத்துடன் வணிகனை நோக்கிப் புலம்புவாளாயினள். "அன்னையையும் அத்தனையும் விட்டு நின்னைப் புகலாகக்கொண்டு உன்னுடன் போந்தேன்; அரவினல் கடியுண்டு என்னை உயிர்விட்டு நீங்கினய்; நான் என்ன செய்வேன். இந்தத் துன்பத்தைப் போக்குகின்றவர்கள் யாருமில்லை; வணிகர் குல மணியே! யானும் வாழேன்" என்றென்று சொல்லி அரற்றினள். அவளுக்கு ஒருயோசனை தோன்றிற்று. அந்த மதியினலே வேறு ஒரு செயலுமில்லாதவளாகி இறைவர் திருக்கோயில் வாயிலைத் திசைநோக்கித் கைதொழுது இவ்வாறு வேறு செயலொன்றில்லாதவளாய் அழுவாளாயினள்: "கடலில் வந்தெழுந்த ஆலால விடத்தை அடியார்களாய் வந்தடைந்த தேவர்களின் கூட்டமெல்லாம் உய்யும்படி அமுதுசெய்த அமுதமே! அயனும் மாலும் காணமாட்டாத நீல விட அரவுகளை அணிந்த நிமலனே! வெந்து பொடியான மன்மத

னுடைய உயிரை அவன் மனைவி இரதி வேண்ட மீட்டுக் கொடுத்தருளிய புண்ணியனே! என்னைக் காப்பாயாக; உம்மையே தஞ்சமென்று வந்தடைந்த மார்க்கண்டனென்னும் சிறுவனுக்காக அவன் உயிரைக்கொண்டுபோகவந்த இயமனை உதைத்தருளி அவனைக் காத்த திருவடிகளை உடையவரே! இந்த விடத்தின் வேகம் தணியும்படிக்கும், நான் இடுக்கண்ணாகிய குழி நின்று கரையேறும்படிக்கும் மதிசூடிய சடையை யுடையவரே! அருள்வீராக" என்று இவ்வாறு சிவபெருமானையே சிந்தித்து ஏங்குகின்ற அவளுடைய புலம்பலோசையானது அப்போது திருப் பள்ளி எழுச்சி சேவிக்க அவ்வழியேவந்த திருஞான சம்பந்தப் பெருமானுடைய மெய்த் தன்மை விளங்கும் திருச்செவிகளிற் புக்கது. அவர் கருணைவைத்து உடன் வந்த மாதவர்களோடும் அயர்கின்ற அவளிருக்குமிடத் துக்கு எழுந்தருளி வந்தருளினர். அவளை நோக்கிப் "பயப்படாதே! உன்னுடைய துன்பத்தையும் நீ வந்த தன்மைகளையும் சொல்வாயாக!" என்றருளினர். அவள் கைகளைத் தலையின்மேல் குவித்துக்கொண்டு அவர் திருவடிகளில் வீழ்ந்து எழுந்துநின்று சொல்வாளாயி னள்: "வைப்பூரிலுள்ள தாமன் என்பவன் எனது தந்தை இவன் அவனுக்கு மருகன். அவனுக்கு என்னை உள்ளிட்டு ஏழு பெண்கள். அவர்களுள் மூத்தவளை இவனுக்கு என்றுரைத்திருந்து பின்பு பெரும் பொருள் பெற்று வேறு ஒருவனுக்குக் கொடுத்துவிட்டான். அதன் பின் அடுத்த பெண்களையும் என்னை ஒழிய எல்லாரையும் அவ்வாறே பொருள் பெற்றுக் கொடுத்து விட்டான். நான் இவனுக்காகப் பரிவு கொண்டு அவர்களை மறைத்து இவனையே சார்ந்து போந்தேன். இவனும் இவ்வாறு அரவு தீண்ட இறந்தான். கடலினடு வுட் கலங்கவிழ்ந்தாற் போல நின்றேன். சுற்றத்தார் போலத் தேவரீர் தோன்றி வந்து என் துன்பமெல்லாம்

நீங்க அருள் செய்தீர் " என்று தொழுது நின்றாள். திருஞானசம்பந்தர் இறைவரை நோக்கி, " இவளது மெலிவு உமக்குத்தகுமா ?" என்ற கருத்துடைய " சடையாய் எனுமால் " என்று தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினர். வணிகன் விடந்தீர்ந்து எழுந்து நின்றான். அவனும் கன்னிகையும் திருஞானசம்பந்த நாயனார் திருவடிகளில் விழுந்து வணங்கினார்கள். அவர் அவர்களுக்கு மணம்புரியும் பெருவாழ்வு வகுத்து விடை கொடுத்தனுப்பியருளினர்.

இச்சரிதத்தில் கன்னிகையாகிய வணிகப் பெண் தன் பெற்றோரை யறியாமல் தனது அத்தை மகனுடன் தனியாய்ப் புறப்பட்டு வீட்டை விட்டு வந்து விட்டாள். இவ்வொழுக்கம் முன்னாளில் தமிழ் இலக்கியங்களிற் பேசப்பட்டுள்ளது. இதற்கு அகப்பொருள் இலக்கணங்களுள் விதியும் விதிக்கப்பட்டடுள்ளது. இது தெய்வத் தன்மையுடன் கூடியது. ஆயுள் வரையும் அதற்கு மேலும் அவ்விருவர்க்குள் நீடிக்க வல்லது. ஒத்த அன்பினார்களாகிய மேம்பட்ட தலைமகளிடமும் தலைமகனிடமும் நிகழ்வது. வெறும் மிருகத்தன்மையாகிய காமத்தின் பாற்பட்டு இந்நாளில் ஒரு வரையறையுமின்றி நிகழும் " **புறம்போக்கு** " என்ற நிகழ்ச்சிகள் போல் உள்ளதன்று. இதனை இவற்றோடு உடன் வைத்து எண்ணலாகாது. இவற்றை " Elopement " என்று பெரியோர்கள் இகழ்ந்து ஒதுக்குவர். இவை கீழ் மக்களிடம் நிகழும் தீயொழுக்கமேயாகும். இச்சரிதத்தில் வணிகனை அரவு தீண்டின போதும் தான் தீண்டா தொதுங்கி நின்றாள். "வாளரவு தீண்டினும் தான் தீண்டகில்லாள் " என்கிறார் ஆசிரியர். இது உயர்ந்த கற்பொழுக்க நிலையைக் காட்டுகிறது. இந்நாள் கோர நிகழ்ச்சிகளில் இப்படி நிகழுமா ?

இனி இச்சரிதத்தில் வருவதுபோலத் துன்பம் நேர்ந்த போது சாதாரணமாகப் பெண்கள் "ஐயோ ! அப்பா !" என்று கூறிக் கதறி இறந்தாரை நோக்கிப் பதைப்பதைத் தவிர இறைவரை நோக்கி அழுவாரில்லை. இங்கும் முதலில் வணிகப்பெண் அவ்வாறே கூவி அழுதாள். வேறு செயல் ஒன்றுமில்லாதவளாயினள். மதியினாலே இறைவரை நோக்கிக் கூவிக் காக்கும்படி யழுதாள். மதி அவளுக்குக் கைதந்தது. அவள் இறைவரை நோக்கிக் கூவி அழுதது கவனிக்கத்தக்கது. விடத்தினை நீக்கி அருள் செய்யும் தன்மை பற்றியே இறைவரைப் போற்று கின்றாள். தேவர் கூட்டத்தைக் காக்கும்பொருட்டு ஆலால நஞ்சுண்ட அமுதமே என்கின்றாள். அதன்பின் விட அரவுகளை அணிந்த தன்மை பற்றிக் கூவுகின்றாள். பின்னர் பெண்ணுக்கிரங்கும் தன்மை பற்றி இரதிக்காகக் காமனுயிரை மீட்டளித்தது பற்றிப் போற்றுகின்றாள். அதன் பின் மார்க்கண்டருக்காகக் கூற்றுவனை உதைத்த செய்கை பற்றிப் பாராட்டுகின்றாள். அவளுடைய வேண்டுதல் பலித்தது. திருவருள் திருஞானசம்பந்த நாயனார் அவ் வழியே எழுந்தருளச் செய்தது. அவள்கூவுதல் வெறும் உலகஅழுகையாயில்லாது, சிவனருளையேசிந்தித்தஅழுகை யாயிருந்தது. நாயனாரைக் கருணை மேன்மேல் வைக்கத் தூண்டிற்று. திருக்கோயில் வழிபாட்டுக்குச் செல்லும் போது வேறு ஒன்றையும் சிந்திக்கவாவது செய்யவாவது கூடாது என்பது விதி. நாயனாரை அவ்விதியையுங் கடந்து அவ்விடத்துக்கு எழுந்தருளச் செய்தது. இந்தச் சமயத்தில் பயப்படாதே என்று யாரும் தேறுதல் செய்வார்கள். அதுபோல அல்லாமல் பயப்படாதபடி செய்யத் தக்க வல்லமை வாய்ந்திருந்தபடியால் நாயனார் அஞ்சல் அளித்தார். இவளது துன்பம் உமக்குத்தகுமா ? என்று

இறைவரை விளித்துப்பாடினுர். அவரது மெய்த்தன்மை வாய்ந்த திருச்செவியில் கன்னியின் கதறலோசை புக்கது. அவள் சரிதத்தை உள்ளபடி கேட்ட நாயனுர் அதை அப்படியே இறைவரிடம் விண்ணப்பித்தார். "இவள் ஏசறவு உமக்குத்தகுமா ? இவள் உண்மெலிவுதகுமா ? விடியுமளவும் துயிலாமல் இவள் அரற்றுவதா ? புறம் போந்து அலரும் படுவதா ?" என்று எல்லாம் எடுத்துப் போற்றி விண்ணப்பித்தருளினுர். அப்பதிகம் மந்திரமாகி விடம் நீங்கியது. இவ்வாருன நிலேயில் வெறும் உலக அழுகையாயில்லாமல் இறைவரை நோக்கி விண்ணப்பித்துக் கூறுதல் பயனுடைத்தாம்.

இத்திருப்பதிகத்திலும் இச்சரிதத்திலும் ஒரு தெய்விக சக்தி இந்நாளிலும் விளங்கிவருகிறது. இத்திருப்பதிகம் 11 திருப்பாடல்களேயும் சரிதம் 10 பாடல்களேயும் பக்தியோடு நியமமாகப் பாராயணம் செய்து வந்தால் நீண்ட நாளாகக் கலியாணமாகாத பெண்களுக்கும் 3 மாத அளவில் விவாகம் கைகூடிவரும். இதனே நான் நேரில் அனுபவத்தில் பல உதாரணங்களால் அறிவேன்.

## 26. மங்கையர்க்கரசியம்மையார்

மங்கையர்க்கரசியம்மையார் சோழ அரசரது மகளார். அவர் பேர் "மணிமுடிச் சோழன்" என்று கருதுகிருர்கள். "மண்ணெலா நிகழ மன்னனுய் மன்னும் மணிமுடிச் சோழன்றன் மகளார்" என்ற திருஞானசம்பந்த நாயனுர் தேவாரத் தாதரவுகொண்டு இவ்வாறு கருதுகிருர்கள். அவர் மதுரையில் கூன்பாண்டியர் மனைவியாராய்ப் "பண்டி மாதேவி" என்று போற்றப்பெற்ருர். அந்நாளில் பாண்டி நாட்டிலே சமண சமயம் மிகவும் பரவியிருந்தது. பாண்டியனும் நாட்டவர்களும் மதுரை நகரத்தவர்களுள் பெரும்பாலானவர்களும் சமணத்தைச் சார்ந்தவர்களாயி னர். அம்மையார் வழி வழி சிவனடி மறவாத சோழ பரம்பரையில் வந்தவர்.

"சென்னிவளர் மதியணிந்த சிலம்பணி சேவடியார்தம்
மன்னிய சைவத்துறையின் வழிவந்த குடிவளவர்"

குடியில் வந்தவர். இவர், சைவம் பொலிவிழந்து குன்றி யதையும் சமணம் மேலோங்குவதையும் கண்டு மிக வருந் தினர். திருஞானசம்பந்த நாயனுர் அவதரித்து அம்மை யார் ஞானத்திருமுலைப்பாலுண்டருளிய நிலைகளைக் கேட்ட வுடன் அம்மையார் தனங்களிற் பால் பெருகிற்று.

"சுரந்த திருமுலைக்கே தூய்ய சிவஞானம்
சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த
தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த
மனமுடையா ளன்பிருந்த வாறு (திருக்களிற்றுப்படியார்)

என்று ஞான சாத்திரம் இவரைப் போற்றிற்று. சீகாழிப் பிரம்ம தீர்த்தக்கரையில் நீ அழுததைக் கண்டு முலைசுரந்த அம்மையாரோ? உனது நிலைவிளம்பக் கேட்டு முலை சுரந்த

அம்மையாரோ ? இவர்களுள் யாவர் உயர்ந்தார் எனக்குச் சொல் என்று மங்கையர்க்கரசியாரின் உயர்வுதோன்ற வினவிப் பாடிப் போற்றினர் சிவப்பிரகாசர் (நால்வர் நான்மணிமாலை)

" இலைபடர்ந்த பொய்கை யிடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்னின்—நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தா ளார்சொல் லெனக்கு "

இவ்வாறு அரசனும் நாட்டவரும் சமண் சமயச் சார்பில் நின்று ஒழுகுவதும் சைவநெறி குன்றித் திருநீற்று நெறி பாலிக்கப் பெருது மங்குவதும் கண்டு மங்கையர்க்கரசியார் மனம் வருந்தினர். அவருக்கேற்றபடி மந்திரியார் குலச்சிறையார் அமைந்தனர். இவ்விருவர் பாங்குமன்றிச் சைவமங் கெய்தாதாயிற்று. இவ்விருவரும் சைவநெறி நிற்பாராய் அதனைப் பாண்டியனிடம் வெளிப்படப் புலப்படாதொழுகி வந்தனர்.

இவ்வாறுள்ள நாளில் திருஞானசம்பந்த நாயனர் திருமறைக்காட்டில் வந்தெழுந்தருளியுள்ள செய்தியைப் பாண்டிய நாட்டில் நல்வினைப் பயத்தினலே கேட்டனர். கேட்ட அப்போதே மனமிக மகிழ்ந்து நெடுந் தூரத்திலிருந்தனரேனும் சென்றடிபணிந்தவர் போல அகமகிழ்ந்தனர். அவரைக் கண்டு வணங்கும் விருப்பமுடையவராயினர். அறிவுடைப் பரிசனங்கள் மூலம் அவருக்கு விண்ணப்பம் எழுதித் தூதுபோக்கினர். அவர்களும் சென்று திருமறைக்காட்டில் ஆளுடைய பிள்ளையார் திருமடத்திற் சென்று அறிவித்து அவரைக் கண்டு அடிபணிந்தனர். அம்மையாரும் அமைச்சனரும் விடுத்த விண்ணப்பத்தின் படியே தங்கள் நாடு அமணர்களால் கட்டழிந்து சைவம் குன்றிய வரலாறுகளையும் கூறினர். அங்கு எழுந்தருளி அமணர்களை வேரறுத்துப் போக்கிச் சைவத்திறத்தை

ஆக்கம் செய்யவேண்டுமென்று வேண்டினர். பிள்ளையாரும் அவர்களுக்கு அருள்முகமளித்து உடனிருந்த திருநாவுக்கரசரிடம் கூறி அங்கு நின்று புறப்படலாயினர். அரசுகள் அவரை "உமக்கு நாளும் கோளும் பொல்லாதன ; சமணர்கள் பொல்லாதவர்கள் ; அவர்கள் என்னைச் செய்த தீமைகள் பல ; செல்ல இசையேன்" என்று மறுத்தனர். பிள்ளையார் அதற்கு "நாளும் கோளும் அடியார்களுக்கு நல்லனவே; திருநீறு வெற்றிதரும்; தேவரீர் இங்கு இரும் ; நான் போய் அமணரை வென்று திருநீறு விளங்கச் செய்து வருவேன்" என்று "வேயுறு தோளி" என்னும் பதிகம் அருளிச் செய்து அவர்பால் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுச் சோழநாடு கடந்து மதுரையை அணைந்தனர். அவர் வருமுன்பே அமணர்களுக்கு அழிவு காட்டும் தீக்கனுக்களும் தீ நிமித்தங்களும் உண்டாயின. அம்மையாருக்கும் அமைச்சனருக்கும் நன்னிமித்தங்கள் நிகழ்ந்தன. பிள்ளையார் எழுந்தருளிய செய்தி கேட்டவுடன் மிகமகிழ்ந்து அமைச்சரைச் சென்று எதிர்கொள்ளும்படி அம்மையார் கட்டளையிட்டருளினர். இஃது அரசருக்கும் உறுதி பயக்கும் செயல்தானே என்று கொண்டு அவரும் ஆர்வமுடன் விரைந்து புறப்பட்டுச் சென்றனர்.

இங்கு ஒரு செயல்பற்றி நாம் சிந்திக்க வேண்டியதுண்டு. அம்மையார் கணவர் கருத்துக்கு மாறாக நடந்தாரே ! அமைச்சனரும் அரசர் கருத்துக்கு மாறாக அவ்வாறே நிகழ்ந்தாரே ! இவை தகுமா ? என்பது. "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என்பது முன்னோர் மரபு. கற்புநிலையும் அதுதான் என்பதும் உண்மையே. ஆனால் உடல் உயிர் என்ற இரண்டு பண்டங்கள் உண்டு. உடலைப்பற்றிய விதிகள் வேறு. உயிரைப்பற்றியவை வேறு. அம்மையாரைப் பொறுத்த அளவில் உடலினியலில் கற்பு நிலையிலே நின்று ஒழுகினர். அம்மையார் உயிர்

பற்றிய நிலையில் கணவர் மாறுபட்டு வேதாகம விதிகளி னின்று வழுவி ஒழுகினல் தம்முயிர்க்கும் அவனுயிர்க்கும் உறுதிதரும் வழியில் செல்லவேண்டியதே முறையும் விதியுமாகும். வேதாகமங்கள் இறைவனுகிய பதிப் பொருளின் கட்டளைகளே யாவன. அந்தப் பரம பதியின் கட்டளைகளோடு கணவன் மாறுபடின் அவன் எண்ணங்களை விட்டு நீக்கிப் பரமபதியாகிய கடவுள் கட்டளைப்படியே நடக்கவேண்டியது மனைவியர் கடனுகும். உடலுக்கு நாயகன் கணவன். உயிருக்கு நாயகன் கடவுள். முன்னையது இவ்வுடலோ டொழிவது. பின்னையது பிறவிகள் தோறும் தொடர்ந்துவருவது. கடவுள் கட்டளையோடு ஒன்றுபட்டால் முன்னையதும் தொடர்ந்து வரும். இங்கு அரசன் பரமபதியின் கட்டளைகளோடு மாறுபட்டு மயக்கத்திற்குட்பட்டான். கணவன் மூளைக் கோளாற்றினல் பிடியுண்டு கிடந்தால் அந்நிலையில் அவன் எண்ணத்திற்கு மாறுனபோதிலும் அவனறியாமலே அவனைத் திருத்த வழிதேடத் தக்க மருத்துவரைக் கொண்டு திருத்தவேண்டியது மனைவி யின் முதற் கடமையே யாதும். இந்நிலையே இங்கு மங் கையர்க்கரசியார் நிலையுமாம். அதுவே கற்பு நிலையுமாம். காரைக்காலம்மையார் சரிதம் முதலியவற்றை இங்கு வைத்து ஒப்பிட்டுக் காண்க. நாட்டு மக்களின் உயிர் நல னும் உயர் நலனும் பாதுகாக்கவேண்டிய கடமைப்பாடும் அரசியார் மேலதாய் நின்றன என்பதும் நாம் நினைவிற் கொள்ளவேண்டியதுண்டு.

இனி அமைச்சரைப்பற்றியோ? என்ருல் மேலே சொன்னவை யனைத்தும் ஏற்ற பெற்றி அமைச்சருக்கும் ஒவ்வுவனவே யாகும். இங்கு அமைச்சனரின் கடமை அம்மையாருடையதைவிடப் பலமான அடிப்படையினின் றது. அரசனும் அரசியும் சேர்ந்தே அரசாங்கமாகும். அம்மையார் உத்தரவுபெற்றுவிட்டால் ஒருபாதி அரசாங்க

உத்திரவுபெற்றுவிட்டதாகும். மற்றபாதியின் பொறுப்பு ஏற்பதில் அரசனுக்கு **உறுதியானவற்றைச்** செய்வது அமைச்சரின் கடமையேயாகும். அரசன் தவறிய வழிமேற் சென்று இடித்துக்கூறவும் அமைச்சர்க்கு உரிமை உண்டு என்பது அரசியல் நீதிநூல். நாட்டு நலனைக் கவனிக் கவும் அமைச்சர் கடமைப்பட்டுள்ளார். ஒருவீட்டில் பணியாளன் இல்லத் தலைவி சொற்படி நடக்கக் கடவன். வீட்டுத் தலைவன் வினவினுல் "அம்மா சொன்னுங்கள்" என்றுல் அப்புறம் பேச்சில்லை. இதுவே நமது நாட்டி னியல்பு. ஏனை நாடுகளிலும் பெரும்பான்மை இதுவே இயல்பாகும். சிறுபான்மை மாறுபடுவது புறநடையின் பாற்படும். எனவே இங்குக் குலச்சிறையார் கடமை எளிதாயிற்று. இங்குச் சரிதம் கூறவந்த ஆசிரியரும் அமைச்சராதலின் இத்தனையும் உள்ளடக்கி "வென்றிவே லரசனுக்கும் உறுதியே என விரைந்து சென்ருர்" என்று எடுத்துக் கூறினுர். (திருஞான - புரா - 646)

பரிசனங்களுடன் குலச்சிறையார் பிள்ளையாரை எதிர் கொள்ள விரைந்து சென்றனர். 5 நாழிகை வழிசென் றனர். திருவாலவாய்க் கோபுரம் காட்சிப்படும் எல்லையள வில் அப்புறம் சென்றனர். பிள்ளையாரின் பரிசனக் கூட் டத்தை எதிர்காண்டலும் வழியில் கீழே வீழ்ந்து வணங் கியபடியே கிடந்தனர். இது எதிர்கொள்ளும் முறையும் மந்திரியாரின் தந்திரமுமாம். மேலும் காணப்படும் பரி சனங்கள் வந்து கூடியும் எழாமற் கிடந்தனர். பிள்ளையார் வந்து நேரில் கைகொடுத்துத் தூக்கிவிடும்வரை இவ் வாறே கிடந்தார். அவர் கைதூக்கி விட்டால் நாட்டையே மேலே தூக்கிவிட்டதாகும் என்பது இவர் கருத்து. மந்திரத் தந்திரமுமாகும். பரிசனங்கள் அறிவிப்ப அவ் வாறே பிள்ளையார் வந்து கீழ்க்கிடந்தவரை இரு கையும் பிடித்து "எழுக" என்று மேலே தூக்கிவிட எழுந்து கை கூப்பியபடி நின்றனர். பிள்ளையார் திருவாக்கினுல்

"அம்மையாருக்கும் உமக்கும் இறைவர் திருவருள் பெருகும் நிலை நேரிதாயுள்ளதோ?" என்று வினவி ஞர். அதற்கு இவர் சொன்ன மறுமொழி அற்புதமானது. "தேவரீர் இன்று எழுந்தருளப்பெற்றதனுல் முன்காலம் பழுதில்லாதிருந்தது; இனி வருங்காலமும் சிறப்பு வாய்ந் தது. ஆதலால் முக்காலத்தும் திருவருளுடையோமாயி னேம். நலமில்லாத நெறியில் அழுந்திய நாடும் அரசனும் திருநீற்றி னெளியின் விளங்கும் மேன்மையும் படைத் தோம்" என்ருர்.

"சென்றகா லத்தின் பழுதிலாத் திறமு
மினியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனு
லெற்றைக்குந் திருவரு ளுடையேம்
நன்றியி னெறியி லழுந்திய நாடும்
நற்றமிழ் வேந்தனு முய்ந்து
வென்றிகொள் திருநீற் ரெளியினில் விளங்கும்
மேன்மையும் படைததனம்."

(திருஞான - புரா - 659)

சிறிது தூரம் சென்றவுடன் திருவாலவாய்க் கோபுரம் தோன்றிற்று. இந்தக் கோபுர வரிசையில் திருவாலவாய் எது என்று பிள்ளையார் கேட்க அன்பர் காட்டினர். அங்கு நின்றபடியே தொழுது "மங்கையர்க்கரசி" என்றெடுத்து மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் வணங்கிப் பணி செய்ய எங்கள் இறைவர் எழுந்தருளியிருக்கும், "ஆலவா யாவதும் இதுவே" என்ற கருத்துடைய திருப்பதிகம் பாடித் திருக்கோயிலுக்கு எழுந்தருளினர். இதன் முன்பே அம்மையாரும் "இறைவரைக் கும்பிட வேண்டும்" என்று சொல்லி அரசனிடம் விடை பெற்று வந்து திருக் கோயி லில் ஒருபுற மிருந்தனர். அம்மையாரும் அமைச்சனும் சைவ ஒழுக்கத்தினின்ற தன்மை செழியன் முன்பு புலப்

படாவகை கொண்டுய்த்தனரே ; ஆயின் இப்பொழுது ஆலவாயமர்ந்தார் தம்மைக் கும்பிடவேண்டுமென்று அரசனுக்குச் சொல்லிச் சென்ருர் என்பதென்னேயோ? எனின், கோயிலுக்கு ஓரோ வழிச் செல்வதற்கு அவன் முட்டுக்கட்டை போடவில்லை என்று தெரிகிறது. சமண புத்தர்களும் உலக நன்மைக்காகக் கோயிலுக்குப் போய் வருகிற வழக்குடையார்கள் என்று அறிகின்ருேம். இந் நாளிலும் புத்த சமயிகள் இலங்கைக் கதிரேசன் கோயில் விநாயகர் கோயில்களுக்குச் சென்று வழிபடும் வழக்கத் தையும் காண்கின்ருேம். அல்லது இங்கு இது திருவருள் வழி நிகழ்ந்திருத்தலும் கூடும். அந்நாளிலும் திருக் கோயில் வழிபடும் அன்பர்களும் இருக்கத்தான் செய் தார்கள். மூர்த்தி நாயனுர் புராணம் பார்க்க.

பிள்ளையார் திருக்கோயிலுக்குள் பேரார்வத்தோடும் எழுந்தருளினுர். அப்போது அம்மையார் எதிர் செல்லா மல் ஒரு புறமாக ஒதுங்கி நின்றனர். ஏனெனில் கோயிலுக்குக் கும்பிட வரும்போது ஒருவரும் குறுக்கிட லாகாது என்பது விதி. அன்றியும் உள்ளே சென்று தங்கள் நாதரைக் கும்பிட்டு அருள்பெற்று மீளும்போது அவ்வருளும் சேர்ந்து பெறலா மென்ற விருப்பமுமுண்டு.

பிள்ளையார் உட்சென்று இறைவரைப் பணிந்து " நீலமாமிடற் ருலவாயிலுன் பால தாயினுர் ஞால மாள் வரே " என்ற பதிகம் பாடி இறைஞ்சி அருள்பெற்று வெளிப்போந்தனர். அதில் "ஆலவாயிலுன் பாலதாயி னுர் ஞால மாள்வரே" என்றதில் மன்னவன் மறுநாளே சைவனுகி விடுவான் என்ற ஆசிக் குறிப்பும் பொருந்த வைத்தது காணப்படும்.

பிள்ளையார் திரும்பிவரும்போது அம்மையார் தலை மேற்குவித்த கைகளோடு எதிர் சென்று பணிந்தனர். அமைச்சனுர் அவரை வளவர்கோன் பாவையார் என்றறிவித் தனர். பிள்ளையார் திருவடி பணிந்து வீழ்ந்த அம்மையா

ரைத் தமது திருக் கைகளால் மேல் எடுக்கவே அம்மையார் "யானுமென் பதியும் செய்த தவமென் கொல்?" என்று வாய் குழறிப் போற்றினர். பிள்ளையார் பரசமயத்திடையே திருத்தொண்டினில் வாழும் உம்மைக் காண வந்தனம் என்று உவந்து கூறியருளினர். அம்மையார் விடைபெற்றுச் சென்ற பின் அமைச்சனுர் திருமடங் காட்ட அதிற் சென்று பிள்ளையார் எழுந்தருளி யிருந்தனர். அத்திரு மடமே இந்நாளிலும் மதுரையில் "திருஞானசம்பந்தர் திரு மடம்" என்று வழங்கும் இடமாகும் என்பது வரலாறு. குலச்சிறையார் அம்மையார் அருளால் விருந்தளித்துக் குறைவறுத்தார்.

இச் செய்திகளைச் சமணர் அறிந்தனர். திருக்கூட்டமாகச் சைவர்களைக் கண்டனர். அவர்கள் ஓதிய திருப் பதிக ஓசைகளைக் கேட்டனர். அவர்களுக்குப் பொருமை உண்டாயிற்று. கண்டால் தீட்டு; கேட்டாலும் தீட்டு - "கண்டு முட்டு—கேட்டுமுட்டு" என்பது அவர்கள் வழக்கு. ஒன்றுகூடிச் சென்று அரசனுக்கு அறிவித்தனர். அரசன் "கேட்டு முட்டு" அடைந்தான். இதற்கென்ன செய்வது? என்று அவர்களைக் கேட்டான். அவர்கள் "வந்த அந்தணனை நாம் வலிசெய்து போக்கவேண்டுவதில்லை. அவன் உறையும் மடத்தில் விஞ்சை மந்திரத் தொழிலால் தீமூளும்படி செய்தால் அவன் பயந்து இந்த நன்னகரிடத் திரான்; ஏகும்" என்று சொன்னுர்கள். அரசன் அவ்வாறே செய்க என்று கூறி அவர்களை விடுத்தான். அரசன் அதனுற் கவலை கொண்டிருந்தான். மாதேவியார் வந்தார். அரசன் முகம் புலந்திருத்தலைக் கண்டார். "முக மலர்ச்சியின்ற் யிருக்கின்றீர்? உமக்கு என்ன கவலை?" என்று கேட்டனர். அவன் சமண அடிகண்மார் கூறிய செய்திகளையும் நிகழ்ந்தவற்றையும் சொன்னுன். மாதேவியார் "உமது நிலை இதுவாகில் தெய்வத்தன்மை பற்றி அவர்கள் வாது செய்தால் வென்றவர் பக்கம் சேர்ந்து

பொருந்துவதே உறுதியாகும். கவலைப்படாதீர்" என்று சொல்லி மகிழ்ச்சியுடன் சென்றார். மந்திரியாருக்கு இச் செய்திகளைச் சொன்னார். மந்திரியார் "இனி அமணர் செய்யும் வஞ்சனை யறியோம்" என்றார்.

சமணர்கள் அரசனிடம் விஞ்சை மந்திரத் தொழில் விளைப்போம் என்று சொல்லிச் சென்றார்களல்லவா? விஞ்சையாகிய மந்திரம் செய்தல்—என்றும், விஞ்சையும் மந்திரமுமாகிய இவை பலிக்காதபோது தொழிலும்—என்றும் இருபொருள்படச் சொன்னார்கள். அன்றிரவே அவர்கள் திருமடத்தருகு சென்று விஞ்சை மந்திரம் செய்தார்கள். அவை பலிக்கவில்லை. ஆதி மந்திரமாகிய திருவைந்தெழுத்தை ஓதுபவர்கள் பார்க்கும் திசையிலும் மற்றை மந்திரவிதி எதிர்ந்து வருமா? வராதல்லவா? கடைசியாகத் தீயை எடுத்துத் திருமடத்திற் புறத்திற் கொளுவிச் சென்றார்கள். அதனை அறிந்த பரிசனங்கள் தீயைத் தவிர்த்தனர். பிள்ளையாரிடம் சென்றறிவித்தனர். "என்பொருட்டு அவர்கள் செய்தாலும் அடியார்களுக்கு இது தகுவதா? மாதவர்கள் துயிலும் இம் மடத்தில் பழுது செய்வதோ பாவிகாள்!" என்று பரிந்தருளினர். எனவே முன்னர் பரிவும் பின்னர் அச்சமும் கொண்டருளினர். இந்தத் தவறு அரசன் மேலதே யாகும். அரசாட்சி முறை பிறழ்ந்துவிட்டது என்று திருவுள்ளங் கொண்டனர். "செய்யனே" என்று தொடங்கித் திருப்பதிகம் பாடி, "ஐயனே! அஞ்சல் என்றருளவேண்டும்; பொய்யராம் அமணர் கொளுவும் சுடர் **பையவே சென்று பாண்டியர்க் காகவே**" என்றருளினர். **பைய** என்றும் **ஆகவே** என்றும் அருளியபடியால் அத்தீ மெல்லச் சுரத்தின் உருவம் பெற்று அரசனிடம் கொடிய வெதுப்பு நோயாக மாறிச் சென்று பற்றி இறுதியில் அவனுக்கே ஆக்கமுந் தந்தது. இது அம்மையாரது அன்பின் றிறத்தை நோக்கிப் பிள்ளையார் செய்த அருளிப்பாடே யாகும்.

அம்மையாரும் அமைச்சனரும் அமணர் திரு மடத்துத் தீக்கொளுவியதையும் தீதின்மையையும் கேட்டு வெருண்டு தெளிந்தனர். அரசனுக்கு வெப்புநோய் கண்டு மிகுந்த பெருநிலையை யறிந்து பதைத்தனர். அமணர்களுடைய தீத்தொழிலால் விளைந்த கேடென்று கொண்டு மன்னவன்பால் விரைந்து சென்றனர். முன்னரே அருகர்களும் அங்கு வந்து அருகர்களாயினர். தமது மந்திரங்களும் மருந்துகளும் இயற்றினர். பீலி கொண்டு தடவினர். நோய் குறையாது மிகுவதாயிற்று. மன்னவன் உணர்வு இழந்து கிடப்பானுயினன். மக்கள் அருகு செல்வதற்கு அஞ்சி ஒதுங்கும்படி வெப்பு அளவு கடந்து மிகுவதாயிற்று. “ இது அமணர்கள் பிள்ளையார் பால் செய்த அநுசிதத்தால் விளைந்த கேடு. இவர்கள் தீர்க்கில் தீராது மிகுவதேயாகும். திருஞானசம்பந்தராகிய பிள்ளையார் வந்தால் நோய் தீரும் ” என்று மன்னவன் செவியினுடு சொல்லினர். “ஆனல் அழையுங்கள் பார்ப் போம் ” என்று கூறும் அளவுக்கு “ ஞானசம்பந்தர் ” என்ற நாம மந்திரத்தை மெய்யுணர் வுடையோராகிய அம்மையாரும் அமைச்சனரும் கூறச் செவியில் புகுதக் கேட்டலால் நோய் சிறிது நீங்கிற்று. இவ்விருவரும் மகிழ்ந்து திருமடத்திற் சென்று பிள்ளையாரைக் கண்டனர். திருவடிகளைப் பற்றிக் கொண்டு பதறினர்.

“ஞானத்தின் றிருவுருவை நான்மறையின் றனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானததி னெழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள் ”

(திருஞான - புரா - 728)

பிள்ளையார் அவர்களை நோக்கித் “ திருவுடையீர் ! உங் கள்பாற் றீங்குளவோ ?” என்று வினவி யருளினர். அவர்கள், “ அமணர்கள் செய்த தீத்தொழிலைக் கேட்டு

அஞ்சினேம் ; திருமேனிக் கடாதென்று அது தெளிந் தோம் ; அதன் விளைவாக அரசனுக்குக் கொடிய வெப்பு நோய் மூண்டுள்ளது ; பிள்ளையார் திருவுள்ளங்கொண்டு எழுந்தருளி அது தீர்த்தால் அவனுயிரும் எங்க ளாருயிரும் உய்யும் " என்று அழுது கூறினர். பிள்ளையார் அவர்களுக்கு அஞ்சல் அளித்து அரண்மனையை நோக்கி எழுந்தருளினர். சமணர்களுடன் வாது செய்து வெல் வதற்கும் வென்றால் அழிப்பதற்கும் இறைவன் திருவுள் ளம் அறிவேன் என்று திருக்கோயிலுக்குச் சென்று இரண்டு பதிகங்கள் பாடி இறைவர் திருவுள்ள மறிந்து அருள்விடை பெற்று மீண்டு அம்மையார் அமைச்சனர் இவர்களுடன் அரண்மனைக்கு எழுந்தருளினர். அமைச்சர் முன் சென்று அரசனுக்கு அறிவிக்க அவன் பிள்ளையாருக் குப் பீடத்தை தனது முடியின் பக்கத்தில் இடுக என்று சொல்ல வலிமை பெற்றான். பிள்ளையார் உள்ளெழுந் தருளிப் பீடத்திலமர்ந்தருளினர். அரசன் கண்டனன் ; வணங்கினன். தமது பதி யாது ? என்று வினவினன். பிள்ளையார் பன்னிரண்டு பேர் பெற்ற திருக்கழுமலம் என்ற கருத்துடைய பதிகம் அருளினர். அமணர் பொறாமைகொண்டு அனேகராய்ச் சூழ்ந்துகொண்டு தமது சமயவாதத்துக்கு அறைகூவிக் குரைத்தனர். அம் மையார் அஞ்சினர். பிள்ளையார், " மானினேர் விழி மாத ராய் வழுதிக்கு மாபெருந் தேவிகேள்.........ஆலவாயர னிற்கவே அமணராகும் ஈனர்கட் கியானெளியேன லேன் ; அஞ்சவேண்டா " என்று திருப்பதிகம் பாடி அருளினர். மன்னவன், "வேறு வாது என்னே? இருதிறத் தவரும் இனி என் வெப்பத்தைத் தீருங்கள். வென்றவர் பக்கம் சேர்குவன் " என்றான். அமணர்கள் முந்திக் கொண்டு " நாங்கள் இடது பக்கத்தைப் பிணி தீர்ப் போம் " என்றார்கள். ஆண்களுக்கு இடது பக்கம் எளிதிற் றீர்த்தற்கு உரியது என்ற உடற் கூற்று உண்

மையை அறிந்திருந்தார்கள்; ஆதலால் அவ்வாறு கூறினார்கள். பீலி கொண்டு தடவி மந்திரித்தார்கள். வெப்புத் தீராமல் மிக்கது. பிள்ளையார், "மந்திரமாவது நீறு" என்ற திருநீற்றுப் பதிகம் பாடித் தமது திருக்கையினால் நீறு கொண்டு மன்னவன் மேனியில் வலப்பக்கத்தில் பூசினார். பூசவே அப்பக்கம் குளிர்ந்தது. அதிலிருந்த வெப்பு நோய் இடப்பக்கம் சேர்ந்தது. அப்பக்கத்தில் வேதனை மிகவே மன்னவன் அதிசயித்துப் பிள்ளையாரை நோக்கினன். அமணர்கள் தோற்று அகன்று நின்றனர். பிள்ளையார் திருப்பதிகம் நிறைவித்து இடது பக்கத்திலும் திருநீறு தடவ நோய் முழுதும் நீங்கிற்று. அரசன் உய்ந்து எழுந்து பிள்ளையாரைத் தொழுதனன். பிள்ளையார் அமணரை நோக்கி உங்கள் சமய உண்மையைப் பேசலாம் வாருங்கள் என்றனர். அவர்கள் சமயவாதம் வேண்டாம். கண்ணுக்கு முன்னால் செய்து காட்ட வேண்டும். அனல் வாதம் செய்வோம். உங்கள் சமய உண்மைகளையும் எங்கள் சமய உண்மைகளையும் தனித்தனியே ஏட்டில் எழுதித் தீயில் இட்டால் வேகாமலிருக்கும் ஏடு கண்டதுதான் உண்மைச் சமயம் என்றனர். பிள்ளையார் அதற்கு உடன்படவே அரசன் தன் முன்னர் எரியமைக்கச் செய்தான். பிள்ளையார் தமது தேவாரங்கள் எழுதிய திருமுறையைக் கயிறு சாத்தி எடுக்கவே "போகமார்த்த பூண் முலையாள்" என்ற திரு நள்ளாற்றுப் பதிகம் வந்துதயமாயிற்று. அந்த ஏட்டினைக் கழற்றி எடுத்து "தளரிளவளர்" என்ற பதிகம் பாடித் துதித்துத் தீயிலிட்டனர். ஏடு வேகாமல் பச்சையாய் விளங்கியது. சமணர்களும் தங்கள் மந்திரம் எழுதிய ஏட்டை இட்டனர். அது கணத்தில் வெந்து சாம்பராகியது. சமணர்கள் தீயவித்துத் தேடியும் கிடைக்கவில்லை. அரசன் அமணரைப் பார்த்து, "சுரவாதத்திலும் தோற்றீர்கள். இப்போது அனல்வாதத்திலும்

தோற்றீர்கள். நீங்கள் தோற்றிலீர் போலும்?" என்றான். அவர்கள் "போலும்" என்றதனையே "இருகால் தோற்றாலும் முக்காலில் ஒருகாலாவது வெற்றிபெறுவோம்" என்றனர். அரசன் மறுப்பதன்முன் பிள்ளையார், "அது என்ன வாதம்?" என்று கேட்க, "ஓடும் ஆற்றுநீரில் ஏட்டினை இட்டால் ஆற்று நீர் வழியே போய்விடாது நிற்கும் ஏடுதான் உண்மை" என்றனர். பிள்ளையார் உடன்பட்டு வைகையாற்றில் ஏடு இடுவதற்கு எழுந்தனர். அமைச்சர் முன்வந்து, "இவ்வா தொன்றிலும் தோற்றவர்கள் செய்வதொட்டியே செய்தல் வேண்டும்" என்றனர். அமணர்கள் அவர்மேற் சினந்து தம்மையு மறியாமலே தங்கள் வாய் சோர்ந்து, "நாங்கள் தோற்றால் கழுவேறும்படி இவ் வேந்தனே கழுவேற்றி முறை செய்யக் கடவன்" என்று அறுதியிட்டனர். அனைவரும் புறப்பட்டு நீரில் ஏடு இடுவதற்கு வைகை யாற்றுக்குச் சென்றனர். கரைமேல் அரசனும் மாதேவியாரும் மந்திரியாரும் பிள்ளையாரும் பரிசனங்களும் நகர மக்களும் ஒரு புறமும் சமணர்கள் தலை கவிழ்ந்தவண்ணமாக மற்றொரு புறமுமாகச் சென்று நின்றார்கள். அரசன் அவரவர்களின் ஏடுகளை விடச் சொன்னான். அமணர்கள் தங்கள் சமய உண்மைகளும் மந்திரங்களும் எழுதிய ஓலையை முதலில் ஆற்றினடுவில் விட்டார்கள். அது ஆற்றோடு ஆறாகக் கடலை நோக்கி ஓடிவிட்டது. அதனை அணையப்பிடிப்பார்கள் போலக் கரையில் வெகுதூரம் சென்றார்கள். 100 விற்கிடைக்கு மேலாகச் சென்றுவிட்டது. அரசனைக் குட்பட்டவர்களாய் அவர்கள் மீண்டுவந்து சேர்ந்தார்கள். அரசன் அவர்களை விட்டுப் பிள்ளையார் திருநோக்கத்தைப் பார்த்தான். அமணர்களும் அச்சத்தை மறைத்துக் கொண்டு, "மாறு கொண்டருமிட்டால் வந்தது காணும்" என்றனர். பிள்ளையார் அவர்களை விட்டு மன்னனை நோக்கித் திருப்பாசுரம் பாடலுற்றார். அரசன் பிள்ளையார்

திருக்கை தீண்டித் திருநீறு பூசப்பெற்றதனுல் இறைவனே அறியுந்தன்மை யடைந்தான். இருவினை யொப்பும் மலபரிபாகமும் என்ற மனநிலைகளை அடைந்தான். இருவினைகளும் தராசுபோல் நின்றன. ஆதலால் பக்குவம் பெற்ற அவனை நோக்கி மந்திரோபதேசமாக உபதேசிக்கலானுர். வைகையாற்றின் கரையே தீட்சா மண்டபமாயிற்று. அரசன் பக்குவப்பட்ட மாணுக்கனுயினுன். பிள்ளையார் கருணையுள்ள ஞானசிரியராக உபதேசிக்கலானுர். இத் திருப்பாசுரத் திருப்பதிகம் மிக முக்கியமானது. சைவ மேன்மைகளையும் முடிந்தஉண்மைகளையும் புகட்டவல்லது. சைவ சித்தாந்தத்துக்கு மூலநூலாகவுள்ளது. அத்திருப்பதிகத்துக்கு ஆசிரியர் சேக்கிழார் பெருமான் 25 திருப்பாட்டுக்களில் விரிவுரை செய்தருளியுள்ளார். இவற்றையெல்லாம் எனது "திருப்பாசுர விளக்கம்" என்னும் நூலில் விரித்து எழுதியுள்ளேன். விரிவு ஆண்டுக் காண்க.

அத்திருப்பதிகத்தில் இறைவன் பெருங் கருணைத் திறங்களைப் பேசினுர். முப்பொருணிச்சயம் பற்றி எடுத்துக் கூறியருளினுர். சங்கார காரணனுயுள்ள முதல்வனையே முதலாக உடைத்து இவ்வுலகம் என்று காட்டி அவனை அடைந்துய்வதே உறுதிப்பொருளாவது என்றும் அதற்குரிய வழிகள் இன்னின்னவை என்றும் அவன் கருணைசெய் தாட்கொள்ளும் திறங்கள் நமதாராய்ச்சிக்குட்பட்டவை யல்ல என்றும் விளக்கியருளினுர். பதினெட்டு மா புராணங்களின் பெருமையைக் கூறினுர். இந்த ஏடு நீரில் எதிர்ந்து செல்லில் ஞானம் ஈசன்பாலதே யாம் என்று நாட்டினுர். இன்னபிறவும் எடுத்து உபதேசித்து வரைந்த ஏட்டினைப் பிள்ளையார் திருக்கைகளால் வைகையாற்றில் ஓடு நீரினிலிட்டருளினுர். அவ்வேடு இட்ட இடத்தில் நின்றிட்ட அளவில் நின்றுலே வாதம் வெல்லப்பட்டதாகும். அது அம்மட்டோடு நில்லாது எதிர்ந்து வேக

மாகச் சென்றது. பிறவியாற்றில் மாதவர் மனஞ் சென்றாற்போலச் சென்றது என்று ஆசிரியர் கூறுகின்றார். அவ்வேடு தங்குவதற்குப் பிள்ளையார் பதிகம் பாடவே அது திருவேடகம் என்ற பதியிற் றங்கியது. அமைச்சனார் குதிரையேறிச் சென்று தலைமீதுகொண்டு வந்து அனைவர்க்கும் காட்டினார். திருப்பாசுரத்தில் "வேந்தனு மோங்குக" என்றருளிய அதன் பயனாக மன்னவன் கூனும் நிமிர்ந்தது. அவர் "கூன் பாண்டியன்" என்றது போய் "**நின்றசீர் நெடுமாற நாயனார்**" ஆயினார்.

மன்னன், "அமணர்கள் ஓட்டியபடியாலும் அடியார்கள் துயிலும் மடத்தில் தீ வைத்ததாலும் அவர்களைக் "கழுவேற்றி முறை செய்க" என்று ஆணையிட்டான். மந்திரியார் அவ்வண்ணமே செய்தனர். வாதிட்டுத் தோற்ற 8000 சமண குருமார்கள் கழுவேறினார்கள். பிள்ளையார் அரசனுக்கும் தேவியாருக்கும் அமைச்சருக்கும் திருநீறளித்தனர். மதுரை வாழ்வார் அனைவரும் திருநீறிட்டு வாழ்ந்தனர். சைவத் திருநெறி நடந்தது. அரசரும் அம்மையாரும் அமைச்சரும் பின்தொடர்ந்து வரப் பிள்ளையார் திருக்கோயிலுக்குச் சென்று இறைவரை வணங்கித் திருமடத்திலமர்ந்தருளினர்.

பின்னர் பல நாட்கள் மன்னரும் மங்கையர்க்கரசியாரும் தம்மடி போற்றத் தாம் இறைவரை யடிபோற்றி அங்கெழுந்தருளி யிருந்தனர். பிள்ளையார் அதன்பின் சோழநாட்டுக்கு எழுந்தருளத் திருவுள்ளங்கொண்டனர். அம்மையாரும் அரசரும் அடிவீழ்ந்து பிரிவாற்றாது வருந்தினர். அது கண்டு பிள்ளையார் கருணை கூர்ந்து "யானும்மைப் பிரியாதவண்ணம் இந்நாட்டுத் திருப்பதிகள் உடன்வந்து பணிவீர்" என்றருளவே அவ்வண்ணமே அவர்களுடன் வரச் சென்று திருவாப்பனூர் — திருப்பரங்குன்றம் முதலாயின பதிகளை வணங்கினர். மற்றும் பல பதிகளில் ஏவலாளர்களை உடன் அனுப்பிக் குறை

வறுப்பேவினர். கடைசியாக மந்திரியார் பதியாகிய மணமேற்குடிக்கு எழுந்தருளினர். அங்கு அரசரும் அம்மையாரும் உடனிருந்தனர். அங்கு நின்றும் சோழநாட்டுக்குப் புறப்பட்டனர். பிரிவாற்ருது வருந்தி யுடன்போவதற்கொருப்படும் அவர்களை ஆற்றி, "என் விருப்பத்தைக் கேட்பீர்களாகில் நீங்கள் இங்கிருந்து சிவநெறி போற்றி வளர்த்து வாழ்ந்திருப்பீர்களாக" என்றருளி ஆணையிட்டு ஆசி யருளி விடை கொடுத்தருளினர்.

மங்கையர்க்கரசியார் பெருமை அளவிடற்கரியது. பிள்ளையார் திருவாக்கிலுலே பாடப் பெற்ற தவமுடையவர். பாண்டிநாட்டில் சமணம் பெருகிச் சைவம் குன்றியது கண்டு மனம் வருந்திப் பிள்ளையாரை அழைத்துச் சமண் மாசுகழுவித் திருநீற்றை வளர்த்தவர். "தென்னுடுற்ற விடர் நீக்கித் தங்கள் பொங்கொளித் திருநீறு பரப்பினுரைப் போற்றுவார் கழலெம்மாற் போற்றலாமே" என்று ஆசிரியர் வாயார வாழ்த்துகின்ருர். திருநீற்றைத் "தங்கள் பொங்கொளி வெண்ணீறு" என்று சோழ நாட்டுக்குச் சொந்தமாக ஆக்கினுர். ஆம்; அஃதுண்மையே. லோகாதயம் முதலிய பல தீய சக்திகள் தலைவிரித்தாடும் கேடுற்ற இந்நாளிலும் சிலருடைய நெற்றிகளில் திருநீற்றைக் காணப்பெறுகின்ருேமென்ருல் அந்த வெற்றியும் பெற்றியும் மங்கையர்க்கரசியாரையே சாரும்.

அந்நாளில் சமண சமயம் பெருகி நாடெங்கும் கவர்ந்தது. சமணர்களும் புத்தர்களும் ஓங்கி வளர்ந்தனர். தொண்டை நாடு – நடுநாடு – சோழ நாடு – பாண்டி நாடு எங்கு பார்த்தாலும் ஒன்றுபோலவே சமணமயமாயிற்று. சிவனடியார்கள் வருத்தப்பட்டார்கள். சிவன் கோயில்கள் மூடப்பட்டன. அரசர்கள் அவர் வசமாயினர். இந்நாளிலும் ஏறக்குறைய அவ்வண்ணமே தான். மங்கையர்க்கரசியார் போலப் பெண்மணிகள் முன்வந்தால் நாடு நலம் பெறும்.

சமயவாதமும் வேற்றுச் சமயங்களை அழிவு செய்தலும் சைவத்துக்குத் தகுதியாமோ? சைவம் எல்லாச் சமயங்களையும் தன்னுள் அடக்கி ராஜாங்கத்தமர்ந்த தல்லவா? "இதுவாகும் அதுவாகா தெனும் பிணக்கின்றி, நீதியினுலிவை யெல்லா மோரிடத்தே காண நிற்பது" சைவமேயல்லவா? என்ருல் அது சரியே. அவ்வச் சமயங்கள் தங்கள் தங்கள் நிலையில் நின்று அமைந்தால் சைவம் மறுக்காது. அவற்றை யெல்லாம் பொறுத்தே அமையும். வாதம் செய்யாது அழிவும் செய்யாது. அப்படிக்கில்லாமல் அளவை மீறிச் சைவத்தை அழிக்கத் தொடங்கினுல் உண்மைச் சைவர்கள் அதைப் பொறுக்கமாட்டார்கள். சைவம் என்பது சைவர்களுடைய சொத்து. நம்முடைய சொந்த சொத்தை மற்று ஒருவன் அபகரித்தால் பார்த்துக்கொண்டு சும்மா இருப்போமா? மாட்டோமல்லவா? அதுபோலவேதான் இதுவுமாம். சமய மறுப்பும் வாதமும் இவ்வகையுட்பட்டனவே. அவ்வவரும் பிறர் சொத்துக்களை ஆக்கிரமிக்காது தம்மளவில் அடங்கி நிற்கப் பண்ணும் இயல்பினவே இவ்வாதமும். இதனிலும் பிள்ளையார் தாமாகத் துணியாமல் இறைவர் திருவுள்ள மறிந்த பின்னரே செய்தருளினர். ஆகவே இவை திருவருளின் வழி நிகழ்ந்தனவேயாம்.

சமணரைக் கழுவேற்றியது சைவத்தின் கருணைக்கு அடுத்ததன்று என்று சிலர் கருதுகின்ருர்கள். அக்கருத்தை உள்வைத்துக்கொண்டு இவ்வாதமும் கழுவேற்றலும் நிகழவேயில்லை என்றும் ஆராய்ச்சி செய்யத் துணிகிருர்கள். "சீன யாத்திரிகன் இது பற்றிச் சொல்லவில்லை. தேவாரத்திற் சொல்லவில்லை. நம்பியாண்டார் நம்பிகள் தான் முதல் முதல் சொல்கிருர். அதை அப்படியே நம்பிச் சேக்கிழார் விசாரியாமல் பின்பற்றி விட்டார்" என்றெல்லாம் ஆராய்ச்சி செய்ய முற்படுகிருர்கள். "பொய்யராமமணர் கொளுவுஞ்சுடர், பையவே சென்று பாண்டியர்க்

காகவே ” என்ற தேவாரம் அமணர் தீக் கொளுவியதைக் குறிக்கின்றது. “ வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே ” என்ற தேவாரம் வாதத்தையும் அதில் வெற்றியையும் அழித் தலையும் குறிக்கின்றது. சேக்கிழாருக்கும் நம்பியாண்டார் நம்பிகளுக்கும் அறியாமைப் பட்டம் சூட்டிய இக் கருணை மூர்த்திகள் திருஞான சம்பந்தர் பேரில் கருணையின்மை யையும் சுமத்துகிறார்கள். ஆயிரக்கணக்கான அடியவர்கள் உறையும் மடத்தில் தீக்கொளுவியது பெருங் குற்றமே யன்றோ ? குடியிருக்கும் இடத்தில் தீ வைத்தலுக்கு இந் நாளிலும் கொலைத்தண்டனை விதித்துள்ளார்கள். தீவைத் தலுக்குக் கொலைத்தண்டனை விதித்தால் நியாயாதிபதி கருணையில்லாதவன் என்பாருளரோ ? திருஞானசம்பந் தர் சமணரைக் கழுவேற்றவில்லை. ஏற்றும்படி சொல்லவு மில்லை. வாதம்தான் செய்தார்கள் – “வாதத்தில் தோற் றால் வெங்கழு வேற்றுவா னிம்மன்னனே ” என்று அவர் கள் தாமே ஓட்டினார்கள். சமயத்தில் முட்டுப்பாடு வந்த போது கழுவேறுதல் அவர்கள் சமய மரபு. “புத்தர் சமண் கழுக்கையர் ” என்றது காண்க. அதற்காக அவர்கள் எப்பொழுதும் கழுவைத் தாங்கிச் செல்வதும் உண்டு. புனல் வாதத்திலும் மூன்றாவது முறையும் தோற்ற போது அரசன் அவர்களைக் கழுவேற்றும்படி மந்திரியா ருக்கு ஆணையிட்டான். அது அரச நீதி உத்திரவின்பாற் பட்டது. அதனைக் கேட்டு விலக்காதிருந்தனர் திருஞான சம்பந்தர் என்பதுதானென்று. அதற்கும் ஆசிரியர் விடை கூறி அரண் செய்கிறார்.

“ புகலியில் வந்த ஞான புங்கவ ரதனைக் கேட்டும்
இகலில ரெனினுஞ் சைவ ரிருந்துவாழ் மடத்திற் றீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையாற் சாலு மென்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை ”

(திருஞான - புரா - 854)

திருஞானசம்பந்தர் சமணரைக் கழுவேற்றினுர் என்று சொல்வதெல்லாம் உபசாரம். ஒரு குழந்தை பிறந்து தாயிறந்துபட்டால் அக்குழந்தையைத் தாயைத் தொலேத் தவனென்று உலகர் கூறும் வழக்குப் போன்றதே இவ் வார்த்தையும்.

இனி மங்கையர்க்கரசியார் நாட்டு மக்களின் நலனேக் கருதியே ராசதந்திர முறைகளேக் கையாண்டனர் என்பது கவனிக்கத்தக்கது. தம் நாட்டின் சமயநிலே உயிர்க்குறுதி பயக்கத் தக்கதாக இருக்கவேண்டுமென்ற குறிக்கோ ளுடையவர். இந்நாள் நமது அரசியலில் மக்களின் உடல் நலக்தையே குறிக்கோளாகக் கொண்டொழுகுகின் ருர்கள். உடலினும் உயர்ந்த உயிரின் நலத்தைப் புறக் கணிக்கின்ருர்கள். Secular State என்றும் Socialistic Pattern என்றும் இவ்வகையில் குறுகிய குறிக்கோளேயே கொள்கின்ருர்கள். மங்கையர்க்கரசியார் பாண்டிமாதேவி என்கிற நிலேயில் தமது நாயகரையும் நாட்டையும் திருத் தக் கருதினுர். நல்வழிப்படுத்த எண்ணி முயன்ருர். நாயகராகிய அரசனேயும் அறியாமலே பிள்ளேயாருக்கு விண்ணப்பம் செய்து ஓலேபோக்கி யனுப்பினுர். பிள்ளேயாரை எதிர்கொள்ள அமைச்சரை அரசி என்ற நிலேயில் அனுப்பினுர். பிள்ளேயாரை வரவேற்கத் தாமும் திருக்கோயில் சென்ருர். நாயகரறியாமல் வேற்றிடஞ் செல்லலாகாது என்ற கற்பு நெறியையுங் காத்தார். திருக் கோயில் சென்று பிள்ளேயாரை எதிர்கொண்டு வணங் கியது பெரிய ராசதந்திரமாகும். பிள்ளேயார் வரவினுல் பிணங்கிய அமணர் சொற்கேட்டு முகம் புலர்ந்திருந்த கணவரை பிள்ளேயார் வந்து அமணருடன் வாது செய் தால் வென்றவர் பக்கம் சேர்ந்து துன்னுவ துறுதியே யாகும் என்று மெல்ல இக் கருத்தை அரசன் புந்தியிற் புக வைத்தார். அரசனுக்குச் சுரங்கண்டபோது பிள்ளேயார் வந்தாலன்றி நோயகலாது என்று கூறி அவனனுமதி

பெற்றே பிள்ளையாரை அழைத்துவந்து நோய் தீர்ப்பித்தும் வாதம் நிகழ்வித்தும் வெற்றி பெற்றார். பிள்ளையாரருளினால் அரசனுடன் நாடும் உய்ந்தது. இவையெல்லாம் உயர்ந்த குறிக்கோளையும் அதை அடைவதில் உயர்ந்தார் சுதந்திரத்தையும் காட்டுகின்றன. அம்மையாரின் சைவப் பற்றே உலகை உய்வித்து இந்நாளிலும் உய்யச் செய்து வருகின்றது. பெண்கள் வெறும் மிருக உணர்ச்சி யனுபவப் பண்டங்களா யிருந்தொழியாமல் சமயப் பற்றுகிய உயிருணர்ச்சியோடும் வாழ்வு செய்ய வேண்டும் என்பது அம்மையார் சரிதக் கற்பனையாகும். நாமும் நாட்டவர்களும் அவர் திருவடிகளை வணங்கி வாழ்வோமாக.

மங்கையர்க்குத் தனியரசி யெங்கள் தெய்வம்
வளவர் திருக்குலக் கொழுந்து வளைக்கைமானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோ னருளி னாலே
யிருந்தமிழ் நாடுற்ற விடர் நீக்கித் தங்கள்
பொங்கொளி வெண்டிருநீறு பரப்பினாரைப்
போற்றுவார் கழலெம்மால் போற்றலாமே.

(மங்கையர்க்கரசியார் புராணம் - 1)

## 27. பூம்பாவையார்

தொண்டை நன்னாட்டிலே வளமிக்க திருமயிலாப் பூரிலே வணிகர் மரபிலே சிவநேசர் என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். அவர் தம் பெயருக்கேற்பச் சிவநேச மிக்கிருந்தார். அவர் பெயர் காரணப் பெயராயமைந் தது. அவர் மிகுந்த செல்வம் படைத்தவர். கலங்களைக் கடலிற் போக்கிப் பெரு வாணிபம் செய்தார். கலத் திற் போக்கும் பண்டங்களையும் வரும் பண்டங்களை யும் நிரப்புவதற்காகப் பரந்த பெரிய பண்டகசாலைக ளுடன் பொருந்திய விசாலமான மாளிகையைக் கடற் கரையில் உடையராயிருந்தார். அக்கடற்கரை மிகச் செழிப்பாயிருந்தது. அந்நாளில் கபாலீசர் திருக்கோயி லும் கடற்கரையில் இருந்தது. இந்நாளில் உள்ள கோயில் அது கடல் கொள்ளப்பட்டு அழிந்ததன் பின்னர் நகரில் கொண்டுவந்து அமைக்கப்பட்டது என்று சரித ஆசிரியர்கள் சொல்கின்றார்கள். அக் கோயில் கட்டிடக் கற் கள் பல இப்போதுள்ள "செண்டுதோம்" "(St. Thome)" என்னும் கிறித்தவக் கோயிற் கட்டிடத்துட் காணப்படுகின் றன என்றும் சொல்கின்றார்கள். அக்காலத்துக் கடற் கரையின் வாழ்க்கை பற்றித் "துறைக்கொண்ட செம் பவள மிருளகற்றும் சோதித் தொன்மயிலை" என்ற சுந்தர மூர்த்தி நாயனார் தேவாரத்தாலறியலாம். சிவநேசரது செல்வத்தின் வளம்பற்றி ஆசிரியர் சேக்கிழார் பெருமான்,

"அருநிதித்திறம் பெருக்குதற் கருங்கலம் பலவும்
பொருகடற்செலப் போக்கியப் பொருட்குவை நிரம்ப
வருமலக்கல மணப்படப் பணைக்கரை நிறைக்கும்
இருநிதிப்பெருஞ் செல்வத்தின் எல்லையில் வளத்தார்"

—திருஞான - புராணம் - 1034

என்னும் திருப்பாட்டினாலறிவிக்கின்றார். அக்காலத்தில்

தமிழ்நாட்டில் கடற்றுறைமுகப் பட்டினங்களில் அயல்நாடு களுடன் கப்பல் வாணிகம் சிறந்து செழித்திருந்ததென்று அதற்கு முன்னைக் காலத்தில் வாழ்ந்த காரைக்காலம் மையார் சரித்திரத்தாலும் அறியலாம். நமது முன்னோர்கள் 2000 ஆண்டுகளுக்கு முன் கப்பல்வாணிகத்திற் சிறந் திருந்தார்கள். கப்பல் கட்டும் தொழிலும் நமது நாட்டி லிருந்தது. இவற்றின் பெருமையெல்லாம் சிலப்பதிகாரம் பட்டினப்பாலை முதலிய பழந்தமிழ் நூல்களாலறிகின் றோம். அவையெல்லாம் இப்போது குறைந்தும் அழிந் தும் போயினமை வருந்தத்தக்கது.

சிவநேசர் நமது நாட்டிலும் பிறநாடுகளிலும் உள்ள மற்றச் செல்வர்களைப் போலல்லாமல் தம்மை உள்ளவா றறிந்திருந்தார். "பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லை; பிறந்து மண்மேல் இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை ; இடை நடுவில் குறிக்குமிச் செல்வம் சிவன்றந்த தென்று" உணர்ந்திருந்தார். "வந்தவா றெங்ஙனே போமாறேதோ? இதற்கேது மகிழவேண்டா" என்ற உண்மையை நன்குணர்ந்திருந்தார். சிவனடிமைத் திறத் திலும் சிவனடியாரடிமைத் திறத்திலும் விருப்பினுடன் செம்மையே புரி சிந்தையா ராயினர். அடியார் கூட்டத்தில் ஓழிவின்றி உருகிய மனமும் மாறுபட்ட பரசமயங்களைப் போக்கும் செற்றம் மேவிய சீலமு முடையவ ராயினர். சீகாழிப்பதியில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் அவ தரித்து ஞானப் பாலுண்டு சமண சாக்கியர்களை இழித் தழித்து வரும் செய்திகளைக் கேட்டு அவர் சேவடிகளில் சிறந்த அன்புடையவராயினர். செல்வத்திற் சிறந்தன ரெனினும் மகவில்லாத குறையால் மனந் தளர்ந்தனர். தவம் புரிந்தார். அடியார் பூசைகளை அளவில்லாமற் செய் தார். அந்நலத்தினால் மனைவியாரது திருவயிறு என்னும் கமலத்தில் பூமகள் என்னும்படி ஓர் பெண்மகவு உதித் தாள். வணிகர் மனமிக மகிழ்ந்தார். தானங்கள் செய்தார்.

அடியார் பூசனை மிகச் செய்தார். மறையவர்க்கு வேண்டி யன கொடுத்தார். 10 நாட்களிலும் வேத விதிப்படிக் குள்ள சடங்குகளையெல்லாம் செய்தார். பூவினுள் எனவே வருதலிற் **பூம்பாவை** என்றே நாமமும் சூட்டினார். அவள் தளர்நடை பயின்று பொற்கொடியென ஏழாண்டு வளர்ந் தாள். கழல் அம்மானை பந்து முதலிய விளையாட்டுக்கள் பயின்றாள். சிற்றிலிழைத்தும், சிறு சோறட்டும், ஊசல் ஆடியும், பிற வண்டலாட்டுகளயர்ந்தும் வளர்ந்தாள். தந் தையார் அது கண்டு மகிழ்ந்து இவளை மணம் செய்பவன் எனது நிதிகளுக்கெல்லாம் உரியவன் ஆவான் என்று சொன்னார். அந்நாளில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் பாண்டி நாட்டில் எழுந்தருளி அமணரை வாதில் வென்று பாண்டியனது சுரத்தைப் போக்கி அனல்வாதம் புனல் வாதங்களில் அமணரை வெற்றிகொண்டு கழுவேற்றிப் பாண்டியற்குத் திருநீறளித்துச் சைவத்தை ஆக்கஞ் செய்த செய்திகளை யெல்லாம் அறிந்தோர் சொல்லக் கேட்டு மகிழ்ந்தார் சிவநேசர். அப்போது "எல்லாரு மறியும்படியாகத் திருஞானசம்பந்தருக்கு என் பெண்ணை யும் நிதிகளையும் என்னையும் முற்றும் கொடுத்தேன்" என்று வெளிப்படப் பகர்ந்தார்.

இப்படியிருக்கும் நாளில் ஒருநாள் பூம்பாவை முகை பறிக்க முல்லைப் பந்தலின் கீழ்ப் போய் முல்லையரும்புகள் கொய்தாள். அப்பொழுது அன்பர் அன்புடன் அளித்த பாங்கல்லால் ஆளுடைய பிள்ளையாருக்கு இது பொருந் தாது என்னும் விதியே பாம்புருவமெடுத்து வந்ததுபோல் ஒரு பாம்பு பந்தரில் மறைந்து வந்து அவள் விரல் கவர்ந்து பற்கள் எலும்புவரைப் பதியக் கடித்து நஞ் சுகுத்து விட்டது. பூம்பாவை பூமாலை அனலிற்பட்டது போல் மயங்கி விழுந்தனள். சேடியர் அவளை எடுத்துக் கன்னிமாடத்திற் கொண்டுபோய் உபசரித்தார்கள். சுற் றத்தார்கள் வந்து பாம்பு விடந்தீர்க்கும் உபாயங்களும்

மருந்தும் செய்வித்தார்கள். மந்திரம், தியானம், பாவக நிலை, முட்டி என்ற விஞ்சைவல்லவர்கள் பலரும் வந்து தம் தொழில்களெல்லாம் செய்தார்கள். ஆவிதங்கு பல் குறிகளும் இல்லையாயின. அப்பொழுது சிவநேசர் துயரு ழந்து, "இந்த விடந் தீர்ப்பவர்களுக்கு எனது செல்வ முற்றிலும் கொடுப்பேன்" என்று பறை சாற்றுவித்தார். மூன்று நாள் எல்லைவைத்தார். அவ்வெல்லையில் கல்வி யோர் அனேகர் வந்து செய்தொழில் யாவையும் செய்தார் கள். விடம் தீரவில்லை. இது விதி யென்று விட்டகன்றார் கள். சிவநேசர் தெளிந்து இவளை ஆளுடைய பிள்ளையா ருக்குக் கொடுத்தேன் என்று சொல்லிவிட்டபடியால் நாம் துன்புறுவதற்கில்லை. இவளை எரிமூட்டி அந்த எலும்பும் சாம்பலும் குடத்திற் சேமித்துப் பிள்ளையார் வரும்வரை வைப்பேன் என்று துணிந்தனர். அவ்விதமே அந்த எலும்புஞ் சாம்பலும் ஒரு குடத்தில் சேமித்தார். அதற்கு மாலை சாந்து அணி முதலியவற்றால் அலங்கரித்தார்; கன்னிமாடத்தில் வைத்தார். பகல் விளக்குப் போனகம் முதலிய உபசாரங்கள் எல்லாம் இயற்றினர்.

அந்நாளில் பிள்ளையார் திருவொற்றியூர் சேர்ந்தருளி னார். இது செய்தி கேட்டதும் சிவநேசர் மகிழ்ந்து திரு வொற்றியூர் நகர்வரையும் (சுமார் 10 நாழிகை) பந்த லமைத்து அலங்கரித்தார். பிள்ளையாரை எதிர்கொண்டு அழைக்கச் செய்தார். அவ்வளவில் பிள்ளையாரும் பரிச னங்களுடன் வந்தனர். சிவநேசர் செயலைக் கேள்வியுற் றனர். சிவநேசர் சென்று எதிர்கொள்ளத் திருமயிலா புரிக்கு எழுந்தருளினர். சிவநேசர் செயலைத் திருவுள்ளத் தடைத்துத் திருக்கோயிலுக்குச் சென்று வழிபட்டனர். சிவ நேசரை மகளின் என்பும் சாம்பலும் நிறைத்த குடத்தைக் கோயில் வாயிலுக்குக் கொண்டுவரும்படி சொல்ல அவரும் அவ்வாறே அதைச் சிவிகையில் வைத்துக் குடத்தை அபி முகத்தில் எடுத்து வைத்தார். நகரத்துள்ளோரும், நாட்டி

லுள்ளோரும், பரசமயத்திலுள்ளோர்களும் திரண்டுவந்து சூழ்ந்தனர். தேவர்கள் ஆகாயத்தில் நிறைந்தனர். பிள்ளையார் கோவில் வாயிலில் வந்து இறைவரது கருணையின் பெருமையே கருதிக்கொண்டவராய் நிலத்தில் இறந்துளோர் எலும்பை வைத்து அந்த உயிர்க்கு நன்னெறி கொடுக்க அந்த எலும்பொடு தொடர்ச்சியாம் என்றுகொண்டு சடங்கு செய்யும் கருத்தினுல் அருள் நோக்கம் செய்து அந்த எலும்பை நோக்கிப் "பூம்பாவையே!" என்று அழைத்து, "மண்ணினிற் பிறந்தார் பெறும் பயனுவது சிவனடியார்களை அமுதூட்டுதலும் கண்ணினுல் சிவபெருமான் திருவிழாக்களைக் காணலுமேயாய் இருக்குமாகில் நீ வருவாயாக" என்ற கருத்தமைந்த "மட்டிட்ட" என்ற திருப்பதிகம் பாடியருளினுர். அதில் "போதியோ" என்னும் திருவாக்காகிய அமுதம் பொருந்தவே அக்குடத்தில் உயிரும் வடிவமும் வந்தன. சமண் சாக்கியர்கள் இச் செய்கை யடுத்ததன்று என்றுரைப்பார் என்ற பத்தாவதாகிய சமண் பாட்டில் குடம் உடைந்து பூம்பாவை எழுந்தாள். எடுத்த பாட்டிலே வடிவம்பெற்று அடுத்த 8 பாட்டுக்களில் அம்முறையே 12 ஆண்டு வளர்ச்சி பெற்று 10 வது பாட்டினிற் ருேன்றிடக் கண்டு பிள்ளையார் திருக்கடைக் காப்பு விரித்தருளினர். தொண்டர்கள் "அரகர" என்று முழக்கினர். தேவர்கள் பூமழை பொழிந்தனர். மக்கள் பெருமானது கருணையை வாழ்த்தினர். பரசமயத்தினேர் எங்குள செய்கைதானிது என்று தள்ளாடி வீழ்ந்தனர்.

பூம்பாவையின் வடிவம் இறைவன் சிருட்டியாதலின் முற்றிலும் அழகுடையதாய் 12 ஆண்டுகள் நிறைவுடையதாய் இருந்தது. ஏழாண்டில் இறந்த பூம்பாவை சூக்கும நிலையில் மேல் 5 ஆண்டுகள் நிறைவுடையவளாயினள். ஒவ்வோர் அவயவங்களும் அதனதற்கு ஏற்றபடி முற்றிய இலக்கணங்களுடன் அழகுடன் விளங்கின. இத் தன்

மையை ஆசிரியர் விரித்துக் கூறி யருளியுள்ளார். விரிவு புராணத்துட் காண்க.

எண்ணில்லாத ஆயுள் படைத்தவன் பிரமதேவன். அவன் உலகத்தைப் படைக்கும் தொழில் பூண்டவன். அவன் அழகான ஒரு பெண்ணைப் படைக்க எண்ணினன். திலோத்தமை என்ற பெண்ணைப் படைத்தான். அவளுடைய அழகில் ஈடுபட்டான். அந்த விகாரப் பார்வையோடும் அவளைப் பார்த்தான். நான்கு முகங்களினாலும் நான்கு திசைகளிலும் அவளைப் பார்த்தான். அவள் மறைந்துவிட்டாள். அவன் விசாரமடைந்தான் என்றொரு புராண சரிதம் உண்டு. ஆனால் இங்கு இந்தப் பெண் ஈசுவர சிருட்டியில் வந்தவள். அவளை விட அழகினிற் சிறந்தவள். பிள்ளையாருக்கோ வயது 16. இவரும் அவளைப் பார்த்தார். ஆனால் அப்பெண்ணைப் பார்க்கவில்லை. இறைவருடைய கருணை வெள்ளத்தையே பார்த்தார். 1000 முகங்களாற் கண்டார். "இந்தப் பெண்ணை அழைத்துக்கொண்டு உங்கள் மனைக்குச் செல்லுங்கள்" என்று சிவநேசரிடம் சொன்னார். அவர் அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டருளவேண்டும் என்று பிள்ளையாரிடம் வேண்டினர். அதற்குப் பிள்ளையார் சிவநேசரிடம் "நீர் பெற்ற பெண் விடத்தினால் இறந்துவிட்ட பின் இறைவரது கருணை வெளிப்படப் பெற்று நான் மீளவும் உற்பவிக்கச் செய்தேன், ஆகையால் நீங்கள் சொல்வது தகாது" என்றருளினர். சிவநேசரும் சுற்றத்தார்களும் பிள்ளையார் திருவடிகளில் விழுந்து அரற்றினர். அவர்களுக்கு வேத நூற்றுணிபைப் பிள்ளையார் எடுத்துரைத் தருளினர். சிவநேசர் அப்பெண்ணை அழைத்துக்கொண்டு திருமனைக்கேகினர். ஆனால் அவளை வேறு ஒருவருக்கும் மணம் செய்து கொடுக்கமாட்டேனென்று கன்னிமாடத்தில் வைத்தனர். அவளும் அவ்வாறே சிவத்தை யடைந்தனள். பிள்ளையார் அத்தலத்தில் சில

நாளிருந்துவிட்டுச் சிவநேசரிடம் விடைகொண்டு பிற தலங்களை வழிபட எழுந்தருளினர்.

இங்குப் பூம்பாவையார் விடத்தினுல் 7 ஆண்டில் இறந்து 5 ஆண்டுகளாயின. 12 வயதளவில் சாம்பல் எலும்புகளிலிருந்து மீண்டு வந்தனள் என்று அறிகின்றேம். இது உண்மையா? நம்பக்கூடியதா? என்று இந்நாளில்கூறி நகையாடுவர். சிறிது ஆன்ம விசாரணையும் சிந்தனையுமிருந்தால் அவ்வாறு சொல்லார். மனிதர்க்கு உடல் உயிர் என்ற இரண்டு பொருள்கள் உள்ளன. அவற்றுள் உடல் அழிந்துபோகும். அதுவும் அழியாது பிருதிவி முதலிய பூதங்களாகப் பிரிந்து ஒடுங்கிவிடும். உயிர் அழியாதது. இறக்கிறதில்லை. அது உடல் இறந்த பின் நுண்ணிய வடிவில் எங்கேனும் தங்கி இருந்து மீளப் பிறக்கும். அது தன்னுடைய கர்மங்களுக் கேற்ப மறு பிறவி எடுக்கும். பைசாசங்களாற் பீடிக்கப்பட்டோர் களில் இந்த நிலையை யறியலாம். இப் பிறவிக்கு முன்னும் இறந்த பின்னும் உயிர்க்கு இருப்பிடமில்லை என்று கொள்ளும் சமயங்களில் இதனை ஒப்பமாட்டார்கள். ஆனுல் கரும நியதியை யாவரும் ஒப்பியே தீரவேண்டும். இங்குப் பூம்பாவையார் உயிர் சூக்கும நிலையில் எலும்பு சாம்பல் இவற்றைப் பற்றி ஒடுங்கியிருந்தது. பிள்ளையார் "போதியோ" என்று பாடிய அளவில் போய் வாயு வந்து குடத்தினில் புகுந்தது. வாயு புகுந்ததும் உடல் வளர்ச்சியும் வந்தது. பஞ்சபூதச் சேர்க்கையால் ஆகிய உடம்பு ஒவ்வொரு குழவி களிலும் இவ்வாறே புகுந்து வளர்வதை நாம் பார்க்கின்றேம். உயிர் நெருப்பினுல் அழிவதில்லை. நமது அறிவுக்கு எட்டாததை யெல்லாம் நம்புவதில்லை என்று சொல்வது அறிவுடையோர் செயலாகாது. நமது அறிவுக்கெட்டாத பல சத்திகள் உண்டு. திருநாவுக்கரசு நாயனுர் அரவு கடித்திறந்த அப்பூதியார் மகனின் உயிரைப் பதிகம் பாடி மீட்டு வரவழைத் தருளினர். அந்தப் பதிகம் பாடித் திரு

நீறு தந்தால் இப்போதும் பாம்பு விடந்தீர்கிறது. நமக்குப் புலப்படாத சக்தி ஒன்று அந்தப் பதிகத்திலிருக்கிறது. இதனை நாம் கண்கூடாக அறிய முடிகிறது என்று நான் முன்னே சொல்லியிருக்கின்றேன். சுந்தரமூர்த்தி நாயனார் முதலை யுண்ட சிறுவனை மூவாண்டு கழித்து வரவழைத்தனர். குளத்தில் தண்ணீர் வரவும் அதில் முதலை வரவும் முதலையின் வயிற்றில் மதலை வரவும் அம்மதலையின் மூவாண்டுவளர்ச்சி வரவும் அருளினர். இவையெல்லாம் தெய்வத்தின் திருவருளால் ஆவது. திருவருளை நம்பமாட்டேன் என்று துணிவது அறிவீனம். எனக்குத் தெரியவில்லை யென்று முடிப்பதுதான் அறிவுக்கடையாளமாகும்.

இனி இங்கு சிவநேசரின் துணிவு பாராட்டத் தக்கது. பெண் இறந்தபின் உடலை எரித்துச் சாம்பலும் எலும்பும் குடத்தில் சேமித்து வைத்துப் பெண் இருந்ததுபோலவே கருதிவைத்துப் பிள்ளையார் வரும்வரை 5 ஆண்டுகள் வரை நடத்தியது பெரும் துணிவான காரியம். பிள்ளையார் வந்தால் அவரிடம் கொடுப்பேன் என்றதும் துணிவு. பெண்ணையே கொடுக்க எண்ணினவர், அஃதியலாத போது எலும்பும் சாம்பலுமாகிய உருவத்திலாவது கொடுப்பேன் என்றது உலகில் இல்லாத ஒரு செயல். திருவொற்றியூரளவும் பந்தரிட்டு அலங்கரித்து, நடைக்காவணமிட்டுப் பிள்ளையாரை எதிர்கொண்டது அன்பின் பெருக்கினலாகியது. பெண் மீண்டபின் அவளை வேறு ஒருவருக்கும் மணம் செய்துகொடேன் என்றதும் மிகப் பெரிய அரிய துணிந்த செயல். இதுகண்டு ஏனைய உலகம் நகைக்கும். இவை உலகங் கடந்த செயல்கள்.

இனி "மட்டிட்ட" என்னும் திருப்பதிகத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் இங்குப் பேசுவோம். இது 11 திருப்பாட்டுக்களைக் கொண்டது. 11 வது பாட்டுக்குத் திருக்கடைக் காப்பு என்று பெயர். இதன் பயன் சொல்லியும்

பிள்ளையாரது முத்திரை பொறிக்கப் பெற்றும் உள்ளது. 10 பாட்டுக்கொண்டதே பதிகம் எனப்பெறும். இந்தப் பதிகத்துள் இரண்டு பொருள்கள் உபதேசிக்கப்பட்டன என்று வடித்தெடுத்து அருளுகிறுர் ஆசிரியர் சேக்கிழார் பெருமான். அவையாவன: அடியார்க் கமுதூட்டுதலும் இறைவர் திருவிழாக் காண்பதும் என்ற இரண்டுமே உண்மையாக மக்களுயிர்க்கு உறுதிப் பயனுவன என்பதாம்.

"மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்
உண்மை யாமெனி லுலகர்முன் வரு"கென உரைப்பார்
—திருஞானசம்பந்த - புரா - 1087

"அடியார்க்கு அமுது செய்வித்தல்" என்பது முதற்றிருப் பாட்டில், "ஓட்டிட்ட பண்பில் உருத்திரப் பல்கணத்தார்க் கட்டிட்டல்" என்றதனுலும், "நல்விழாப் பொலிவு கண் டார்தல்" என்பது 2வதுமுதல் 10வது பாட்டுவரை 9 திருப் பாட்டுக்களில் வரும் "ஐப்பசி ஓணவிழா" "கார்த்திகை நாள் விளக்கீடு" "மார்கழி ஆதிரைநாள்" "தைப்பூசம்" "மாசிக் கடலாட்டு" "பங்குனி உத்திர நாள்" முதலாகக் கூறப்படுவதனுலும் பெறப்படும். இரண்டு பயன்களுள் ஒன்றற்கு ஒரு பாட்டும் மற்றென்றற்கு 9 பாட்டுக்களுமாக வேண்டப்படுதலின் இவற்றுள் எது வலிமையுடைத்து என்பதை வாசகர்கள் உணர்ந்து கொள்ளலாம். இத் திருப்பாட்டு **மாகேசுரபூசை** என்னும் அடியார்க்கமுதூட் டும் பூசையில் இன்றும் ஓதப்பட்டு வருகின்றது. இந்தப் பயன்களிரண்டும் சிவாகமங்களின் முடிந்த முடிபுகளாம். வேதசிவாகமங்களாகிய இரண்டும் இறைவன் திருவாக் காகிய கட்டளைகள். அவற்றுள் சிவாகமங்களின் துணிபை இங்குக் கூறினர். வேதங்களின் உள்ளுறையாகிய துணிபும்

இவையேயாம் என்பது முன்னர்த் திருநீலநக்க நாயனர் புராணத்துள்,

வேத வுள்ளுறை யாவன விரிபுனல் வேணி
நாத னுரையு மவரடி யாரையு நயந்து
பாத வர்ச்சனை புரிவதும் பணிவது மென்றே
காத லாலவை யிரண்டுமே செய்கருத் துடையார்.

— திருநீலநக்க - புராணம் - 5

என்ற இடத்துக் கூறப்பட்டது.

குழந்தைகளின் கர்ப்பவாசம் 10 மாதங்கள். இங்கு 10 பாடல்களில் 10 மாத விழாக்கள் கூறப்பட்டன. 10 வது மாதத்தில் குழந்தைகள் தாயின் கர்ப்பத்திலிருந்து பனிக்குடமுடைந்து வெளித்தோன்றுவன என்பர். இங்கும் 10 வது பாட்டில் குடமுடைந்து பூம்பாவையார் தோன்றினர். பூம்பாவையாரின் தெய்வீகப் பிறவியின் கர்ப்பவாசமாகத் தமது தூய திருவுள்ளத்துச் சங்கற்பித்துப் பிள்ளையார் அருளினர் போலும்.

# 28. நம்பாண்டார் மகளார்

சோழநாட்டிலே திருப்பெருமணநல்லூரிலே மறையவர் மரபிலே நம்பாண்டார் நம்பிகள் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவருக்கு ஒரு மகள் உண்டு. அவர் பெயர் ஸ்தோத்திர பூர்ணும்பிகை என்று வடமொழியில் வழங்குவர் என்பர். அவரைத் திருஞானசம்பந்த நாயனுருக்கு மணம் செய்ய எண்ணினர் சிவபாதவிருதயரும் சுற்றத்தார்களும். முதலில் மணம் செய்வதற்குத் திருஞான சம்பந்தர் இசையவில்லை. அப்போது அவருக்கு வயது பதினறு. அவர் சுற்றமுறு பெரும்பாசத் தொடர்ச்சி விடு நிலைமையாய் இருந்தனர். மறையோர்கள் அவரை வணங்கி "இப்பூமியில் நீர் வைதிக வழக்கை எடுத்தீர் ; ஆதலினல் அறுதொழிலைச் செய்வதற்குத் துணைவியாக ஒரு கன்னியை மணஞ்செய்து உலகுக்குக் காட்டியருள வேண்டும்" என்று வேண்டினர். அதற்கு அவரும் இசைந்தருளினர். மறையவர் மகிழ்ந்தனர். தொண்டர்களார்த்தனர். நம்பாண்டார் தமது குலத்தோடிசைந்த மரபினராதலால் அவர் மகளாரை மகட்பேச எழுந்தனர். சிவபாதவிருதயரும் மற்றை மறையோர்களும் திருப்பெரு மண நல்லூருக்குச் சென்று நம்பாண்டாரிடம் தாம் வந்த செய்தியை அறிவித்தனர். அவர் இறைவரைத் தொழுது எல்லாப் பேறுகளையும் பெற்றவராய் மகிழ்ந்தனர். "உம்முடைய பெருந்தவத்தால் அம்மை திருமுலைப் பாலுண்டருளியவர்க்கு எம்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்ருேம் ! வம்மின்" என்று சொல்லி மகிழ்ச்சியுடன் அவர்களைச் செலவிடுத்தனர். அவர்கள் மீண்டு சென்று பிள்ளையார்க்கு அறிவித்து மணவினைகள் எல்லாம் செய்யத் தொடங்கினர். மணநாளும் ஓரையும் கணித நூலோர் வகுப்ப மணவோலை போக்கினர். இருபாலும் மணவினை

கள் தொடங்கின. திருநாளுக்கு ஏழுநாள் முன்னர் திரு முளை தெளித்தனர். சீகாழியில் தெருவுகளும் திருமனை களும் அலங்கரிக்கப் பெற்றன. திருமணநாளின் முன் னளிலே திருஞானசம்பந்த நாயனுருக்கு விதிப்படி காப்பு நாணணிந்தார்கள். தொண்டர்களும், சுற்றத்தார்களும், மறையவர்களும் ஏனையோரும் வந்து குழுமினர். மணப் பண்டங்கள் வந்து குவிந்தன. திருமண எழுச்சி எழுந் தது. திருஞானசம்பந்த நாயனுர் இறையவரை வணங் கிப் பதியினையும் வணங்கி முத்துச் சிவிகையில் ஏறி எழுந் தருளினர். அனைவருமாகத் திருநல்லூர் பெருமணத்தைச் சேர்ந்தனர். திருஞானசம்பந்தர் அங்குத் திருக்கோயிலுக் குச் சென்று வணங்கி அடுத்த ஒரு மடத்தில் எழுந்தருளி னர். அங்கு அவரைத் திருமஞ்சன மாட்டினர். பாதம் முதல் சிரம்வரை உரிய முத்தணிகளால் அலங்கரித்தனர். பிள்ளை யார் திருவடையாள மாலையைத் தாமே எடுத்துப் பூண்ட னர். அழகினுக் கணியாம் திருநீற்றினை அஞ்செழுத்தோதி அணிந்துகொண்டனர். இங்கிவரணிகள் செய்ய, அங்கு நம்பாண்டார் திருமனையில் ஞானமூர்த்தியின் கைப்பற்றத் தவம் செய்த தன்மை பெற்ற கற்பகப் பூங்கொம்பு போன்ற பெண்மணியாரையும் காப்பணிந்து சடங்குகள் செய்தனர். அணிகள் புனைந்தனர். பொன்வாசிகை சூட்டினர். பொன் னணி மாலைகள் பூட்டினர். எழில் விளங்கச் செய்தனர். பொன்னுல் செய்த விளக்குப் போல அழகுக் கழகுசெய்து அலங்கரித்து வைத்தனர்.

திருஞானசம்பந்த நாயனுர் மறைமுனிவர்கள் மகிழ்ந்து வாழ்த்தச் சடங்கு முதலான மங்கல இயங்கள் பலவும் முழங்கக் கடலின்மீது எழுந்து நிற்கும் முழுமதியம்போல முத்துக்குடை நிழற்ற முத்துச் சிவிகையி லேறிவந்து பூம் பந்தர் முன்பு சார்ந்தருளினர். சிவிகை நின்றும் இறங்கி மலர்களும் சுண்ணமும் பரப்பிய பாவாடை மீது வந்தனர். சுமங்கலிகளான மறைக்குல மகளிர் நிறைகுடம், தீபம்,

தூபம், மலர்மாலை, முளைப்பாண்டில் முதலிய மங்கலப் பொருள்களேந்தி எதிரேற்றனர். "எங்களை வாழ்த்தி முன்னாள் ஏடு வைகையி லிட்டாராகிய திருஞானசம்பந்தர் வந்தார்" என்று அவர்கள் வாழ்த்தி முன்பு செல்ல மணிப்பொற் பீடத்தில் ஏறிக் கங்கையின் கொழுந்து இமயமலையிற் கலந்ததென்ன ஆதிபூமி என்னும் மண வறையில் புக்கு எழுந்தருளியமர்ந்தனர். நம்பாண்டாரும் அவர் அருந்தவ மனைவியாரும் வெண்பால் ஏந்திவந்து அவர்திருவடிகளை விளக்கி அந்நீரை எங்குந் தெளித்து சுற்றத்தார்களும் தாமும் உள்ளும் பூரித்தனர். அவர் கையில் தமது கோத்திரமும் குலமும் எடுத்துச் சொல்லி "என் அரு நிதிப் பாவையாரைப் பிள்ளையார்க்களித்தேன்" என்று நீர் வார்த்தனர். நற்றவக் கன்னிகையை ஞானசம் பந்தர் செங்கை பற்றும் நற்பொழுது வரவே பெற்றவரும் உடன் பிறந்தார்களும் கன்னியாரைக் கொண்டணைந்தனர். அணைந்து ஞானசம்பந்தரின் வலப்பக்கத்தில் வெள்ளை மேகமோடிசைந்த மின்னுக்கொடியென விளங்கவைத் தார்கள். இருவரையுங் கண்டு கண்ணிமையாது வாழ்த்தி மனிதரும் தேவரானார்கள். மணப்பந்தரில் திருநீலநக்கர், சிவபெருமான் பாதமேவும் உள்ளத்தோடு வைதிகச் சடங்குகளையெல்லாம் செய்தனர். வேள்வியில் வெண் பொரியிட்டு எரிவலமாக ஏழுமுறை வலம் வரும் சடங்கு செய்யும் வேளை, அவ்வாறு வலம் வருதற்குப் பிள்ளையார் பெண்மணியாரின் திருக்கையைப் பற்றினர். யாம் வலம் வருதல் விருப்புறும் அங்கியாவார் விடையுயர்த்த இறை வரையேயாம் என்று சிந்தையிற் றெளிந்தனர் பிள்ளையார். அம்மையாரின் செங்கை பற்றும்போது "இந்த இல்லொழுக் கம் வந்து சூழ்ந்ததே! இவளோடும் அந்தமில் சிவன்றாள் சேர்வேன்" என்னும் ஆதரவு பொங்கிற்று. சுற்றத்தார் முதலிய அனைவரும் சூழ்ந்துவரத் திருக்கோயிலுக்கு எழுந் தருளினர். பவமற என்னை முன்னாள் ஆண்ட அப்பண்பு

கூடத் தம்முடைய திருவடியிலே இறைவர் என்னைக் கூட்டிக்கொள்வர் என்று நல்லுணர்வு நல்கியதனாலே "கல்லூர்ப் பெருமணம்" என்னும் திருப்பதிகம் பாடியருளினார். இறைவர் திருவருள் செய்து, "நீயும் பாவை போன்ற உனது தேவியும் இங்குன் புண்ணிய மணத்தின்கண் வந்தவர்கள் அனைவரும் எம்மிடத்துத் தோன்றும் சோதியிதனுள் வந்து சேருங்கள்" என்றருளி ஒரு முழுமுதற் சோதியாயினார். கோயிலுட்பட மேலோங்கும் கொள்கையால் அச்சோதி பெருகிற்று. அதில் ஒரு வாயிலும் வகுத்துக் காட்டிற்று. உலகுய்யும் வழியை வகுப்பாராகிப் பிள்ளையார் ஞான மெய்ந்நெறி யாவர்க்கும் நமச்சிவாயச் சொலே யாகும் என்று "காதலாகி" என்னும் திருப்பதிகத்தை வானமும் நிலனும் கேட்கும்படி அருளிச்செய்து "இம் மணத்தில் வந்தார் யாவரும் புகுக" என்றருளவே அனைவரும் புகுந்தனர். எல்லாரும் புகுந்ததற்பின் காதலியைக் கைப்பற்றிக்கொண்டு வலஞ் செய்தருளித் திருஞானசம்பந்தர் சோதியுட் புகுவாராய் போத நிலை முடிந்த வழிப்புக்கு ஒன்றி உடனானார். அதன்பின் அவ்வாயில் மறைந்தது. பழைய பெருமணக் கோயில் தோன்றியது.

இங்கு மகட்பேச வந்த பெரியோர்களிடம் நம்பாண்டார், "உம்முடைய பெருந்தவத்தால் பெற்ற பிள்ளையாருக்கு எம்முடைய குலக்கொழுந்தை யாமுய்யத் தருகின்றோம்" என்று கூறியது குறிப்பிடத் தக்கதாகும். பெண் வீட்டார்கள் இந்த மனப்பான்மை கொண்டொழுகுதல் சமூகத்துக்கு நலந்தருவதொன்று. பிள்ளைவீட்டாரை உத்தாரணம் செய்யப் பெண் கொடுப்பதாக எண்ணி ஒழுகுவது மண ஒழுங்கிற்கும் பின் உலக வாழ்வுக்கும் உகந்ததன்று. நலம் செய்வதுமன்று. விதிப்படி செய்யப்படும் மணச் சடங்குகள் மணத்தில் இன்றியமையாது செய்யப்படுதல் வேண்டும். அவற்றால் ஆன்மிக உணர்ச்சி

பெருகுவதுடன் சமூக நன்மைக்கும் ஏதுவாகும். உயர்ந்தோரால் எடுக்கப்பட்டுக் கையாண்டுவரும் சடங்குகளை மனம் போனபடி மாறுபடுத்தலும் விடுத்தொழித்தலும் தவறு. சமூகக் குலைவுக்கும் கேட்டிற்கும் காரணமாகும்.

இங்கு மணமகளாகிய அம்மையார் மணம் செய்த ஞான்றே தமது மணாளருடன் சிவலோகம் சென்று பேரின்ப வாழ்வு பெற்றார். அங்கு நித்தியானந்தமாய்த் தமது மணவாளருடன், உற்றார் பெற்றார் முதலிய அனைவருடனுமாக ஒருங்கே இருந்துகூடி இறவாத இன்பத்துடன் என்று மிருக்கும் பெருவாழ்வு பெற்றனர். இவ்வுலகத்திலிருந்து இல்வாழ்க்கை நடத்தவில்லை என்பதுண்மையே. பிள்ளையார் மணஞ் செய்ய உடன்பட்டது உலகிலிருந்து இல்வாழ்க்கை நடத்துவதற்காக அன்று. மணஞ் செய்து கொள்வது மறையொழுக்கத்துக்கு அவசியமாய் வேண்டப்பட்டது என்று உலகத்துக்குக் காட்டி அறிவுறுத்தவேயாம். தமது காதலியாருடனே கூடிச் சிவன்ருள் சேர்வேன் என்று துணிந்ததும் ஒரு சிறந்த கற்பனையேயாகும். மணத்தில் வந்தார் அனைவரும் ஒருங்கே தமக்கு முன்னரே சிவனுலகம் புகுந்து பேரின்பம் பெறச்செய்தது அம்மையார் பெருமையேயாம்.

# 29. சிங்கடியார் - வனப்பகையார்

சோழ நாட்டிலே திருவாரூருக்கு அணிமையில் திருநாட்டியத்தான் குடியிலே வேளாள மரபிலே கோட்புலியார் என்ற பெரியார் ஒருவர் இருந்தார். அவர் அரசரிடத்தே சேனுதிபதியா யிருந்தார். அவர் பெருஞ் சிவனடியாராயும் சுந்தரமூர்த்தி நாயனுரிடத்துப் பேரன்புடையராயு மிருந்தார். நம்பியாரூரரைத் தமது நகரத்துக்கு அழைத்தார். அவரும் எழுந்தருளினுர். அவரைத் தமது திருமனையில் எழுந்தருளச் செய்து பூசை முதலிய உபசாரங்கள் எல்லாம் சிறக்கச் செய்து திருவமுதூட்டுவித்தனர். சந்தன தாம்பூலம் வாசக்கலவை முதலியனவும் தந்தனர். மணிக்கலன்கள் ஆடைகள் முதலியனவும் நல்கினர். அவருக்கு இரண்டு பெண் மக்கள் உண்டு. அவர்கள் பெயர் சிங்கடி - வனப்பகை என்பனவாம். அவ்விருவரையும் அழைத்து வந்து நம்பியாரூரரைப் பணிவித்து, "அடியேன் பெற்ற மக்களிவர் அடிமையாகக் கொண்டருள வேண்டும்" என்று விண்ணப்பித்தனர். நம்பியாரூரர் அவ் விருவரையும் தமது மக்களாகக் கொண்டு மடியிலிருத்தி உச்சி மோந்து பாராட்டினர். வேண்டுவனவற்றை அளித்தனர். அவ்வாறே மகண்மை கொண்டு "சிங்கடி வனப்பகை யவளப்பன்" என்று தம்மை அவர்களைப் பெற்றெடுத்த பிதாவாக வைத்துப் பல பதிகங்களிலும் பாடியருளினர். நம்பியாரூரரால் பாடல் பெறும் பெருமையுடையவர்களாக இவ் விருவருமானுர்கள். அது பெரும்பேறு. அந்நாளில் மறையவர்கள் மற்ற மரபுகளில் மணஞ்செய்துகொள்ளும் வழக்கிருந்தது. மயிலாப்பூரிலிருந்த சிவநேசர் என்னும் வணிகர். தமது மகள் பூம்பாவையாரைத் திருஞானசம்பந்த

நாயனுருக்கு மணம் செய்யவேண்டினர். நம்பியாரூரரும் வேற்று மரபினர்களாகிய பரவையார் சங்கிலியார்களை மணஞ் செய்துகொண்டனர். நம்பியாரூரர் சிற்றின்பப் பிரியர் என்று சிலர் தகாத குறை சொல்கிருர்கள். இங்குத் தந்தையாராலேயே கொடுக்கப்பட்ட பெண்களை அடிமை கொள்ள அவர் உடன்படாமையாலே அவர்கள் கூற்றுத் தகுதியற்ற தென்பது விளங்கும். "சுந்தரன் பொன்னைப் பாடுவான்" என்ருெருவன் பாடியதாகக் கூறுவார்கள். அதுவும் தவறே யாகும். ஒவ்வொரு பங்குனி உத்திரத் திருவிழாவிலும் திருவாரூரில் வரும் அடியார்களுக்குக் குறைவறுத்தற்காகவே பரவையாருக்குப் பொன் வேண்டி நம்யாரூரர் அங்கங்கும் சென்று இறைவரைப் பாடிப் பொன் பெற்று வந்தாரேயன்றி மற்றில்லை என்பது சேக்கிழார் பெருமான் அருளியவாற்ரு லறிகின்ருேமல்லவா? பெரியோர்களைக் குறைகூறி இவ்வாறு அபசாரப்படுகின்ருர்கள் இந்நாள் மாக்கள்! அந்தோ! இவர்தம் மதிகேடு இருந்த வாறுதான் என்னே?

# 30. திருவெண்காட்டு நங்கையார்

சோழநாட்டிலே திருச்செங்காட்டங்குடியிலே மாமாத்திரர் என்னுங் குடியிலே "**பரஞ்சோதியார்**" என்னும் பெரியார் ஒருவர் இருந்தார். அவர் ஆயுள் வேதம் வல்லவர். வடநூற்கலை வல்லவர். எல்லாக் கலைகளிலும் தெள்ளி வடித்தறிந்த பொருளாவது சிவன் கழலினன்பே என்று சிவனடிக் கன்பு பள்ளமடையாய் வந்து பயின்று வரும் பண்புடையரா யிருந்தார். சிவனடியார்களுக்கு உரிய பணிகள் செய்தார். அரசனது (நரசிம்ம வர்மன்) சேனைத் தலைமை பூண்டு அவனுக்கு வெற்றி கொண்டு பல பரிசுகள் கொண்டு வந்தார். இவருடைய சிவனடிமைத் திறம் தெரிந்த அரசன் இவரைப் போர் முகத்தில் விட்டிருந்ததற் கிரங்கித் தாம் விரும்பியவாறே வாழ்ந்துவரும்படி பணித்து வேண்டிய நிதிகளையும் கொடுத்தனுப்பிவிட்டான். அவர் அடியார்களுக்கு வேண்டிய பணி செய்யும் பொருட்டுக் குற்றமற்ற நற்குடியில் வந்த **திருவெண்காட்டு நங்கை** என்ற அம்மையை மணந்துகொண்டு இல்லறம் நடத்துவாராயினர். தூய திருவமுதும், கனிகளும், கன்னலும், அறுசுவைக் கறிகளும், நறுநெய்யும், பாலும், தயிரும், இனிய பண்ணியங்களும், உண்ணீரமுதமுமாக இவ்வாறு அடியார்களை அமுது செய்விக்க உண்டு அடியார்கள் மகிழ்ந்தார்கள். அடியார்களை மகிழ்வித்து அவர்கள் முன்பு மிகச் சிறியராய் அடைந்து நடந்தமையால் இவரைச் சிறுத்தொண்டர் என்று உலகில் வழங்கினர்கள். அவர்களுக்குத் திருவருளினலே மனையறத்தின் வேராகி விளங்கிய திருவெண்காட்டு நங்கையிடமாகச் **சீராளதேவ**ரெனும் திருமைந்தர் அவதரித்தார். அந்த மகிழ்ச்சியினல் செங்காட்டங்குடி நெய்யாடல் விழா எடுத்தது. காப்பு அணி புனைந்தனர். சுற்றத்தார் கொண்டாடினர். அவர் தளர்நடைப்

பருவத்தில் மயிர்நுதற் சுட்டி, காதில் மணிக்குதம்பை, கழுத்தில் நாண், மார்பில் ஐம்படைத் தாலி, கைகளில் வயிரச்சரி, பொன்னரைஞாண், சதங்கை இவை பூண்டு தெருவில் விளையாடத் தொடங்கினர். மூவாண்டில் மயிர் வினைமங்கலம் செய்தனர். பின்னர் தந்தையும் தாயாரும் அவரைப் பள்ளியினில் வைத்தனர். அந்நாளில் அங்கு எழுந்தருளிய திருஞானசம்பந்த நாயனர் சிறுத்தொண்டரால் உரிய வகையால் உபசரிக்கப் பெற்றுச் சிறுத்தொண்டரையும் சீராளரையும் திருப்பதிகத்தில் வைத்துப் பாடியருளி வாழ்த்தியருளினர்.

இவ்வாறு அடியார்களை அமுதூட்டிச் செய்துவரும் பணியின் பெருமை திருக்கயிலாயத்துக்கு எட்டவே இவரது அன்பு நுகர்ந்தருளுதற்கு இறைவர் பெரிய பயிரவ வேடங்கொண்டு எழுந்தருளி வந்தார். பம்பையாகச் சுருட்டிய மயிரினிடையே தும்பை மலர்கள், திருநீற்றுப் பொட்டு, காதில் மணிக்குழையும, செவ்வரத்த மலரும், கழுத்தில் வெண்பளிங்கின் வடம், திருமேனியிற் கஞ்சுகம், காலில் திருச் சிலம்பு, இடது கையில் பிரமகபாலம், அதில் அணைத்த திரிசூலம், வலது கையில் தமருகம் இவற்றைத் தாங்கிய பயிரவக் கோலத்துடன் செங்காட்டங்குடி சேர்ந்தருளினர். மிகுந்த பசியுடையவர்போல வழியில் எதிர்கண்டவர்களைச் சிறுத்தொண்டர் மனையைக் கேட்டுவந்து திருமனையில் அணைந்து "தொண்டனுர்க்கு எந்நாளும் சோறளிக்கும் சிறுத்தொண்டர் இம்மனையில் இருக்கின்ருரா ?" என்று கேட்டனர். அவரை மாதவர் என்று கண்டு **சந்தனத்தாதியார்**, "அடியார்களைத் தேடி அவர் வெளியே சென்ருர், தேவரீர் உள்ளே எழுந்தருளுக" என்று சொன்னர். அதற்கவர், "பெண்கள் இருக்குமிடத்தில் நாம் தனியே வரமாட்டோம்" என்ருர். அவர் அங்கிருந்து நீங்கிப்போய் விடுவார் போலிருந்தார் என்று பயந்து மனைக்கடமை பூண்ட திருவெண்காட்டு

நங்கையார் விரைந்து கடைத்தலையில் வந்து, "அவர் அடியாரை அமுது செய்விப்பார் இன்று ஒருவரையும் காணுமல் தேடிப்போனுர் ; தேவரீரது பெரிய திருவேடத்தைக் கண்டால் மிக மகிழ்வார் ; இனித் தாமதிக்கமாட்டார்; இப்பொழுதே வந்துவிடுவார் ; நீர் எழுந்தருளி யிரும்" என்ருர். "அவர் நாம் உத்திராபதியுள்ளோம் ; செப்பருஞ் சீர்ச்சிறுத்தொண்டரைக் காண வந்தோம் ; எவ்வாற்ருலும் அவரையல்லாமல் இங்கு இரோம் ; கணபதீச்சரத்தில் ஆத்தியின்கீழ் இருக்கின்ருேம். அவர் வந்தால் நாமிருந்த படியைச் சொல்லுங்கள்" என்று போயினர். அடியார்களை எங்கும் தேடிக்காணுது சிறுத்தொண்டர் மனையில் வந்து மனைவியார்க்குச் சொல்லி வருந்திட அவர் பெரிய பயிரவக் கோலத்தடியவர் வந்த செய்தி சொன்னுர். அவர் எங்கே என்று கேட்க, நாங்கள் சொல்லியும் இங்கிராமல் போய்க் கணபதீச்சரத்தில் ஆத்தியின் கீழே இருக்கின்ருர் என்றனர். சிறுத்தொண்டர் விரைந்து சென்று கண்டு பணிந்தனர். அவர், "நீரோ பெரிய சிறுத்தொண்டர்?" என்று கேட்டனர். "அடியார்கள் முன்னே நிற்கவும் தகுதியில்லேனுலும் அவர்கள் கருணையினுல் நானென்று சொல்லுவர்; அமுது செய்விப்பதற்கு அடியாரைத் தேடிப் போனேன் ; காணவில்லை ; தவத்தாலே உம்மைக் கண்டேன் ; அடியேன் மனையில் எழுந்தருளி அமுது செய்யவேண்டு" மென்று வேண்டினுர். பயிரவர் "நாம் உண்பது மூவிருது (6 மாதம்)க்கொரு முறை ; அந்நாள் இன்று. நம்மை ஊட்டுதல் உமக்கு அரிது ; நாம் உண்பது நரப்பசு ; 5 பிராயத்தில் உறுப்பில் மறு இல்லாதவனுய் குடிக்கோர் மகனுய் இருத்தல்வேண்டும். புண்செய் நோவில் வேலெறிந்தாற் போலச் சொல்ல வேண்டிய தொன்றுண்டு ; அந்த மகனைத் தந்தையரியத் தாய்பிடிக்கும்பொழுதில் மன மகிழ்ச்சியோடும் அமைத்த கறி யாம் உண்பது" என்ருர். "அதன்படியே செய்வேன்" என்று சொல்லிச் சிறுத்

தொண்டர் திருமனைக்கு வந்தார். திருவெண்காட்டம்மை அவரது மலர்ந்த முகம் நோக்கி வினவினர். அவர் வயிரவர் சொன்ன செய்தியைச் சொன்னர். அது கேட்ட மனைவியார், "அடியாரை அமுது செய்விப்போம் ; ஆனல் அத்தகைய மகனைப் பெறுவதெப்படி ?" என்ருர். அதற்குச் சிறுத்தொண்டர் " அத்தகைய மகனை நினைவு நிரம்ப நிதிகொடுத்தாற் றருவாரும் உண்டு ; ஆனல் தனயரைத் தாய்தந்தை மகிழ்ந்து அரிவாரில்லை. ஆதலினல் என்னை யுய்ய நீ பெற்ற பிள்ளையை அழைப்போம் யாம்" என்ருர். அதற்கு மனைவியார் இசைந்து பள்ளியிற் சென்று "நம்மைக் காக்கவரும் மணியைக்கொண்டு வாரும்" என்ருர். சிறுத்தொண்டர் பள்ளிக்குச் சென்றனர். மகன் அவரைக் கண்டு ஓடிவரவே அவனை எடுத்து வந்தனர். திருவெண்காட்டு நங்கையார் அவனைத் திருமஞ்சனம் செய்து குறைவில்லாக் கோலஞ் செய்து கணவனர் கையிற்கொடுத்தனர். கறியமுதா மென்பதனல் அணைத்து முத்தம் தரவில்லை ; உச்சி மோக்கவில்லை. அடுக்களையிற் செல்லாது தனியிடத்துக்கொண்டு கலங்கள் கழுவித் தந்தனர். இனிய மதலைக் கிங்கிணிக் காலிரண்டும் மடியின்புடை யிடுக்கிக் கைகளிரண்டையும் கையாற் பிடிக்க மகனும் உவகையுறுகின்ருர் என்று மகிழ்ந்து நகைக்க அதுபோது தந்தையார் மகிழ்ந்து கருவிகொண்டு தலையரிவார். தந்தையும் தாயும் மகன் தமக்குப் பேறளித்தான் என்று ஒன்றுபோல மகிழ்ந்தனர். தலையிறைச்சி அமுதுக்காகாதென்று அதனைச் சந்தனத்தார் கையிற்கொடுத்து மற்றை யுறுப்பெல்லாவற்றையும் உரிய வகையால் அமுதாக்கினர். பயிரவர் முன்பு சென்று விண்ணப்பித்து அழைத்து வந்தனர். ஆதனத் தமர்த்தினர். அவர் சொன்னபடியே கறிகளெல்லாம் ஒருங்கே படைத்தனர். "எல்லாம் அமைத்தீரோ ?" என்று அவர் கேட்கத் " தலையிறைச்சி அமுதுக் காகாதென்று நீக்கி ஏனையவற்றைக் கறியாக்கினேம்" என்ன, அவர்

அதுவுங்கூட நாம் உண்பது என்னவே மயங்கினர். அப்போது சந்தனத்தார், "பின் நினைக்க வருமென்று முன்னரே அதனைக் கறிசமைத்தே"னென மகிழ்ந்து கொண்டு வந்து அதனையும் படைத்தனர். பயிரவர் "நமக்குத் தனி உண்ண ஒண்ணாது சிவனடியார் யாரையேனும் உடன் உண்ணக் கொண்டு வாரும்" என்றனர். சிறுத்தொண்டர் புறம் போய்க் காணாது மீண்டு வருந்தி வந்து, "உலகில் உள்ளோர் திருநீறு இடுதலைக் கண்டு நானுமிடுவேன்" என்றனர். ("என்னையே சிவனடியாராகக் கொள்ளவேண்டும்" என்று குறிப்பித்தபடி) பயிரவர் "உம்மைப் போல நீறிட்டார் உளரோ? உடனுண்பீர் நீர்" என்று கூறலும், உடனமர்ந்து அவரை ஊட்ட வேண்டியவராய் முன்னே உண்ணத் தொடங்கினர் சிறுத்தொண்டர். அதுகண்டு பயிரவர், "6 மாதங் கழித்துண்போம் அதுவரையும் தாழாது நீர் அவசரப்பட்டு முதலிலுண்பதென்னை? மகவு பெற்றீரேல் உடனுண்ண அழையும்" என்னவே, "மயங்கி அவன் இப்போது உதவான்" என்றனர். "போய் அழையுங்கள் வருவான்" என்று கூறியபடி வெளியே சென்று அழைக்கலுற்றனர் இருவரும். சிறுத்தொண்டர் "மைந்தா! வருவாய்!" என அழைத்தனர். அம்மையார் "அருமைச் செய்ய மணியே! சீராளா! வருவாய்! சிவனடியார் யாமுய்யும் வகையால் உடனுண்ண அழைக்கின்றார்; வருவாய்!" என்று ஓலமிட்டு அழைத்தனர். பள்ளியினின்றோடி வருவார் போலச் சீராளதேவர் ஓடிவந்தார். அடியார் உண்ணப் பெற்றோம் என்னும் பொலிவால் மிகவும் மகிழ்ந்து உட்செல்லவே பயிரவரைக் காணவில்லை. அவர் மறைந்தனர். இறைச்சிக் கறியையும் இலையிற் காணவில்லை. இறைவரும், உமையம்மையாரும் முருகவேளுமாக ஆகாயத்திற் காட்சி கொடுத்தருளிச் சிறுத்தொண்டரையும், திருவெண்காட்டு நங்கையரையும், சீராளதேவரையும், சந்

தனத்தாரையும் உடனேகொண்டு சிவலோகஞ் சேர்ந்தருளினர்.

இச்சரிதம் உலகங் கடந்த செயல். இதை உலகியல்பில் வைத்துப் பார்க்கலாகாது. கண்ணைப்பிடுங்கிக் கொடுத்த கண்ணப்பர் சரிதத்தில் தம்மையே மறந்து அன்புருவாய் நின்றநிலை காண்கின்றோமல்லவா? ஞானசாத்திரமாகிய திருக்களிற்றுப்படியாரில் ஆசிரியர் உய்யவந்ததேவ நாயனார் இறைதொண்டுகளை மெல்வினை என்றும் வல்வினை என்றும் இரண்டாகப் பகுக்கின்றார். மெல்வினை என்பன சிவ பூசைக்கான அங்கங்களைச் செய்தல் முதலியனவாய் நமக்குமெளிதானவற்றை மெல்வினை என்றார். சிறுத்தொண்டர் செய்த கொலை, சண்டீசர் தாதையைத் தாள் வெட்டுதல், அமுது செய்திலர் என்று ஊட்டியறுத்தல் முதலியனவற்றை வல்வினைகள் என்பவற்றுளடக்கினர்.

வரங்கடருஞ் செய்ய வயிரவர்க்குத் தங்கள்
கரங்களினு லன்றுகறி யாக்க—விரங்காதே
கொல்வினையே செய்யுங் கொடுவினைக ளானவற்றை
வல்வினையே யென்றதுநா மற்று.

(திருக்களிற்றுப்படியார் - 18)

சிவனடியார்களுக்கு அமுதூட்டும் செய்கையிலே மூழ்கிக்கிடந்தார் சிறுத்தொண்டர். அவர் மனைவியார் திருவெண்காட்டு நங்கையாரும் அத்தன்மையிலே நின்றனர். தம்மையும் தமது குடும்பப் பாசங்களையும் அறவே மறந்து அதற்கும் கீழாக்கினர்கள். இத்தன்மை உலக நிலையிலும் எல்லாப் பிறதுறைகளிலும் பார்க்கலாம். சூதாடுபவன், கட்குடியன், காமப்பித்தன் முதலியோர் தமது மனைவி மக்கள் எக்கேடு கெட்டாலும் எனக்கென்ன என்று திரிவதைச் சாதாரணமாக உலகில் காண்கிறோமல்லவா? சிறிது போதின்பந் தருவதுபோற் காட்டிப் பின் பெரிதும் துன்பமே செய்யும் சிற்றின்பங்களே இத்

தன்மை செய்ய வல்லனவென்றால் முதலிற் சிறிது துன்பம்போற் காட்டிப் பின்னால் அளவு படாத பேரின்பந் தரும் திருத்தொண்டுகள் செய்யக்கூடிய வல்லமையைப் பற்றிக் கேட்பானேன்? சிறுத்தொண்டர் நாடோறும் அடியார்களை வழிபட்டு அழைத்து வந்து சிறந்த அமுதை முன்னூட்டிப் பின் உண்ணும் நியமமுடையவர். அன்று அடியாரொருவரையும் காணாது வருந்தித் தேடிப்போயினார். கவலையுடன் திரும்பினார். ஒரு சிறந்த அடியார் வந்தனர் என்னக் கேட்டதும் பெருநிதிபெற்ற வறியோன் போல் மனமகிழ்ந்தனர். வயிரவர் சொன்ன நிபந்தனைகளுக்கெல்லாம் உடன்பட்டனர். எவ்வாற்றானும் அவரை ஊட்ட முயன்றனர். அவர் உடனுண்ண ஓர் அடியார் வேண்டியபோது திகைத்துப் புறம்போந்து காணாது வருந்தி வந்து தம்மையே அடியாராக ஏற்றுக் கொள்ள வேண்டினார். தாம் அடியாராக இருக்கத் தகுதியில்லாமையைக் குறிப்பிட்டுத் தாம் இயல்பாயணியா விட்டாலும் உலகில் நீறிட்டாரைக் கண்டு தாமும் இடுவதாய்க் கூறிப் பணிந்த தாழ்வு நிலையில் அறிவித்தனர். உடனுண்ண மகனை அழைக்க என்றவர் ஆணை தந்தபோது மகனில்லாமை யறிந்தும் ஆணைப்படி சென்று அவரை அழைத்தனர். இவையெல்லாம் அடியார்க்கமுது செய்வித்தலில் அவருக்கிருந்த பெரும் பித்தைக் காட்டுவன. அவர் போலவே அவர் மனைவியாரும் அமைந்தனர். கணவனார் கருத்துக்கிசைய ஒழுகும் கற்பொழுக்கம் ஒருபுறம் சிறந்து விளங்கியது. மனையறத்தின் வேராகி விளங்கினார் என்கிறார் ஆசிரியர். இக்கற்பொழுக்கம் மட்டுமேயன்றித் தம்மியல்பாலும் அடியார்க்கமுதூட்டும் அன்பொழுக்கத்திற் றலைசிறந்து விளங்கி அதற்கான முயற்சிகளை யெல்லாம் செய்துவரும் நியமமுடையாராயினார். இப்படிக் கல்லாமல் வெறும் கற்புநிலை யொழுக்கம் மட்டிலமைந்தால் இவ்வரிய செயல் நிகழ்ந்திராது. செயல் நிகழ்ந்

தாலும் மட்டற்ற மனமகிழ்ச்சியும் ஒருமைப் பட்ட உடனிகழ்ச்சியும் உண்டாயிராது. பயிரவர் வந்தபோது அவர் திருவேடத்தில் ஈடுபடுகின்றார். "பாராதரிக்கும் திருவேடத் தொருவர் வந்த" பரிசதனைக் கணவரிடம் உரைக்கின்றார். கணவர் பயிரவரிடம் போய் வந்த போது அவர்தம் மலர்ந்த முகத்தை முதலிற் கண்டு அவர் பரிசை வினவுகிறார். பயிரவரை அமுதூட்டி அவர் தம் மலர்ந்த முகங்காண விழைகின்றார். தாம் அமுதுக் காகாதென்ற தலை யிறைச்சியும் நாம் உண்பதென்று அவர் கூறியபோது திகைக்கின்றார். பின் அவர் ஆணைப் படியே புறம் சென்று மகனைக் கூவி ஆதரம் பெருக அழைக்கின்றார். மகன் மீண்டு வந்தபோது அவன் மீண்டு வந்ததற்கன்றி பைரவராகிய அடியார் உண்ணப் பெற்றோம் எனும் பொலிவால் அகமகிழ்கின்றார். பைரவர் சொன்ன இலக்கணப்படி மகனைப் பெறுவதெப்படி என்று தாம் வினவியபோது நமது மகனை யழைப்போம் என்று கணவர் சொல்லியதற்கு உடனே மகிழ்ந்து இசைந்தனர். இவையெல்லாம் அவரது ஆழ்ந்த அன்பின் பெருமையைக் காட்டுகின்றன. "மகனை யழையுங்கள், வருவான்" என்று பைரவர் கூறியபடி அமைந்து மகன் இல்லாமை யறிந்து வைத்தும் புறத்துப்போய் இவர் "செய்ய மணியே சீராளா வாராய்! சிவனாரடியார் யாம், உய்யும் வகையானுடனுண்ண அழைக்கின்றார்" றென்றோல மிட்டழைத்த திறம் சிவன்பா லன்பும் உலகியலன்பும் விரவி விளங்கி நிற்கின்றன. அன்பின் திறத்தாலே இறைவனும், அம்மையாரும், முருகப்பெருமானும் ஒருங்கே வந்து காட்சி கொடுத்துச் சிவலோகத்துக்கு அழைத்துச் செல்லும் பேறு பெற்றார்கள் இவரனைவரும். இச்சிறப்பு வேறு எந்நாயன்மார் சரிதத்திலும் காணாத் தனிச் சிறப்பாகும். இல்லறத்தில் உரிய வகையால் அடியார்களுக் கேற்ற வகையாற் பணிசெய்தற் கென்றே இவ்வம்மையாரைச் சிறுத்தொண்டர் மணந்து

கொண்டார் என்றறிகின்றோம். இதுவே இல்லறத்தின் உயர்ந்த குறிக்கோளாகும். சிவனடியார்கள் மற்றும் ஓரடியாருடனன்றித் தனியுண்ணமாட்டார்கள் என்பது இச்சரிதத்தாற் போந்த கற்பனைகளுள் ஒன்று. அடியார்களின் சொல்வழி நடப்போர்களுக்கு ஆண்டவனே உண்ணின்று பயனளிப்பர். பெண்கள் இருக்குமிடத்தில் ஆண் மக்கள் தனியே புகுதல் ஆகாது என்பதும் ஒரு சிறந்த ஒழுக்க நிலைக் கற்பனை.



## 31. சந்தனத் தாதியார்

சந்தனத்தாதியார் திருவெண்காட்டு நங்கையாரது தாதியார் என்ற மட்டில் அறியப்படுகின்றதே யன்றி வேறு வரலாறுகள் ஒன்றும் அவரைப் பற்றி அறியப்படவில்லை. அவர் திருவெண்காட்டு நங்கையாரது அன்பின்மேம்பட்ட ஒழுக்கத்துக்கு ஏற்றபடியே அமைந்தார். அவரது குறிப்பிற்கு ஒத்தபடி நடந்தார். அன்றியும் தாமும் இயல்பில் அத்தன்மை ஒழுக்கமுடையராய் இருந்தார்.

பயிரவர் முதலில் சிறுத்தொண்டர் மனைக்கு, வந்து "தொண்டனார்க் கெந்நாளும், சோறளிக்கும் திருத்தொண்டர் இம்மனைக்குள்ளாரோ?" என்று கேட்ட போது முதல் எதிர்ப்பட்டு இவர், "அடியாரைத்தேடி அவர்புறத் தணைந்தார், எம்மையாளுடையவரே ! வீட்டில் எழுந்தருளியிரும்" என்று விடை பகர்ந்தனர். வந்தணைந்தவர் மாதவரேயாம் என்று அவர் திருவேடத்தை நோக்கி அறிந்து அதற்கேற்றபடி வணங்கி ஒழுகி விடை யிறுத்தார். பின்னர் மைந்தனை அரிந்து திருவமுதாக்கப் புக்க

போது தலையிறைச்சி கறிக்காகாது என்று அவர்கள் ஒதுக்கி அதனை மறைத்துவிடக் கட்டளையிட்டு இவர் கையிற் கொடுத்தனர். இவர்தம் அறிவினாலே அது அமுது படைக்கும்போது நினைக்கவரும் என்று யூகித்து அறிந்து அதனை வேறாகக் கறிசமைத்து வைத்தனர். பைரவர் வந்துண்ணப் புகுந்தபோது அதுவும் தாமுண் பது என்னவே சிறுத்தொண்டரும் மனைவியாரும் திகைத் தனர். இவர் ஊன்றுகோல்போல உதவி உற்றவிடத்து முன்வந்து தாம் அதனைக் கறியாக்கியதைக் கூறி எடுத்து உதவினர். இச்செயல் தமது தலைவியார் சொல்லிச் செய்த தன்று. குறிப்பினாற் செய்ததுமன்றிது. யூகத்தினால் இடத்துக் கேற்றபடி தாமாகவே செய்தது. இவ்வாறு ஒழுகும் தாதியர் அரியர். இவர்தம் அன்பின் திறத்தாலே சிறுத்தொண்டரும் திருவெண்காட்டு நங்கையாரும் பெற்ற பேற்றைத் தாமும்பெற நேர்ந்தது.

# 32. கலிக்கம்ப நாயனர் மனைவியார்

நடு நாட்டிலே திருப்பெண்ணுகட மூதூரிலே வணிகர் குலத்திலே கலிக்கம்பர் என்றொரு பெரியார் இருந்தார். அவர் அங்குத் திருத்தூங்கானை மாடத்திலமர்ந்த சிவபெருமானிடம் நியதமான அன்பு செய்பவர். அடியார்க்கமுதூட்டுதலிலும் சிறந்து விளங்கினர். அடியார்கள் விரும்பும்படி திருவமுது, கறி, நெய், பால், தயிர், கனி, கட்டி இவைகளுடன் ஊட்டி மகிழ்ந்தார். ஏனை நிதியம் வேண்டுவன எல்லாம் அளிப்பார். ஒருநாள் அமுது செய்ய வந்த அடியார்களுக் கெல்லாம் அமுது செய்விக்கத் தொடங்குவார் அவர் பாதங்களை விளக்க முயல்கின்றார். அவர் மனைவியார் மனை யெல்லாம் விளக்கித் திருவமுதும், கறி யமுதும், பிறவும் அமைத்தனர். அடியார்களின் பாதங்களை விளக்கும்பொழுது முன் தமக்குப் பணிவிடை செய்து ஏவலாளராயிருந்த ஒருவர் ஏவல் முனிந்துபோய் அடியாராகிய திருவேடம் தாங்கியவர் தோன்றி வந்தணைய, அவர் பாதமும் விளக்க முயன்றார் கலிக்கம்பர். மனைவியார் அவரைப் பார்த்து முன்பு ஏவல் செய்தகன்றவர்போலும் என்று நினைத்தபோது கரகநீர் வார்க்கத் தடைப்பட்டது. கணவனுர் இவ்வடியார் முன் இருந்த நிலையை எண்ணி நீர்வார்க்கா தொழிந்தாள் என்று மனங்கொண்டு மேலும் பார்க்காமல் உடைவாளை வாங்கிக் கரகத்தை வாங்கி வைத்துவிட்டு மனைவியார் கையைத் தடிந்து விட்டனர். மேல் அடியார்களுக்குச் செய்யவேண்டுவனவற்றை தாமே செய்து முடித்தனர்.

அடியார் வேடந்தாங்கியவர்களின் முன்னிருந்த நிலைகளைக் கருதி ஏளனமோ பரிகாசமோ செய்தல் சிவாபராதமாகும்.

# 33. கலியர் மனைவியார்

தொண்டை நன்னாட்டிலே திருவொற்றியூரிலே தைல வினையாளர் மரபிலே சக்கரப்பாடித் தெருவிலே கலியனார் என்றொரு பெரியவர் இருந்தார். சிவனடிமைத் திறத்திலே அந்நெறியிற் றிருத்தொண்டு செய்துவந்தார். அளவற்ற செல்வமுடையரா யிருந்தார். திருவொற்றியூரிறைவர் கோயிலில் அல்லும் பகலும் விளக்கெரித்து வந்தார். அவர் செயலை உலகிற்கு அறிவிக்கத் திருவருளாலே அவரது செல்வம் அவரிருவினைபோல மாண்டது. மாட்சிமைத்தாக விளக்கெரித்தலில் இவருக்குள்ள ஆர்வம் குறையவில்லை. உள்ளவர்கள்பால் எண்ணெய் மாறிக் கொண்டுபோய் விற்று வரும் ஊதியங்கொண்டு விளக்கெரித்தார். சிலநாளில் அவர்கள் கொடுக்க மறுத்தனர். செக்காட்டி அக்கூலிகொண்டு சிலநாள் எரித்தனர். அவ்வினைஞர் பலர் உளராகவே அவ் வேலையும் கிடையாதாயிற்று. மனையிற் சாதனங்களை விற்றெரித்தார். அவையும் தீர்ந்தன. மனைவியாரை விற்பதற்குத் தேடினார் ; எவரும் வாங்காமையின் அதுவும் பயனில்லாதாயிற்று. "திருமுன் விளக்குமாளின் யான் மாள்வன்" என்று துணிந்தார். அகல்களைப் பரப்பினார் ; தம் உடலையே எண்ணெய்க் குடமாக எண்ணினார். அந்த எண்ணெய் பெறக் கழுத்தை அரியலுற்றார். இறைவர் அக்கையைப் பிடித்துக் கொண்டு வெளிப்பட்டுவந்தருளி உடன்கொண்டேகினார்.

தொண்டில் உறுதியுடைய அடியவர் தருத்தொண்டுக்கு இடையூறு நேர்ந்தபோது உடலையும் உயிரையும் பொருட்படுத்தாது உயிர் நீக்கத் துணிவர். இஃது அன்பின் உறுதிப்பாடு. அரிவாட்டாய நாயனார் சரித முதலியவை இங்கு நினைவு கூர்தற்பாலன. செல்வரா யிருந்த பேர்கள் வறுமை யடைந்துவிட்டால் பிற செல்வர்கள்

உதவிகள் செய்ய மறுப்பர். அடியார்கள் செல்வம் நீங்கி வறுமையுற்றால் கூலிவேலை செய்தாயினும் திருத்தொண்டுகளை விடாது செய்குவர். பலபேர் ஒரே தொழிலில் ஈடுபட்டால் வருவாய் குறையும். தொழிற்போட்டி என்பது கேடுதரும். அடிமைகளை விற்கும் வழக்கம் முன்னுளிலிருந்தது. இங்கு மனைவியார் அதற்குட்பட்டு இசைந்து நின்றது அவரது பெருமை காட்டுவது. இயற்பகையார் சரிதம் இங்கு நினைவுகூர்தற்பாலது. திருவிளக்குத் திருப்பணிக்கு உதவியாகப் பணி செய்யலாம் என்று கருதி மனைவியார் தம்மை விற்பதற்கு இசைந்திருந்தார்கள்.

---

## 34. கழற்சிங்கர் பட்டத்து அரசியாகிய மனைவியார்

கழற்சிங்க நாயனர் பல்லவகுலத்து அரசர்களில் ஒருவர். சிவனடியார்களல்லது மனத்தினிற் குறிக்கொள்ளாதவர். பகைவரை வென்று வடபுலங் கவர்ந்து கொண்டு அரசாண்டு நன்னெறி வளர்த்தனர். சிவபெருமான் கோயில்கள் பலவற்றையுங் கண்டு சென்று கும்பிட்டு வந்தார். அரசியலாயத்தோடும் சிவபுரி என்னும் திருவாரூருக்குச் சென்று திருக்கோயிலுக்குட் சென்று இறைவரை வணங்கினர். அப்போது அவரது உரிமைத் தேவிமார்களுள் சிறந்த பட்டத்தரசியார் திருக்கோயிலின் பெருமைகளெல்லாம் தனித் தனி சென்று கண்டுவந்தார். திருப்பூமண்டபத்துக்குச் சென்றார். அங்கு வந்து வீழ்ந்து கிடந்த புதுப் பூ வொன்றை எடுத்து மோந்தனர். செருத்துணையார் என்னுமன்பர் உடனே எதிர் வந்து அவளது மூக்கைப் பிடித்துக் கருவிகொண்டு வார்ந்தனர்.

அரசியார் குருதிபொங்கக் குழல்சோரத் தோகைமயில் போலத் தரையில் வீழ்ந்தரற்றினர். இதற்குள் மன்னரும் அணையவந்தனர். கற்பகப் பூங்கொம்புபோல அரற்று வாளை நோக்கி "இந்த வெவ்வினை அஞ்சாதே இவ்வண் டத்துள்ளோர் யார் செய்தார்?" என்று கேட்கும்போது செருத்துணையார் முன் வந்து நிகழ்ந்ததைச் சொன்னர். அதுகேட்ட அரசன், "செய்த குற்றத்துக்கு அந்த வரிசை யிலே யன்றோ தண்டிக்கவேண்டும்?" என்று சொல்லிப் பூவை எடுத்த கையை யன்றோ முன்னல் துண்டிக்க வேண்டுமென்று உடைவாளை வாங்கி அரசியின் செங்கை யினை வளையலொடுந் துணித்தனர். தொண்டர்கள் ஆர்த் தனர். அவ்வளவில் சிலகாலமிருந்து அரசர் சிவனடி சேர்ந்தனர்.

இச்சரிதம் பெண்மை நலத்திற்குப் பெரும் பிழைபடுவ தென்று சிலர் கருதலாம். அஃதிப் புராண இயலை உணரா தார் கூற்று. அன்பும் சிவனடிச் சார்புமே இப்புராணத் திற்கு அடிப்படையாவன. முன்காலத்தில் பெண்களை அடிமைகளாகவும் மிருகங்கள் போலவும் நடத்தினர்கள் என்றும் சிலர் குறை கூறுவார்கள். பெண்களுக்குச் சம உரிமையும், மேம்பாடும் கொடுத்தார்கள் நம் முன்னேர். எனவே இதுவும் அறியாதார் கூற்றேயாம். பெண் ஆண் என்ற பாகுபாடு இன்றி அடிமைத் திறத்திற்கு இழுக்கு நேர்ந்தபோது கண்டித்தும் தண்டித்தும் விடுவது இங்குக் கூறிய முன்னேர் வழக்கு. சத்தியார் சிவநிந்தனை செய்தார்களை நாவரிந்தனர். சண்டீசர் சிவாபராதம் செய்த தந்தையின் தாள்களை எறிந்தார். அதனல் அத் தந்தையும் குற்றம் நீங்கினன். எனவே உலக நன்மையும் குற்றம் செய்வார்க்கு நன்மையுமாயின. இங்கு நடந்தது அடியார்செயலும் அரசன் தண்டனையுமாயின. சிவாபராதம்

கழுவப்பட்டது. நரக தண்டமும் நீங்கிற்று. அரசியார் புனிதமாயினள். இறைவனுக்குரிய பூவை மோத்தலாகாது என்பது சிவாகம விதியாகும். "பிள்ளையாரை உடைத்தாலும் பெருமாளை உடைத்தாலும் நமக்கென்ன?" என்று பேச்சின்றி மழுங்கியிருக்கும் இந்நாள் உலகக் கண் கொண்டு இச்சரிதங்களைக் காணலாகாது.

இங்கு இவ்வரசருக்குப் பல தேவிமார்கள் இருந்தார்களென்றும் அவர்களுள் இத் தேவி முதல்வியாய்ச் சிறந்தவளாய்ப் பட்டத்து அரசியாவள் என்றும் அறிகின்றோம். இவள் சமணச் சார்புடையவள் என்றும் அதனாலேதான் அரசன் இறைவரை வணங்கும்போது இவள் உடனில்லாமல் கோயிலில் வேடிக்கை பார்த்து வந்தாள் என்றும் சில ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள். இவள் இரட்ட அரசனை அமோகவர்ஷன் நிருபதுங்கன் மகள் என்றும் இவளது பெயர் **சங்கா** என்றும் பேராசிரியர் - மா. இராசமாணிக்கனார் கூறுகின்றார்.* இவளைப் பற்றிப் பாகூர்ப்பட்டயம் அடியிற்கண்டபடி கூறுகின்றது :—

"திருமாலுக்கு மனைவியாக அமைந்த இலக்குமி போல இராஷ்டிரகூடர் குடும்பத்திற் பிறந்த **சங்கா** என்ற மெல்லியலாள் †நந்திவர்மர்க்கு மனைவியாக வாய்த்தாள். அவள் பொறுமையில் நிலமகளை ஒத்தவள்; அரசனது புண்ணியமே உருவெடுத்தாற்போல விளங்கினவள். அவள் பேரழகி; அறிவு நுட்பம் வாய்ந்தவள்; பல கலைகளிலும் வல்லவள்." இதனாலேயே இவளைச் சேக்கிழார் பெருமான், "உரைசிறந் துயர்ந்த பட்டத் தொரு தனித் தேவி" என்று கூறினர்.

இங்ஙனம் அரசரது பட்டத்தரசியாகியும் காதல் சிறந்தவளாயும் இருந்த தேவியாரை அரசர் இவ்வாறு செய்

---

*சேக்கிழார்—பக்கம் 111–112 (டாக்டர்-மா. இராசமாணிக்கனார், எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பிஎச்.டி.)

†மூன்றும் நந்திவர்மர்—இவரே கழற்சிங்க நாயனார்.

தார் என்றால் அரசரது சிவனடிமைத் திறமும் அன்பின் றிறமும் எத்தனை மேம்பட்டன என்பதறியலாம். உலகியல் ஆசை முதலியவை எவ்வாறு கீழ் நின்றுவிட்டன என்பது மறியலாம்.

---

## 35. கோச்செங்கட் சோழர் தாயார் கமலவதியார்

திருவானைக்காவில் ஒருயானை இறைவரைப் பூசித்து வந்தது. ஞானமுடையது. ஒரு சிலம்பியும் தன் வாய் நூலால் இறைவர் திருமேனிமேல் சருகு விழாதபடி நூல் வலயமிழைத்துப் பூசித்து வந்தது. யானைக் கை பட்டு நித்தமும் நூல் வலயம் சிதைந்து வந்தது. சிலந்தி கோபித்து யானையின் துதிக்கையினுள் புகுந்து மூளை வரையும் சென்று மூளையைக் கௌவியது. யானை பொறுக்கலாற்றாது கையை நிலத்தில் மோதி யிறந்தது. சிலந்தியும் கூடவே யிறந்தது. யானைக்கு வீடு கொடுத்தார் இறைவர். சிலந்தி செய்த பணிக்காக அதனை முடியுடைய மன்னனாக்கி உலகம் அவனது குடை நிழற்கீழ் தங்கவைக்க அருள் வைத்தார். சோழர் குலத்து அரசனாகிய சுபதேவன் தனது மனைவியார் கமலவதியுடன் தில்லைத் திருமன்றம் கும்பிட வந்து வழிபட்டான். அவன் தேவி கமலவதி மக்கட்பேறு இன்மையால் அதுபற்றித் தில்லை அம்பலவாணரிடம் வரங்கிடந்தாள். இறைவர் திருவுள்ளம் பற்றினர். கமலவதி கருவுற்றாள். அக்கருவினுள் சிலந்தியின் உயிர் புகச் செய்தருளினர் இறைவர். அவ்வாறே அது புகுந்து கருவாகி வளர்ந்தது. கருவுயிர்க்கும் வேளை வந்தது. காலமுணர் பெரியோர்கள் இப் பிள்ளை இன்னும் ஒரு நாழிகை கழித்துப் பிறக்குமாயின் மூவுலகும் ஆளும் முடியுடை மன்னனாகும் என்றனர்

கமலவதி அப்படியானால் இப்போது பிள்ளைபெறு திருக் கும்படி என் கால்களைக் கட்டி உயரத் தூக்கிக் கட்டுங்கள் என்றனள். அவ்வாறே செய்யப்பட்டது. ஒரு நாழிகை கழியவே கட்டவிழ்த்துவிடப் பிள்ளை பிறந்தது. ஆண்மக வென்றறிந்த தாய் "எங்கோச் செங்கணானோ?" என்று சொல்லி இறந்தனள். அப்பிள்ளையே பின்னர் கோச்செங் கட் சோழனாக ஆயினர். தவத்தால் முன் பிறவியின் உணர்ச்சியுடன் உலகமாண்டனர். இறைவனுக்குத தாம் முன்னம் சிலந்தியா யிருந்து பணி செய்த திருவா னைக்காவில் திருக்கோயிலமைத்தனர். இறைவருக்கு 78 கோயில்களைக் கட்டினர். அனைத்தையும் யானை புகாதபடி மாடக் கோயில்களாகவே அமைத்தனர்.

தம்முயிருக்கு இறுதி நேரக்கூடிய காரியமாயினும் அது தமது மகவுக்கு மேம்பாடு தருவ தொன்றாயின் அதனையே துணிந்து செய்வர் நல்ல தாய்மார்கள். இங் குப் பிள்ளை அப்போது பிறக்காதிருக்கும்படி தமது கால்களை உயரத் தூக்கிக் கட்டினால் தம் உயிருக்கு ஆபத்து நேரும் என்று தெரிந்திருந்தும் கமலவதியார் தம் மகவு முடியுடை மன்னவனாகச் சிறந்தோங்கவேண்டு மென்பது கருதி அக்காரியத்தைச் செய்விக்கத் துணிந்தாள். இது பாராட்டத்தக்க அரிய செயல்.

ஆனைத்துயிர்க்கும் முன்னைப் பிறவியின் நினைவு மறைக்கப்பட்டுள்ளது. அது உயிர்கள் கரும நுகர்ச்சியின் பொருட்டுச் செய்யப்படும் இறைவனது திரோதான சத் தியின் செயல். திரோதானம் = மறைப்பு. இங்குக் கோச் செங்கணாருக்கு அவ்வாறன்றி முன்னைத் தவப்பயனால், முன் னைப் பிறவியின் அறிவு வெளிப்பட்டு நின்றது அருமைப் பாடு. அவ்வறிவினால்தான் அவர் திருவானைக்காவில் பணி செய்தார். தாம் கட்டிய கோயில்களை எல்லாம் யானை புகாதபடி மாடக் கோயில்களாகவே அமைத்தார். இது யானையின் முன்னைப் பகை நினைவு.

# 36. திருப்புக்கொளியூர் அந்தணாளர் மனைவியார்

திருப்புக்கொளியூர் அவிநாசிப் பதியிலே சிவமறையோர் தெருவிலே ஐந்தாண்டு வந்த பிராயத்தினர்களாக இரண்டு சிறுவர்கள் இருந்தார்கள். அவர்கள் இருவரும் சேர்ந்து அருகில் உள்ள மடுவிற் குளிக்கச் சென்றார்கள். அவர்களுள் ஒரு சிறுவனை முதலை இழுத்துப்போய் விழுங்கிவிட்டது. ஒருவன் பிழைத்து வந்தான். இவ்விருவரின் மனைகள் அத் தெருவிலே எதிரெதிர் இருந்தன. மூன்றாண்டுகள் கழிந்தன. பிழைத்துவந்த சிறுவனுக்கு உபநயனம் செய்தார்கள். மகனை இழந்த தாய் தனது மகனும் இருந்தால் உபநயனம் செய்யலாமே என்று அவனை நினைந்து துக்க மேலீட்டினால் அழுதுகொண்டிருந்தாள். எதிர்மனையில் மங்கலங்களின் ஒலிகள் முழங்கின. அப்போது சுந்தரமூர்த்தி நாயனார் அந்தத் தெரு வழியே வந்துகொண்டிருந்தார். மங்கலமும் அமங்கலமுமான இரண்டு ஒலிகளும் ஒருங்கே நிகழ்வது கண்டு அங்குள்ளவர்களை வினவினார். அவர்கள் நிகழ்ந்ததைச் சொல்ல அறிந்து இரக்கப்பட்டார். இதற்குள் இவர் வந்த செய்தி அவ்வந்தணாளனுக்கு எட்டியது. அவன் மனைவியோடும் தமது துக்கத்தை மறந்து மலர்ந்த முகத்துடன் எதிரில் வந்து சுந்தரமூர்த்திகளை வணங்கினன். அவர், "மைந்தனை இழந்தவர்கள் நீங்களோ?" என்று கேட்டனர். அதற்கு அவர்கள், " அது முன்னே நிகழ்ந்து போயிற்று; அது கிடக்க ; நீண்டகாலம் தேவரீரை வணங்க ஆவல் கொண்டிருந்தோம். எங்கள் அன்பு பழுதாகாமல் எழுந்தருளப் பெற்றோம் " என்று மகிழ்ந்து வணங்கினார்கள். சுந்தரமூர்த்திகள் " மைந்தனை இழந்த துக்கத்தையும் மறந்து நான் வந்தணைந்ததற்கே மறையவனும் மனைவி

யும் மகிழ்ந்தனர் ; இவர்களது மகனை அழைத்துக் கொடுத்த பின்னரே அவிநாசியப்பர் பாதம் சென்று தொழுவேன் " என்று சொல்லி, " அந்த மடு எங்கே ?" என்று வினவித் தெளிந்து அங்குச் சென்றணைந்து அருளினர். கரையில் நின்றபடியே பதிகம் பாடினர். அதனுள் 4-வது " உரைப்பார் உரை " என்ற பாட்டு முடியாமுன்பே மடுநிறைய நீர்வர, அதனுள் முதலை வர, அதன் வயிற்றுள் மகவு வர, மகவுக்கு மூவாண்டும் வர, முதலை கொண்டு வந்து மகனைக் கரையில் உமிழ்ந்தது. மகனைக் கண்டதும் உருகாநின்ற தாய் ஓடி எடுத்துக் கொண்டு வந்து உயிர் அளித்த நாயனர் பாதங்களில் மறையவனுடனே வீழ்ந்து வணங்கினள். சுந்தரமூர்த்திகள் திருக்கோயிலுக்குச் சென்று பதிகம் நிறைவு செய்து மகனுக்கு உபநயனமும் செய்வித்து மகிழ்ந்தருளினர்.

இச்சரிதத்தை இந்நாளில் பலர் நம்ப மாட்டார்கள். ஆனால் இது நம்பிகளது தேவார உள்ளுறை சான்றினல் ஆதாரம் பெறுகின்றது. இயற்கையின் விசித்திரங்களையும் இறைவரருள் எல்லாம் செய்ய வல்லது என்பதையும் உணர்ந்தவர்கள் இதை நம்புவதில் தடையில்லை.

துக்கம் வந்தபோது அதிலே அமிழ்ந்துவிடாது பெரியோர்களை வணங்கி வழிப்பட்டால் நன்மையுண்டு. " ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும் மாண்டார் வருவரோ மாநிலத்தீர் "* என்பது உண்மையான பழமொழிதான். ஆனல் அதுவும் சில சந்தர்ப்பங்களில் பொய்த்துவிடும் என்பது இதனலறியப்படும்.

---

*நல்வழி-10.

# 37 நானிலத்து நங்கையர்

இனி இதுவரையும் சேக்கிழார் பெருமான் எடுத்துக் கூறிய வரலாறுகளில் தனித்தனி தாய்மார்களாகவும், உடன்பிறந்தோராகவும், மனைவியர்களாகவும், மக்களாகவும், பணிப்பெண்களாகவும் வந்த சேயிழையார்களைப் பற்றிப் பேசினோம். அவ்வச் சேயிழையார்களின் வரலாறுகள் அவ்வந் நாயன்மார்களின் வரலாறுகளோடு விரவி இணைந்து நின்றபடியால் கூடியவரையில் சேயிழையார் வரலாறுகளைப் பிரித்துத் தனியே எடுத்துக் காட்டி வரலாறுகளையும் பண்புகளையும் சிறப்புக்களையும் தனியே எடுத்துப் பேசினோம்.

இனி வரலாறுகளையன்றியே பெண்ணினத்தின் பண்புகளையும் குணாதிசயங்களையும் ஆசிரியர் சேக்கிழார் எவ்வாறு விரித்துக் காட்டியுள்ளார் என்பது பற்றிச் சில வற்றைப் பேசும் வகையால் சிற்சில உதாரணங்கள் காட்டிப் பேச நினைக்கிறோம்.

குறிஞ்சிமுதலாக வரும் நானிலங்களிலும், ஐந்திணைகளிலும் அங்கங்கும் பெண்ணினம் பேசப்படுகின்றது. அங்கங்கும் உள்ள சேயிழையார்களின் தொகுதிகள், குணவிசேடங்கள், ஆடல் பாடல்கள், தொழில்கள், கூட்டுறவு என்பவை முதலாகப் பேசப்படுகின்றன.

இப் புராணத்துக்குரிய நாடு மருதத்தின் பாற்படும். புனல்பரந்த வயல்களில் நெல் நாற்று நட்டபின் முதல், நீண்டு சுருள் விரியும் பருவத்தைக் கண்டு உழவர்கள் பதங்காட்டக் கடைசியர்கள் களைகளைக் களைகின்றார்கள். அவர்கள் வயலில்கிடந்து விளைந்த முத்துக்

கடைசியரும் அவர்கள் மகளிர்களும்

களிலும் சங்குகளிலும் இடறி இடைதளர்ந்து அசைந்து அயர்வார்களாய், மடநடையினராய் வரம்புகளிற் சேர்வார்கள்; செங்குவளை பறித்தணிவார்கள். தாமரை மலர்களில் உள்ள புதுத்தேனை வாய்மடுத் துண்பார்கள்.

கடைசியர்கள் இவ்வாறு தொழில் செய்யும்போது அவர்களுடனிருந்த சிறுமகளிர் ஊன் கழிந்த வாய்விரிந்த சங்குகளில் மலர்களில் ஊறும் தேனை உலைப்பெய்து ஆமையோடுகளை அடுப்பாகக்கொண்டு அவற்றில் ஏற்றிச் செவ்வாம்பல் மலர்களைத் தீமூட்டி அடுப்பூதி வரம்புகளில் விளையாடுவார்கள்.

குன்றவர் மகளிர்

மலையில் வேடர் சேரியில் உள்ள சிறுமியர் அன்போடு கூடவந்து அணையும் பெட்டை மான்களோடும், மான் கன்றுகளுடனும் விளையாடுவார்கள். வரிய சிறு தோலின் மேல் மருதமர நிழலில் உழத்தி மகவை உறங்கவைப்பாள். கடைசியர் நெற் கதிர்களைத் தலையில் சூடிக்கொண்டு கள்ளுண்டு களிகூர்வர். அவர்கள் பாடிக்கொண்டு நெல் குத்துவார்கள்.

பரத்தியர்

நெய்தல் நிலத்தில் முத்துக்களைப் பரப்பி வெயிலிற் காயவைப்பார்கள். அவர்கள் பேருணவாக மீனுண்பார்கள். அவர்கள் செருந்தி மலர்களைத் தொடுத்தணிகுவர். முத்துக்களை அளந்து விற்பர். கழிக்கயல்களை விற்பரேயன்றி விழிக்கயல்களை விற்கார். அதாவது அவர்கள் விழிகள் புறம்போம் விற்பனைப் பண்டங்களாக்காதபடிக் கற்புடைப் பெண்டிர்க

ளாய்க் காப்பர். கானத்தில் விளையும் அவரை ஏனலுக்குப் பண்ட மாற்றாகப் பவளங்களையும் முத்துக்களையும் அளப்பர்.

பெண்கள் பூம்பாசடை நீர்த்தடமூழ்கி வருவார்கள். பொற்குழை யசையப் பூந்தாளை பின் போக்கி வேதிகளை மெழுகிக் கோலமிடு வார்கள். வடமீன்போன்ற கற்புடையவர் கள். சிறுர்கள் விளையாட்டுப் பண்ணை களில் வேள்விச் சடங்குகளை வகுத்துக் கிண்கிணி ஒலிப்ப ஆடுவர். பெண்கள் தம் கணவர்களுக்கு வேள்விகளுக் காவனவற்றை விரும்பிச் செய்குவர். சிறுமியர் இறைவ ரது தன்மைகளைப் பாடிக்கொண்டு கழலும் பந்தும் அம்மானையும் விளையாடுவர்.

மறையவர் மகளிரும் மகார்களும்

---

## முடிவு

ஆசிரியர் சேக்கிழார் தமது பெரியபுராணத்துள் உண்மை நாயன்மார்களின் சரிதங்களைப் பெருமை பிறங் கப் பேசியுள்ள திறம் உலகமறிந்த தொன்று. அச் சரிதங்களிற் பங்குகொண்ட சேயிழையார்களின் திறங் களைப் பாராட்ட வேண்டுவதவசியம். அதற்காக அவர் கள் வரலாறுகளையும், பண்புகளையும், குறைமேம்பாடுகளை யும் நாயன்மார்கள் சரிதங்களினின்றும் பிரித்துத் தனித் தனியாய் எடுத்துப் பேசுவது இந்த நூலின் நோக்கம். அப்போதுதான் பெண்மையுலகின் பெருமைகள் விளங் கும். பல நாயன்மார்களின் சரித விளைவுகளுக்குச்

சேயிழையார்கள் பெருந்துணை செய்துள்ளார்கள். தம் கணவர்பாலும், உலகமக்கள்பாலும் இறைவர்பாலும் இணையற்ற அன்புகொண்டு அருஞ் செயல்கள் செய்துள்ளார்கள். இவை யெல்லாம் கண்டு பாராட்டி உலகம் உய்வதாக.

என்று மின்பம் பெருகு மியல்பினல்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்.

*முற்றிற்று*



# பாட்டு முதற் குறிப்பகராதி

